# கிருஷ்ண யஜுர்வேத மந்த்ரங்கள்

## ஆராய்ச்சிப் பொழிப்புரை

23.01.13

பாரத்வாஜ. பாலசுப்ரமண்ய சர்மா




**எல் கே எம் பப்ளிகேஷன்**
பழைய எண்.15/4, புதிய எண்.33/4, ராமநாதன் தெரு,
தியாகராய நகர், சென்னை – 600 017.
தொலைபேசி : 24361141

முதற் பதிப்பு : அக்டோபர், 2008

விலை : ரூ.80-00

| | | | |
|---|---|---|---|
| ❋ | TITLE | : | KRISHNA YAJURVEDA MANTHRANGAL AARAICHIP POZHIPPURAI |
| ❋ | AUTHOR | : | BHARADWAJA. BALASUBRAMANYA SHARMA |
| ❋ | LANGUAGE | : | TAMIL |
| ❋ | EDITION | : | FIRST EDITION, OCTOBER 2008 |
| ❋ | PAGES | : | 208 |
| ❋ | PUBLISHED BY | : | LKM PUBLICATION<br>Old No.15/4, New No.33/4,<br>Ramanathan Street,<br>Thyagaraya Nagar,<br>CHENNAI - 600 017. |
| ❋ | PRICE | : | Rs.80-00 |

Laser Typeset at : LKM Computer Printers, Chennai - 17
Printed at : Noveno Offset Printing Co., Chennai - 5.

# சமர்ப்பணம்

என் வாழ்க்கையில் வழிகாட்டிகளாக விளங்கிய காலம் சென்ற பெற்றோர், உற்றோர் நினைவாக இந்த நூலை சமர்ப்பிக்கிறேன்.

❖ *தாய்வழிப் பாட்டனார்*

ஸ்ரீ எல்.எஸ். வெங்கடரமண அய்யர்

❖ *தாய்வழிப் பாட்டி*

ஸ்ரீமதி குப்பம்மாள்

❖ *தந்தை*

ஸ்ரீ சி.எஸ். ராமகிருஷ்ண அய்யர்

❖ *தாய்*

ஸ்ரீமதி மீனாக்ஷி அம்மாள்

❖ *தந்தை வழி பெரியப்பா*

ஸ்ரீ சி.எஸ். குப்புசாமி அய்யர்

❖ *தந்தை வழி பெரியம்மா*

ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள்

❖ *தாய்வழி பெரியம்மா*

ஸ்ரீமதி ராஜலட்சுமி அம்மாள்

❖ *தாய்வழி பெரியப்பா*

ஸ்ரீ டி.எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர்

❖ *மாமனார்*

ஸ்ரீ எஸ்.ஆர். வெங்கடசுப்ப அய்யர்



# முன்னுரை

இந்த நூல் விஞ்ஞானப் படிப்பை அடிப்படையாகக் கொண்ட, பாரத்வாஜ கோத்ரத்தில் பிறந்த, ஒரு இக்கால ஹிந்து அறிந்துகொண்ட கருத்துகள் ஆகும்.

இந்த முயற்சிக்கு என் தாய்வழிப் பாட்டனாரின் முருகன், சிவபஞ்சாயதன பூஜா அனுஷ்டானங்களும், வேதம், புராணம், திருப்புகழ் முதலியவற்றில் அவர் என்னுள் வளர்த்த ஆர்வமுமே அடிப்படையாக அமைந்தன. வேதங்களின் உண்மை பற்றிய மஹான் அரவிந்தரின் கட்டுரைகள் ஆர்வத்தை மேலும் வலுப் படுத்தின.

உபநிஷத்துகள், அவற்றின் பெரும்பாலும் கோர்வையான கருத்துகள் மூலம் விஞ்ஞானக் கல்வி உடையவர்களை எளிதில் ஈர்க்கின்றன. இவற்றிற்கு வேறுபடும் சித்தாந்தங்களை ஒட்டியவாறு மஹான்கள் பல பாஷ்யங்களை அருளியுள்ளனர். முன்தீர்மானமின்றி ரிஷிகளின் கருத்தை ஆராய ஆவல்கொண்டு சிலவற்றை ஆராய்ந்து பயனடைந்தேன்.

யக்ஞங்களை ஒட்டிய விளக்கங்களைச் சிலவற்றை படித்தபின் சம்ஹிதை மந்த்ரங்களின் கோர்வையான உட்பொருள் அறிவது கடினம் எனத் தோன்றியது. தற்செயலாக ஒரு நாள் ஔபாசன மந்த்ரங்களை படித்த பொழுது அவை ஒரு வலிமையான கருத்தை போதிக்கின்றன என மனதில் பட்டது. மேலும் ஔபாசன கர்மாவை ஆராய்ந்தபோது சிருஷ்டி தத்துவத்தை காலையிலும், மாலையிலும் தியானம் செய்ய ஒரு எளிமையான வழி என்பதை அறிந்து வியப்புற்றேன்.

இந்த் அனுபவத்தின் பிறகு தைத்ரீய சம்ஹிதையின் முதல் நான்கு பிரஸ்னங்களையும் ஆராய்ந்து ஞானத்தை யும் நல்வாழ்வையும் அடைய இவை செயல்வழி என்பதை அறிந்தேன். ஆயினும் ஐந்தாவது பிரஸ்னம், பிராஹ்மணம் என்ற கதைகள், விளக்கங்கள் கூடிய பகுதியாதலாலும்,

சாரமில்லா சிறுபிள்ளைக் கதைகள் போல் தோன்றிய தாலும், சில அறிஞர்களின் கூற்றுப்படி இவை பிற்கால இடைச்செருகல்கள் என எண்ணியிருந்தேன். இந்த கருத்தை அமெரிக்காவில் வாழும் என் மூத்த மகன் ராமகிருஷ்ணனிடம் பகிர்ந்துகொண்டபொழுது, அவன் அதை வலிமையாக நிராகரித்து என்னை மேலும் ஆராயத் தூண்டினான். ஆகவே ஐந்தாவது பிரஸ்னத்தின் முதல் நான்கு அனுவாகங்களையும் கோர்வையான கருத்து உள்ளவை என்றால் இதன் பொருள் என்ன என்று ஆராய்ந்ததில், இந்த நான்கு அனுவாகங்கள் புராண தத்துவம், அவதார தத்துவம் அனைத்துக்கும் அடிப்படை யானது என்பது ரிஷியின் அருளால் புலப்பட்டது. கதை ஒரு சங்கேத மொழி என்பது புரிந்தது. இது உபநிஷத், சம்ஹிதை மந்த்ரங்களைவிட மிக முக்யமான பகுதி என்று இப்பொழுது கருதுகிறேன். ஆகவே வேதத்தின் எல்லா பகுதிகளும் ஞானத்தைக் குறித்தே உள்ளன என்பதை இந்த சிறு ஆராய்ச்சியால் நன்கு உணர முடிந்தது.

ருத்ரம், புருஷ சூக்தம், உதகசாந்தி மந்த்ரங்கள், இந்த அடிப்படையிலேயே ஆராயப்பட்டு பொழிப்புரை வழங்கப்பட்டுள்ளது. ருத்ரம், புருஷ சூக்தம் மிக ப்ரசித்தமாகக் கையாளப்படுவதாலும் வேத சிக்ஷை இல்லாத பலர் இவற்றைக் கேட்பதாலும் படிப்பதாலும், அவர்களின் சௌகர்யத்திற்காக இவற்றிற்கு மந்த்ரங்களை யும் முழுமையாகத் தமிழில் கொடுக்கப்பட்டுள்ளது.

எனது எழுத்துகளை வெளியிடவேண்டும் என்று யோசனை கூறிவரும் என் மகள் கல்பனாவின் விருப்பத்துக் கிணங்கி இந்த முயற்சி நூல் வடிவமாக வெளிவருகிறது.

இந்த நூலை எழுதி வெளியிடும் பணியில் ஆக்கமும் ஊக்கமும் அளித்த என் மனைவி நிர்மலாவின் பங்கு மிகப் பெரிதாகும். இந்த நூலை சிறந்த முறையில் வெளியிட்ட ஸ்ரீ கார்த்திகேயன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# பொருளடக்கம்





## இந்த கருத்துரைக்காக உதவிய நூல்கள்


*1) கிருஷ்ண யஜுர்வேத தைத்ரீய சம்ஹிதை மூலம், ஆங்கில பாஷ்யம். ஆசிரியர், ஆர். எல். காஷ்யப். பிரசுரித்தவர். ஸ்ரீ அரவிந்தோ கபாலி சாஸ்திரி இன்ஸ்டிடியூட் ஆஃப் வேதிக் கல்ச்சர், பெங்களூரு. 2002.*

*2) தைத்திரீய சம்ஹிதை. பட்டபாஸ்கரமிஸ்ர பாஷ்யம். பிரசுரகர்த்தா. மோதிலால் பனாரசிதாஸ் வாரணாசி. 1986.*

*3) வைதிக் கோஷ் பாகம் 1, 2, 3, ஆசிரியர் பம். சந்த்ர சேகர உபாத்யாய பிரசுரகர்த்தா : நாக் பிரகாசக், தில்லி. 1995.*

*4) சம்ஸ்கிருத் – இங்கிலீஷ் டிக்ஷ்னரி ஆசிரியர் : சர். மோனியர் மோனியர் – வில்லியம்ஸ் பிரசுரகர்த்தா : மோதிலால் பனாரசிதாஸ் வாரணாசி 1997.*

ஓம் பரமாத்மனே நம:

ஸ்ரீகுருப்யோ நம: ஹரி: ஓம்

# கிருஷ்ண யஜுர்வேத தைத்ரீய சம்ஹிதை

## பிரஸ்னம் 1 – பிரகிருதி யக்ஞம்

*1. வேதம் என்பதன் பொருள் 'அறிவு'. மனித வாழ்வு எந்த அடிப்படையில் அமைந்துள்ளது? மனிதன் எவ்வாறு வாழ்ந்தால் உண்மை அறிவையும், ஆனந்தத்தையும் அடைய இயலும்? இந்த கேள்விகளுக்குப் பதிலே ரிஷிகளால் காணப்பட்ட வேத மந்த்ரங்கள்.*

*2. சிருஷ்டிக்கு அடிப்படையான மூலம், அதன் பரிணாமங்கள், மனித சிருஷ்டி இவை அனைத்தும் இந்த வேத மந்த்ரங்களால் இணைக்கப்பட்டுள்ளன. வேத மந்த்ரங்கள் உதவியால் நாம், தேவர்கள் விரும்பும் ஹவ்யரூபமடைந்து மூலம் வரை செல்ல இயலும்.*

*3. மந்த்ரங்கள் யஜமானனை ஹவ்யரூபமாக மூலம் வரை கொண்டு சென்று ஒவ்வொரு நிலையிலும் உள்ள ராக்ஷச, தீய சக்திகளை அகற்றி, மீண்டும் புனிதமடைந்த மனத்துடன் மனித உலகில் அக்னி வழிபாடு செய்விப்பது. அதன் பயனாக அறிவு விரிவடைவது. இதுவே குறிக்கோள்.*

*4. இந்த உண்மை அறிவு ஒரு முறை மந்த்ரத்தை கூறி அடையும் பொருளல்ல. ஒழுங்குமுறையோடு திரும்பத் திரும்ப தியானம் செய்வதாலேயே அடையப்படுகிறது.*

*5. உயர்ந்த நூல்களை அறிவதற்கும் அரிச்சுவடியே ஆரம்பம் போல், வேத அறிவைப் பெறுவது யக்ஞம் என்று சாதாரணமாக அறியப்படும் அக்னி வழிபாட்டில் ஆரம்பிக்கிறது. சரீர ஒழுக்கம், செயல் ஒழுக்கம் மன ஒழுக்கம் இந்த அக்னி வழிபாட்டிற்கு அடித்தளம்.*

*6. பலவிதமான ஒழுங்குமுறைகளுடன் செய்யப்படும் பஞ்சாயதன பூஜையின் உள்நோக்கம் "இந்த சிருஷ்டி*

அனைத்துமே நம் உள்ளே அமர்ந்திருக்கும் பகவான்" என்று அறிவதே ஆகும். அவ்வாறே பலவிதமான ஒழுங்கு முறைகளுடன் செய்யப்படும் அக்னி வழிபாடுகளும், உண்மை அறிவை அடைவதே நோக்கமாகக் கொண்டுள்ளன. ஆகவே பஞ்சாயதன பூஜையாயினும், அக்னி வழிபாடாயினும் வெளிப்படையாகச் செய்யும் கிரியைகள் மட்டுமே பூஜை அல்லது யக்ஞம் எனக் கருதுவது தவறு. வெளிப்படையான கிரியைகள் செய்ய இயலாதபோதும் சிரத்தையோடு செய்யப்படும் மானசபூஜையும் ஸ்வாத்யாய யக்ஞமும் நோக்கத்தைக் குறித்தே, மனிதனை அழைத்துச் செல்கின்றன.

7. கூரிய அறிவு இல்லாத யஜமானனையும் சிறந்த முறையில் யக்ஞ வழிபாட்டினால் கிருஷ்ண யஜுர்வேதம் ஞானத்தை அடையச் செய்கிறது.

8. கிருஷ்ண யஜுர்வேத தைத்ரீய சம்ஹிதையின் முதல் பிரஸ்னம் "பிரகிருதி யக்ஞம்" அல்லது "முன்னோடி அக்னி வழிபாடு" எனப்படுகிறது. பலவகை யக்ஞங்களும் பொதுவாக இதில் அடங்கும். இந்த முதல் பிரஸ்னத்தின் குறிக்கோளையும் அனுவாகங்களின் கருத்துகளையும் இப்போது ஆராய்வோம்.

**குறிக்கோள்:** யஜமானனிடம் உறையும் அசுர சக்திகளை அடக்கி, தேவ சக்திகளை ஓங்குவித்து, வாழ்க்கையை தேவ வழியில் நடத்தும் அறிவை படிப்படியே வளர்ப்பது.

**அனுவாகம் – கருத்து உரை:**

வேத மந்த்ரங்களை ரிஷி ஞானக் கண்ணினால் பல நிலைகளில் கண்டு, அதை மனிதர்களிடம் வழக்குள்ள மொழியில், மனிதர்களுக்குப் புரியும் உலக செயல் வழக்கங்களை ஒட்டி தமது அளவில்லாக் கருணையால் அருளுகிறார். மனிதர்களிடம் வழக்குள்ள மொழி போன்று தோன்றினாலும் இவை அந்தந்த நிலையில் உள்ள தேவதைகள் அறியும் மந்த்ர பீஜங்களை உள் அடக்கியவை.

ரிஷியின் மொழிவினைச் சொல்லை ஒட்டி சகுணபிரம்மன் (அ) ஆத்மா என்ற "நான்" என்ற நிலையிலும், தேவர்கள் அல்லது மனிதர்கள் என்ற "நாம்"

என்ற நிலையிலும், யஜமானன் என்ற "நான்" என்ற நிலையிலும் கண்டதை மொழிகிறார். உதாரணமாக சவித்ருதேவன், ருத்ரன், விஷ்ணு, அக்னி முதலிய தேவர்களுக்கு கட்டளையிடும் வினைச்சொற்கள் சகுணப் பிரம்மம் (அ) "அஹம்" என்ற "நான்". துதிக்கிறேன், பிரார்த்திக்கிறேன் போன்ற வினைச் சொற்கள் யஜமானன் (அ) அஹம் (அ) நான். கருத்துரையில் இது வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளது.

## அனுவாகம் 1

"இஷேத்வோர்ஜேத்வா...பசூன் பாஹி"

**மொழிபவர்:** சகுணப் பிரம்மம் (எ) அஹம் (எ) நான்

ஜீவராசிகளிடமும், ஜீவராசிகள் உடன் உறையும் சக்திகளிடமும் குடிகொண்டுள்ள அன்னமே, வளர்விக்கும் சக்தியே, உங்களை சவித்ருதேவன் மிகச் சிறந்த செயல்களில் அர்ப்பணிக்கட்டும். வளர்விக்கும், ஊட்டம் அளிக்கும், சுற்றங்களை அளிக்கும் நோயற்ற நீங்கள் தேவ சக்திகளை செழிக்கச் செய்யுங்கள். உங்களை ராக்ஷச சக்திகளும், தீய எண்ணங்களும் ஆட்சி புரியாமல் இருக்கட்டும். ருத்ரனின் ஆயுதங்கள் உங்களிடமிருந்து விலகிச் செல்லட்டும் யஜமானனின் புத்தியில் உறுதியாக இருந்து, அவனுடைய பல்வேறு அறிவுகளைக் காப்பாற்றுவீராக.

## அனுவாகம் 2

"யக்ஞஸ்ய கோஷதசி....தேவங்கமமசி"

**மொழிபவர்:** எல்லா நிலைகளையும் காணும் ரிஷி. யக்ஞத்தின் கோஷமாக உள்ளாய். ராக்ஷசர்கள் எரிக்கப் படட்டும். தீய எண்ணங்கள் எரிக்கப்படட்டும். அறிவே உருவாகிய நீ கணுக்களுடன் கூடிய புற்கூட்டம் போன்ற மந்த்ர கோஷங்களை அடைவாயாக. எண்ணத்தில் செய்யப்பட்ட ஸ்வய ஆதாரத்தில் வடிவு கொண்டவளே, உன்னை முன்னே பிரத்யக்ஷமாகக் காணும் ரிஷிகள் தாங்கிச் செல்கின்றனர். தேவர்களுக்குப் பிரியமானவளும் இங்கு மந்த்ரங்களில் (புற்கூட்டம்) உறைபவளும் ஆன நீ தேவர்களுக்காக அடையப்பட்டவள், அறிவு மழை (வைகரீவாக்) பொழிபவள். தேவமந்த்ரங்களாகிய உன்னை குறுக்கேயோ, நெடுகவோ ஸ்வர அக்ஷரச் சேதம் செய்து

துன்புறுத்தமாட்டேன். தவறில்லாமல் கையாளுவேன். தேவ மந்த்ரங்கள் நூற்றுக்கணக்கில் செழிக்கட்டும். ஆயிரக் கணக்கில் (அதை ஓதும்) நாங்களும் செழிக்கட்டும். பூமியின் சம்பந்தப்பட்ட எங்களைக் காப்பாற்று. நன்கு திரட்டப் பட்ட உன்னைத் திரட்டுகிறேன். அதிதியின் மேகலையாய் உள்ளாய். இந்த்ராணியாகிற மனோ சக்திகளால் தொகுக்கப்பட்டு, பூஷா உன்னை முடிபோட்டு அந்த மந்த்ர மாலை என்னிடம் இருக்கட்டும். இந்திரனின் (மனஸ்) கைகளால் உன்னை உயரே தூக்கி பிரஹஸ்பதி (புத்தி)யின் சிரஸால் கொண்டு செல்கிறேன். அகண்ட அந்தரிக்ஷத்தில் செல்வாயாக. தேவர்களிடம் செல்பவளாக உள்ளாய்.

## அனுவாகம் 3

**"சுந்தத்வம் தைவ்யாய...விஷ்ணோ ஹவ்யம் ரக்ஷஸ்வ"**

**மொழிபவர்:** சகுணப் பிரம்மம். (ஆபோ தேவதைகளான அதிதியே) தெய்வீக காரியமான தேவ யக்ஞத்திற்காக புனிதம் அடைவீர்களாக. அந்தரிக்ஷத்தில் வாயுவின் வெப்பமாய் (செயலாய்) உள்ளாய். வானமாக உள்ளாய். பூமியாக உள்ளாய். எல்லாவற்றையும் தாங்குபவளாக உள்ளாய். எல்லாவற்றிற்கும் மேலாய் உள்ள உன் இருப்பிடத்தினால் ஸ்தூலமான சிருஷ்டி ஆகுக. தடுமாறாதே. நூற்றுக்கணக்கான தாரைகளாக வசுக்களின் புனிதமாய் உள்ளாய். ஆயிரக்கணக்கான தாரைகளாக வசுக்களின் புனிதமாய் உள்ளாய். துளி சமர்ப்பிக்கப் பட்டது. துளிகள் சமர்ப்பிக்கப்பட்டன, பெரும் இன்பமே வடிவான அக்னிக்கு, வானம், பூமிகளுக்கு. அவள் (பூமி) எங்கும் ஜீவன். அவள் (அந்தரிக்ஷம்) எங்கும் பரந்துள்ளவள். அவள் (வானம்) எங்கும் செயல் புரிபவள். (ஆபோ தேவதைகளான அதிதியே) ஒழுங்குமுறைகள் செறிந்தவர் களே, அலையாய் வியாபிப்பவர்களே, ஆனந்த ரூபமானவர்களே தொடுவீர்களாக (தியாவா பிருதிவியை). வாழ்வு என்னும் செல்வத்தை அடைய சோமனால் உன்னை (பால் போன்ற த்யாவா பிருத்வியை) தயிருக்காக ("அக்னி-சோமர்"களான ஜீவராசிகள்) புரை ஊற்றுகிறேன். அதனால் இந்திரனுக்குப் பிரியமான தயிர் (அக்னி-சோமர்களான ஜீவராசிகள்) மூவுலகிலும் (உண்டாகட்டும்).

*விஷ்ணுவே ஹவ்யமாகிய தயிரை (அக்னி-சோமர்களான ஜீவராசிகளை) ரக்ஷிப்பாயாக.*

**அனுவாகம் 4**

**"கர்மணேவான் ... ஹவ்யம் ரக்ஷஸ்வ"**

**மொழிபவர்:** *ரிஷி பல்வேறு நிலையில். மனிதர்கள் சகுணப் பிரம்ம நிலைகளில்.*

*தேவர்களின் கர்மத்தில் உங்கள் இருவரையும் (அக்னீ-சோமர்-ஜீவன்) ஈடுபடுத்துகிறேன். (ஆஹவனீய) அக்னியே உன்னை வழித்துணைக்காக ஈடுபடுத்துகிறேன். ராக்ஷசர்கள் எரிக்கப்படட்டும் தீய எண்ணங்கள் எரிக்கப் படட்டும். ஹிம்சிப்பவனாக உள்ளாய். ஹிம்சிப்பவனை ஹிம்சிப்பாயாக. எங்களை ஹிம்சிப்பவன் எவனோ அவனை ஹிம்சி. எவனை நாங்கள் ஹிம்சிப்போமோ அவனை ஹிம்சி. நீ தேவர்களுடையவனாக உள்ளாய். சுத்தமானவன். அனைத்தும் நிறைந்தவன். தேவர்களுக்குப் பிரியமானவன், ஹவிஸ் கொண்டு செல்பவன், நேர்மை யானவன். இவை அனைத்திலும் சிறந்தவன். ஹவிர்தான மாகிய உன் இருப்பிடத்தை (ஜீவன்) உறுதிப்படுத்து. தயங் காதே. உன்னை நண்பனின் கண்களால் பார்க்கின்றேன். பயம் வேண்டாம். நடுக்கம் வேண்டாம். உன்னை நான் ஹிம்சிக்கமாட்டேன்.*

*சவித்ரு தேவனின் ஞானத்தை அடைவிக்கும் செயலில் அஸ்வினீ தேவர்களின் புஜங்களால், பூஷ்ணனின் கைகளால் (தேவ மந்த்ர பீஜங்களை) பிரியமான உன்னை (ஆஹவனீய) அக்னிக்கு உள், அக்னி-சோமர்களுக்கு (ஜீவன்) உள் விதைக்கிறேன்.*

*இது தேவர்களுடையதும், எங்களுடையதும் (ஜீவர்கள்) கூட. வளம் செழிப்பதற்காக. தீய பயன்களுக்காக அல்ல. சுவர்லோகத்தில் வைஸ்வானர அக்னியின் ஜோதியை முன் காண்கிறேன் (அந்த ஜோதியில்) தியாவா பிருதிவியின் எல்லைக் கதவுகள் உறுதியாகத் தெரியட்டும். (அந்த கதவுகள் வழியே) பரந்த அந்தரிக்ஷம் செல்கிறாய். அதிதியின் மடியில் உன்னை (அக்னி, அக்னி-சோமர்) அடைவிக்கிறேன்.*

*(ஆஹவனீய) அக்னியே ஹவ்யத்தை (அக்னீ-சோமர்) ரக்ஷிப்பாயாக.*

**அனுவாகம் 5**

**"தேவோவஸ் சவிதோ... பிரதிக்ருண்ஹாது"**

**மொழிபவர்:** *சகுணப் பிரம்மம்.*

*சவித்ரு தேவன் உங்களை (ஆபோதேவீகளை) சேதப்படாத புனிதமான சூர்யனின் செல்வ கிரணங் களால் மேல் எழுப்பி புனிதப்படுத்தட்டும். கர்மத்தின் முன்னே புனிதப்படுத்துபவர்கள், முன்னே செல்பவர்கள் ஆன ஆபோதேவிகளே இந்த யக்ஞத்தை முன்னிருந்து நடத்திச் செல்லுங்கள். யக்ஞத்தின் காவலனான ஆஹவனீய அக்னியை முன் தாங்குக. விருத்ரயுத்தத்தில் உங்களை இந்திரன் வேண்டினான். நீங்கள் இந்திரனை வேண்டினீர்கள். புரோக்ஷிக்கப்படுவீர்களாக (ஆஹவனீய) அக்னிக்கு, அக்னி-சோமர்களுக்கு (ஹவ்யம்). பிரியத்தைப் புரோக்ஷிக்கிறேன். புனிதப்படுத்துவீர்களாக தேவர்களின் கர்மத்திற்கு. ராக்ஷசர்கள் கீழ்நோக்கி உதறித் தள்ளப் பட்டனர். தீய சக்திகள் கீழ்நோக்கி உதறித்தள்ளப்பட்டனர்.*

*(வேத மந்த்ரமே) அதிதியின் தொட்டுணரும் சக்தியாய் (மத்யமா வாக்) உள்ளாய். முன்னே உன்னை அவ்வாறு பிருதிவீ (வைகரீ வாக்) அறியட்டும். சோமரசமாக (பஸ்யந்தீவாக்) உள்ளாய். முன்னே உன்னை அவ்வாறு அதிதியின் தொட்டுணரும் சக்தி (மத்யமா வாக்) அறியட்டும். அக்னியின் உடலாய் உள்ளாய் (மத்யமா வாக்). வாக்கு உன்னிடமிருந்து வெளிப்படுகிறது. தேவர்கள் இன்பம் பெற உன்னைக் கைக்கொள்கிறேன். சோமரசம் பிழியும் (பஸ்யந்தீ வாக்) கல்லாக உள்ளாய். இந்த தேவர்களின் ஹவிஸ்ஸை (அக்னி-சோமர் ஆகிய ஜீவன்) முயற்சியுடன் பக்குவப்படுத்துவாயாக. அன்னம் என்று (தேவர்களுக்கு) அறிவிப்பாயாக. ரசம் உள்ளது என்று அறிவிப்பாயாக.*

*நாங்கள் (தேவர்கள், அக்னி-சோமர்கள்) யுத்தத்தில் வெற்றி அடைவோமாக. (மத்யமா வாக்கே) அறிவு மழையாக உள்ளாய் உன்னை அறிவு மழை (வைகரீ வாக்) அறிவதாக. வெகு தொலைவாக ராக்ஷசர்கள்*

உதறப்பட்டனர். வெகு தொலைவாக தீய சக்திகள் உதறப் பட்டனர். ராக்ஷசர்களின் பாகமாக உள்ளாய் (மத்யமா வாக்). வாயு உங்களை (ராக்ஷச பாகங்களை) வேறு படுத்தட்டும். சவித்ரு தேவன் உங்களை (அக்னி, அக்னீ-சோமர்) தங்கக் கைகளால் எடுத்துக் கொள்ளட்டும்.

## அனுவாகம் 6

"அவதூதகும் ரக்ஷோ...பிரதிக்ருண்ஹாது"

**மொழிபவர்:** *சகுணப் பிரம்மம்*

*ராக்ஷசர்கள் உதறித் தள்ளப்பட்டனர். தீயசக்திகள் உதறித் தள்ளப்பட்டன. (வேத மந்த்ரமே) அதிதியின் தொட்டுணர்வு சக்தியாய் (மத்யமா வாக்) உள்ளாய். உன்னை பிருதிவீ (வைகரீ வாக்) அறியட்டும். வானத்தின் ஆதார ஸ்தம்பத்தின் உள் சக்தியாய் (பஸ்யந்தீ வாக்) உள்ளாய். அதிதியின் தொட்டுணர்வு சக்தி (மத்யமா வாக்) உன்னை அவ்வாறு அறியட்டும். ஞானமாக (பரா வாக்) இருக்கிறாய் (அறிவு) மலையினால். வானத்தின் ஆதாரஸ்தம்பத்தின் உள் சக்தி (பஸ்யந்தீ வாக்) உன்னை அவ்வாறு அறியட்டும். ஞானமாக இருக்கிறாய் அறிவு மலையின் சக்தி (பரா வாக்) அவ்வாறே அறிவு மலை (ஓம்) உன்னை அறியட்டும்.*

*சவித்ரு தேவனின் ஞானத்தை அடைவிக்கும் செயலில் அஸ்வினீ தேவர்களின் புஜங்களால், பூஷ்ணனின் கைகளால் (வேத மந்த்ர பீஜங்களை) மேலிருந்து விதைக்கிறேன். போஷிக்கும் தான்யமாக (வாழ்வாக) உள்ளாய். தேவர்களை மகிழ்விப்பாயாக. தேவர்களின் வாழ்வுக்காகவும், ஸ்வபாவத்திற்காகவும், சக்திகளுக் காகவும் (உன்னை தேவர்கள் அடையட்டும்). நீண்ட அலைபோன்ற ஆயுளில் (தேவர்களை) தாங்குகிறேன்.*

*சவித்ரு தேவன் உங்களை (அக்னி, அக்னீ-சோமர்) தங்கக் கைகளால் எடுத்துக் கொள்ளட்டும்.*

## அனுவாகம் 7

"த்ருஷ்டிரசி ... முஞ்சதாம்"

**மொழிபவர்:** *சகுணப் பிரம்மம்.*

*(வேத மந்த்ரஸ்வரூபமான ஆஹவனீய) அக்னியே (தீய சக்திகளை) வெற்றிகொள்வதில் வல்லவனாக உள்ளாய். ஞானத்தைக் கொடு. பக்குவமில்லாதவற்றை கிரகிக்கும் அக்னியை அழிப்பாயாக. உடலை விரும்பும் அக்னியை விரட்டி அடி. தேவர்களைக் குறித்து யக்ஞம் செய்யும் அக்னியை சுமந்து வா. (மனதின்) உள்ளே எரிக்கப்பட்டனர் ராக்ஷசர்கள். உள்ளே எரிக்கப்பட்டனர் தீய சக்திகள். நிலையாக உள்ளாய். பிருதிவியை (சரீரத்தை) உறுதிப் படுத்து. ஆயுளை உறுதிப்படுத்து. பிரஜைகளை உறுதிப் படுத்து. உடன்பிறப்புகளை (சரீரத்திற்கு வேண்டிய சக்திகளை) இந்த யஜமான்னுக்கு சுற்றிலும் குவிப்பாயாக. தாங்குபவனாக உள்ளாய். அந்தரிக்ஷத்தை, செயலை உறுதிப்படுத்து. பிராணனை உறுதிப்படுத்து. அபானனை உறுதிப்படுத்து. (செயல்களுக்கு வேண்டிய) உடன் பிறப்புகளை, இந்த யஜமானனை சுற்றிலும் குவிப்பாயாக. தாங்குபவனாக உள்ளாய். வானத்தை (மனதை) உறுதிப்படுத்து. பார்வையை உறுதிப்படுத்து. கேட்கும் சக்தியை உறுதிப்படுத்து. (மனத்துக்கு வேண்டிய) உடன் பிறப்புகளை யஜமானனைச் சுற்றிக் குவிப்பாயாக. தர்மமாக உள்ளாய். திசைகளை (புத்தியை) உறுதிப்படுத்து. மூலத்தை உறுதிப்படுத்து. பிரஜைகளை உறுதிப்படுத்து. உடன் பிறப்புகளை (புத்திக்கு வேண்டிய சக்திகள்) யஜமானனைச் சுற்றிலும் குவிப்பாயாக. (உடல், செயல், மனம், புத்தி ஆகிய) அடுக்குகளில் நிற்பவனே பிருகுக்களின், அங்கிரஸ்களின் தபஸால், தபஸ் புரியச் செய்யுங்கள். எந்த வெப்பத்தில் யக்ஞத்தை அறிந்தவர்கள் (பார்வை, கேள்வி, மனம், புத்தி கபாலங்களை பலப்படுத்துகின்றனரோ (அதில் தபஸ் செய்யட்டும்) பூஷ்ணனும் அந்த உறுதிப்படுத்தும் விரதத்தில் துணைபுரியட்டும். இந்திரன் (மனம்) வாயு (செயல்), (இந்த அக்னீ-சோமர் ரூபமான யஜமானனை) விட்டு விலகவும்.*

## அனுவாகம் 8

**"சம்வபாமி ... த்ரிதாயஸ்வாஹா"**

**மொழிபவர்:** *சகுணப் பிரம்மம்.*

*முற்றிலுமாக நன்கு (மந்த்ர பீஜங்களை) விதைக்கிறேன்*

*(ஆஹவனீய அக்னி பர வாக் ரூபமாகவும், இந்த்ர வாயுக்கள் விலகிவிட்டதால், அக்னீ-சோமர்கள் ஹவ்ய ஸ்வரூபத்திலிருந்து ஆபோதேவிகளின் பாகமாக, ஆபோ தேவிகளில் உள்ளனர்) ஆபோதேவிகள் (சமுத்ரமாகிய) அதிதியிடம் செல்லட்டும். ஓஷதிகள் ரசத்தினால் செல்வங்கள் நற்செயல்களால் இனிமையானவை இனிமையானவற்றால் நன்கு சிருஷ்டிக்கப்படுவீர்களாக. (சமுத்ரமாகிய) அதிதி சுற்றிலும் (உள்ள அனைத்துமாக) உண்டானவர்கள். அதிதி உங்களை நன்கு தொடட்டும். (அக்னி - சோமர்), (ஆஹவனீய அக்னி) ஜனனத்திற்காக உன்னை (ஆபோதேவிகள்) நன்கு கலக்கிறேன். (அதிதியே) யக்ஞத்தின் சிரஸ் ஆக உள்ளாய். எல்லாவற்றின் ஆயுள் (ஜீவன்) ஆன நீ விரிந்து படர்வாயாக. உன்னை யக்ஞபதி யான அக்னி விரிந்து படரச் செய்வானாக (அக்னி-சோமர் ஆன ஜீவனே, மீண்டும் உரு அடைவதற்காக) தோல் போர்த்த ரூபத்தை கொள்வாயாக. உங்களிடம் அதி சூஷ்மமாக குடிகொண்டிருந்த ராக்ஷச சக்திகளும், தீய சக்திகளும் அதிதியின் உள் மறைந்து போனார்கள். தேவனாகிய சவிதா மிகவும் உயர்ந்ததாக உள்ள அதிநாக சுவர்க்கத்தில் அக்னியால் உங்களை நன்கு பக்குவப் படுத்துவாராக. அக்னி உன்னுடைய ரூபம் கொண்ட உடலை மிகவும் எரித்துவிடாமல் இருப்பாராக. (ஆஹவனீய) அக்னியே, ஹவ்யத்தை (ரூபமுள்ள அக்னீ-சோமர்களான ஜீவனை) காப்பாற்றுவாயாக. ஹவ்யத்தை முதல் நிலையில் (சுஷுப்தி உலகில்) அர்ப்பணிக்கிறேன். இரண்டாவது நிலையில் (ஸ்வப்ன உலகில்) அர்ப்பணிக்கிறேன். மூன்றாவது நிலையில் (விழிப்பு உலகில்) அர்ப்பணிக்கிறேன்.*

**அனுவாகம் 9**

**“ஆதத ... அனுத்ருஸ்ய யஜந்தே”**

**மொழிபவர்:** *ரிஷி.*

*(அதிதிதேவியே) ஸ்வீகரிக்கின்றேன். இந்திரனுடைய ஆயிரக்கணக்கான ஆயுதங்களை ஏந்தும் திறமை வாய்ந்த புஜமாக உள்ளாய். ஒளிகள் படைத்த வாயுவாக உள்ளாய். தேவயஜனம் செய்யும் பிருதிவி உன்னுடைய ஓஷதிகள்.*

(அனைத்தின்) மூலமாகிய (அதிதியே) உன்னை நான் ஹிம்சிக்கமாட்டேன். தீயசக்திகள் கீழே ஆழ்த்தப்பட்டனர். பிருதிவிக்காக சந்தஸ்களின் ஸ்தானமாகிய கோட்டத்திற்கு செல். வானம் உனக்கு (வேத மந்திரங்களை) வர்ஷிக்கட்டும். சவித்ரு தேவனே, பரத்தின் பரத்தில் நூற்றுக்கணக்கான பாசங்களால் யார் (தேவ மார்க்கத்தில் செல்லும்) எங்களை வெறுக்கிறாரோ. (அசுர சக்திகளான) எவரை நாங்கள் வெறுக்கிறோமோ அவரைக் கட்டுவாயாக. அவனை பின்விடுவிக்க வேண்டாம். தேவயஜனம் செய்யும் பிருதிவிக்காக, தேவயஜனம் செய்யாத தீயசக்திகள் கீழே ஆழ்த்தப்பட்டனர். வானத்தை (மனத்தை) தீயசக்திகள் அடையவேண்டாம். கோட்டத்தில் உள்ள வசுக்கள் காயத்ரீ சந்தஸால் உன்னை (அதிதியை) பற்றிக் கொள்ளட்டும். ருத்ரர்கள் திருஷ்டுப் சந்தஸாலும், ஆதித்யர்கள் ஜாகதீ சந்தஸாலும் உன்னைப் பற்றிக் கொள்ளட்டும். (இவ்வாறு மறுபடி சிருஷ்டிக்கப்பட்ட லோகத்தில்) வேத அறிஞர்கள் சவித்ரு தேவனின் சிருஷ்டியில் கர்மம் புரிகின்றனர். சிருஷ்டியின் ஒழுங்கு நியதியின் இருப்பிடமாய் (அதிதி) உள்ளாய். தன்னால் கற்பிக்கப்பட்ட நியதியில் தாங்குபவளாய் உள்ளாய் - பரந்து உள்ளாய். தங்கும் இருப்பிடமாய் உள்ளாய். அசுர சக்தி யாரும் அறியாது நுழையுமுன்னே வேத மந்திரங்களால் பிருதிவியை (அ-து) சரீர அபிமானத்துடன் கூடிய வாழ்வை ருதம் (அ) நியதியினால் அமைக்கப்பட்ட வழிகளால் புத்தியை வளர்க்கும் எவளை (அதிதியை) சந்திரமண்டலத்தில் (அ-து) மனதில் அடைந்தனரோ, அவளை புத்தியினால் உபாசிக்கும் யஜமானர்கள், அவ்வாறே கண்டு யக்ஞங்களைப் புரிகின்றனர்.

அதிதியால் புனிதமடைந்து திரும்பி வரும் ஹவ்ய ரூபமான யஜமானன், வசுருத்ர ஆதித்யர்களால் ரூபம், அறிவு, உலகங்கள் மறுபடி அடையும் முறை.

வசு - காயத்ரீ சந்தஸ் (1) — ரூபம் (சரீரம்)

ருத்ரன் - திருஷ்டுப் சந்தஸ் (6) — 6 அறிவு (செயல்)

ஆதித்யன் - ஜாகதீ சந்தஸ் (7) — 7 உலகங்கள் (மனம்)

## அனுவாகம் 10

"பிரத்யுஷ்டம் ... யஜீஷேக்ருண்ஹாமி"

**மொழிபவர்:** *ரிஷி.*

*முன்னே எரிக்கப்பட்டனர் ராக்ஷசர்கள். முன்னே எரிக்கப்பட்டனர் தீயசக்திகள். அக்னியின் மிகச் சிறந்ததான தபோ சக்தியினால் உங்களை (ஜீவர்களை) அந்தர்முகமாக தபஸ் செய்விக்கிறேன். ஞானங்களின் இருப்பிடத்தை (சரீர-மனஸ்) அழிக்க மாட்டேன். வலிமை பொருந்தியவனும், தீயசக்திகளை வெற்றிகொள்பவனும் ஆன உன்னை (அக்னியை) வாக், பிராணன், சக்ஷுஸ், ஸ்ரோத்ரம், பிரஜைகள், இவற்றின் மூலாதாரம் அனைத்தையும் சுத்தி செய்யும் கர்மத்தில் ஈடுபடுத்து கிறேன். அக்னியை அனுசரித்து விரதத்தில் ஈடுபட்ட வனாக சுகம் தரும் நல்ல கர்மத்தில் பிணைக்கிறேன். நல்ல பிரஜைகள், பத்னியுடன் நாங்கள் (ஜீவர்கள்) அக்னியே, எதிரிகளை அழிப்பவனே, ஏமாற்ற முடியாதவனே, நம்பிக்கைக்குரியவனே, உன்னை சேவிக்கின்றோம்.*

*மெய்ஞானம் உடைய சவிதா எந்த வருணனின் பாசத்தினால் பிணைத்தானோ, அதிலிருந்து விடுவிக் கிறேன். பிரஜாபதியின் மூலஸ்தானத்திலும், நற்செயல்கள் புரியும் லோகத்திலும் பதி(அக்னி)யுடன் கூட என்னுடைய மகிழ்ச்சியான சூழ்நிலையை உண்டாக்குகிறேன். நல்ல பிரஜைகளால், நல்ல ஆயுளால், பலத்தினால் அக்னியே, அவ்வாறு செய்விக்கிறேன். நல்ல பத்னி பதியோடு செல்வதுபோல் என்னுடைய உடலோடு நல்ல ஆத்மா நான் செல்கிறேன்.*

*(அதிதியே) லோகங்களின் பயன் ஆக உள்ளாய். ஓஷதிகளின் ரசம் (நீ). உன்னுடைய அந்த குறைவுபடாத உலகத்தில் (வேதமந்த்ர பீஜங்களை) விதைக்கிறேன். லோகங்களின் பயன், ஓஷதிகளின் ரசமாக உள்ளாய். புனிதமான பார்வையினால் நல்ல பிரஜைகள் லோகத்தில் உண்டாவதற்காக உன்னைப் பார்க்கிறேன். ஒளியாய் உள்ளாய். ஒளியை (அக்னி) தொடர்ந்து செல். அக்னி உன் ஒளியைக் கவர்ந்து செல்ல வேண்டாம் அக்னியின் நாக்காக உள்ளாய். மங்களமானவளே தேவர்களுடைய*

ஒவ்வொரு வாசஸ்தலத்திலும், தேவர்களுக்கு ஒவ்வொரு யக்ஞ கர்மத்திலும் இருப்பாயாக. புனிதமான ரசமாக உள்ளாய். ஒளியின் இருப்பிடமாய் உள்ளாய். ஒளிக் கதிர்களாக உள்ளாய். சவித்ரு தேவன் உங்களை (ஜீவர்களை) சிதறாத, புனிதமான கிரணங்களால் புனிதப்படுத்தட்டும். (அதிதியே) புனிதமான உன்னை புனிதமான ஒவ்வொரு வாசஸ்தலத்திலும் (ஜீவர்கள்), தேவர்களுக்கு செய்யப்படும் ஒவ்வொரு யக்ஞத்திலும் அடைகிறேன். ஒளியின் (ஞானம்) இருப்பிடமாகிய உன்னை (அதிதியை) எல்லா ஒளியின் இருப்பிடங்களிலும். ஒளிக்கதிர்களாகிய (உன்னை) ஒளிக்கதிர்கள் உள்ள அனைத்து வாசஸ்தலங்களிலும், தேவர்களுக்குச் செய்யும் எல்லா யக்ஞங்களிலும் அடைகிறேன்.

**அனுவாகம் 11**

**"க்ருஷ்ணோ ... மாம்யக்ஞநியம்"**

**மொழிபவர்:** *ரிஷி.*

(ஓஷதியாக) துளைகளில் இருக்கும் கருமை படிந்தவளாக உள்ளாய். உன்னை அக்னிக்கு அர்ப்பணிக்கிறேன். ஞானத்தின் வாசஸ்தலமான வேதியாக (உடல்) உன்னை வேதமந்த்ரங்களாகிய ஆசனத்திற்கு சமர்ப்பிக்கிறேன். வேதமந்த்ரங்களாகிய ஆசனமாக உள்ளாய் உன்னை ஞான அமிர்தத்தை எடுத்து வழங்கும் "ஸ்ருக்கு"களுக்கு (புத்திக்கு) அர்ப்பணிக்கிறேன். வானம் (மனம்) அந்தரிக்ஷம் (செயல்) பூமி (சரீரம்) இவற்றுக்கு (உன்னை) அர்ப்பணிக்கிறேன். ஸ்வதா என்னும் சக்தியாக பித்ருக்களுக்காக மேல் எழுவாயாக. (மந்த்ர) ஆசனத்தில் அமர்ந்திருப்பவர்கள் (தேவ, பித்ருக்கள்) பிருதிவியை அடையட்டும். விஷ்ணுவின் ஸ்தூபமான (மனித உடலாக) உள்ளாய். மிருதுவான கம்பளி போன்ற ஆசனமாக, தேவர்களுக்கு நல்ல இருக்கையாக, விரிக்கின்றேன். எல்லா ஸ்தூல செல்வங்களான விஸ்வாவசு என்ற கந்தர்வனாய் உள்ளாய். எங்கிருந்து துன்பம் வந்தாலும் அதைத் தடுக்கும் யஜமானனுடைய அரண், பிருதிவியின் செல்வங்களாகிய அன்னத்தைக் குறித்து பிரார்த்திக்கப்பட்டவன். இந்திரனின் திறமை வாய்ந்த புஜமாக உள்ளாய். யஜமானனுடைய அரண்.

*(செயல்வகையான) அன்னம் (அனுபவம்) குறித்து பிரார்த்திக்கப்பட்டவன். திடமான தர்மத்தினால் மித்ராவருணர்கள் உன்னை (யஜமானனை) வடக்கு திசையிலிருந்து பாதுகாக்கட்டும். யஜமானனுடைய அரண். (ஞானத்தின் வகையான) அன்னம் குறித்து பிரார்த்திக்கப் பட்டவன். சூர்யன் உன்னை (யஜமானனை) முன்னிலை யில் (கிழக்கில்) எவ்விதமான சாபங்களிலிருந்தும், குற்றச்சாட்டுகளிலிருந்தும் காக்கட்டும்.*

*(லோகானுபவம் என்ற) விருந்துக்கு அழைக்கப் பட்டவனை, உன்னை, ஞானியை, ஒளிவீசுபவனை, அக்னியே, பெருகும் யக்ஞத்தில் (சிருஷ்டியில்) வீட்டில் (மனித உடலில்) யந்திரத்தில் உள்ளவனாக (மனித உடல்களில், வருணன் சவிதா மூலம்) தீமூட்டுகிறோம்.*

*வசுக்களுடைய, ருத்ரர்களுடைய, ஆதித்யர்களுடைய சதசில் (மனித உடலில்) அமர்வாயாக. ஜுஹு என்னும் மந்த்ர கோஷத்தை (மனித உடலிலிருந்து) எழுப்புவனாக வும், உபப்ருத் என்ற மந்த்ர கோஷத்தை செய்ய உதவும் மனோ சக்தியாக, (மனித உடலில்) துருவா என்ற மந்த்ர கோஷத்தை தவறில்லாமல் எழுப்ப நிலைத்த, நிஸ்சலன மான மனோ சக்தியாகவும், (மனித உடலில்) கிருதாசீ என்ற ஞானத்தை உள்ளே தாங்கும் புத்தி சக்தியாகவும், இவ்விதமான பிரியமளிக்கும் நாமங்களினால், இந்த பிரியமான சதஸில் (மனித உடலில்) அமர்வாயாக. இவை நல்ல கர்மாக்களுடைய லோகத்தில் அமர்ந்தன. இவற்றை காப்பாற்றுவாயாக. விஷ்ணுவே காக்க, காக்க. யக்ஞத்தை, காக்க யக்ஞபதியான அக்னியைக் காக்க, காக்க யக்ஞத்தை நடத்திச் செல்லும் என்னை.*

### அனுவாகம் 12

**"வனமசி ... ஜ்யோதிரங்தாம்"**

**மொழிபவர்:** *யஜமானன் (நான்).*

*அக்னியே, புவனமாக உள்ளாய். இந்த யக்ஞத்தை பரந்து விரியச் செய்வாயாக. ஜுஹுவே (வேத கோஷம்) உன்னை அக்னி அழைக்கிறார், தேவயக்ஞத்திற்காக. உபபிருதே, சவித்ரு தேவன் உன்னை தேவ யக்ஞத்திற்காக அழைக்கிறார். அக்னா விஷ்ணுக்களே உங்களை விட்டு*

நான் விலகாமலிருப்பேனாக. நீங்கள் விலகிச் செல்லாதீர்கள். எனக்கு அனுபவ லோகத்தை, லோகத்தை சிருஷ்டிப்பவர்களாகிய நீங்கள் வழங்குவீர்களாக. விஷ்ணுவின் ஸ்தானமாய் உள்ளாய் (மனித உடல்). இங்கு ஆரம்பித்து இந்திரன் வீர்யமான, சுவர்க்கத்தை அடையும் கோணலில்லாத மேல்நோக்கிச் செல்லும் வழியாகிய யக்ஞத்தைச் செய்தார். யக்ஞபதியினுடைய (அக்னி) இந்த்ர சக்திக்கு ஸ்வாஹா. பரந்து ஒளிவீசும் அக்னியே, என்னை தீயவழிகளில் செல்லாமல் காப்பாயாக. என்னை நல் வழியில் நடத்துவாயாக. யக்ஞத்தின் பிரதானமான சிரஸ் ஆக உள்ளாய். நல்ல உன் ஒளி இருப்பிடத்தை, (யஜமானன்) ஒளி இருப்பிடத்தில் சேர்க்கப்படட்டும். (அ-து) யஜமானன் புத்தி ஒளி மிகுந்து ஞானம் விரிவடையட்டும்.

## அனுவாகம் 13

"வாஜஸ்யமா ... வாதே தா:"

**மொழிபவர்:** *யஜமானன் (நான்).*

ஞான வீர்யத்தை அளிப்பதற்காக என்னை மேல் உலகங்களுக்கு எடுத்துச் சென்று (சவிதா) மேல் நிலையில் வைத்தார். பிறகு என்னுடைய கீழ் உலகுக்கு திரும்புவதால் இந்த்ரன் கீழ்மையான எதிரிகளை (அசுர சக்திகளை) இன்பமில்லாதவர்களாகச் செய்தார். மேல் உலகம் சென்றும், கீழ் உலகம் திரும்பியும் வரும் செயல்களால் தேவர்கள் (என்) ஞானத்தை விருத்தி செய்தனர்.

இந்த்ராக்னிகளே, பின்னர் எங்கும் உள்ள என் விரோதிகள் சிதறி ஓடட்டும். சரீரத்தை போஷிக்கும் வசுக்களே, உங்களை; செயலைப் போஷிக்கும் ருத்ரர்களே உங்களை; மனதைப் போஷிக்கும் ஆதித்யர்களே உங்களை தீண்டிய இந்த ஞான அமுதை அருந்தி வலிமை பெற்றுச் செல்வீர்களாக. பிரஜைகளையும் மூலத்தையும் நான் அழிக்கமாட்டேன். நீர், ஓஷதிகள் பெருகட்டும். மருத்துக் களின் குதிரைகளில் உள்ளவர்களே வானம் செல்லுங்கள். பின்னர் எங்களுக்கு மழை பொழிவிப்பீர்களாக. ஆயுளைக் காக்கும் அக்னியே, என்னுடைய ஆயுளைக் காப்பாற்று. பார்வையைக் காக்கும் அக்னியே, என் பார்வையைக் காப்பாற்று. ஸ்திரமாக உள்ளாய். அக்னியே, தேவனே,

*'பணி'கள் என்ற கருமித்தனம் படைத்த எதிரிகளால் (சுயநல எண்ணங்கள்) துன்புறுத்தப்பட்ட எவனைச் சுற்றிலும் காப்பு அரணாக இருக்கிறாய். உன்னுடைய அந்த இவனை (யஜமானனை) உன் எண்ணம் போல் தாங்கிச் செல்கிறேன். நிச்சயமாக உன்னிடமிருந்து இந்த யஜமானனாகிய என்னைப் பிரிக்க மாட்டேன். ஒன்றுகூடி இங்கு வந்துள்ள சேஷமாய் இருக்கும் (ஞானமாகிய) கிருதங்களை அருந்தும் (வசு, ருத்ர, ஆதித்யர்களான உடல், செயல்திறன், மனம்) தேவர்கள் இருக்கின்றனர். (மந்த்ர ஆசனங்களில்) அமர்ந்துள்ள விஸ்வே தேவர்கள் இந்த வாக்கை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டவர்களாக, நன்கு உண்டு பெருகியவர்களாக, ஆசனங்களில் உட்கார்ந்து மகிழட்டும். அக்னியுடைய பரிதி, வாக் ஆகிய உங்களை விழாத கிருஹத்தினுடைய (யஜமானனுடைய) சபையில் சமர்பிக்கிறேன், கிருபையுடன் கூடிய கிருபாகரீ என்று. கிருபையினால் நான் தாங்கப்பட்டேன். முன்னே நுகத்தடியில் பூட்டப்பட்டது (யஜமானனை - வருண பாசத்தால்) காக்கப்பட்டது.*

*அக்னியே ஏமாற்றப்பட்ட ஆயுளிலிருந்து, உஷ்ணம் மிகுந்த (ஜ்வர) சரீரத்திலிருந்து இப்பொழுது என்னைக் காப்பாற்று. மனதைக் காப்பாற்று, துன்ப வெள்ளத்தி லிருந்து காப்பாற்று. தகாத அன்னங்கள் உண்ணுவதிலிருந்து காப்பாற்று. துன்பம் தராதவாறு சுகத்தில் அமைந்துள்ள அன்னத்தைப் படைப்பாயாக. உனக்கு அர்ப்பணித்துக் கொள்கிறேன்.*

*வழியை அறியும் தேவர்கள் வழியை அடைந்து வழியில் (திரும்பி) செல்வார்களாக. மனத்தின் பதியே (இந்த்ரனே), தேவனே, எங்களுடைய இந்த யக்ஞம் தேவர் களில் அர்ப்பணிக்கப்பட்டது. வாக்கில் அர்ப்பணிக்கப் பட்டது. (செயல்திறன் அளிக்கும்) வாயுவில் தாங்கப் பட்டது.*

## அனுவாகம் 14

**"உபாவாம் ... கல்பயாதி"**

**மொழிபவர்:** *ரிஷி.*

*இந்த்ராக்னிகளே உங்கள் இருவரையும் யக்ஞத்தில் பங்கு பெறுவதற்கும் இருவரும் ஹவிஸ்ஸை கூடி. அருந்தி*

மகிழ்வதற்கும் (அழைக்கிறேன்). இருவரும் அன்னத்தையும் செல்வத்தையும் அருளக்கூடியவர்கள். இருவரையும் சக்தியை அடைவதற்கு அழைக்கிறேன். தன்னைவிட சிறப்புகள் பொருந்திய கன்னிகையை மணந்த மாப்பிள்ளை எவ்வாறு அந்த பத்னிக்கு எப்பொழுதும் செல்வங்களைக் கொடுக்கிறானோ, அல்லது பிரியம் மிகுந்த சகோதரியின் பொருட்டு எப்படி ஒருவனின் மைத்துனன் எப்பொழுதும் செல்வங்களைக் கொடுக்கிறானோ, அதே மாதிரி மிகுந்த செல்வங்களை அருளுவதில் சிறந்தவர்கள் நீங்கள் என்று கேள்விப்படுகிறேன் அல்லவா. இந்த்ராக்னிகளே, அதனால், சோமரசத்தை அடைவதில் முயற்சியுள்ள உங்களுடைய ஸ்துதியை புதிதாக செய்கிறேன். பிரஜைகளை அழிக்கும் தாசர்களுடைய பத்னிக்களின் ஒன்பது புரங்களை ஒருமித்த செயலால் இடித்து அழித்தீர்கள். புனிதமானதும், புதிதாக உண்டானதுமான இந்த ஸ்துதியை, வ்ருத்ரனை வதம் செய்பவர்களான, இந்த்ராக்னிகளே, கேட்டு மகிழுங்கள். உங்கள் இருவர் பற்றிய நல்ல ஸ்துதியைக் கூவுகிறேன். அவை உடனே வலிமையை விரும்புபவனுக்கு அதை உறுதி செய்கின்றன.

(பூஷணே) வலிமையை அடைவதற்காக அந்த வழியின் காப்போனாகிய உன்னை ரதம் வழியை அடைவது போல் அடைகிறோம். பூஷணே, வழிபடுவதில் எங்களைச் சேர்ப்பாயாக. (நாங்கள்) செல்லும் வழிகளில் எல்லாம் செயல்களில் எல்லாம் சுற்றிலும் காக்கும் சூர்யனை விருப்பமான சொற்களால் செய்த ஸ்துதிகளால் அடைந்தோம். அந்த பூஷண் எங்கள் துயரங்களுக்கு நிவாரணம் அளிப்பவர், ஒளி வீசும் சிகரங்களால் எல்லாவிதமான அறிவுகளையும் அடைவிக்கிறார்.

க்ஷேத்ரத்தை பாலிப்பவனால் நாம் அனுகூலமான ஜயத்தை அடைவோமாக. அவர் எங்களுக்கு பசு, குதிரை, போஷிக்கும் அன்னம், பிரஜைகள் அளித்து மகிழ்விக்கிறார். அப்படிப்பட்ட க்ஷேத்ரபதியே தேன் போன்ற மகிழ்ச்சி அலையை பசு போன்று எங்களுக்கு கறந்து அளிப்பாயாக.

தூய்மைப்படுத்தப்பட்ட தேன் கலந்த நெய் போன்று (ஆனந்தம் கலந்த மெய்ஞானம்) ருதத்தின் பதிகளான தேவர்கள் எங்களை மகிழ்விப்பார்களாக.

எல்லா வழிகளையும் அறியும் அக்னி தேவனே எங்களை ராஜபாட்டையில் அழைத்துச் செல். எங்களுடைய தீய ஸ்வபாவமான பாபங்களை எதிர்த்து போர்புரிவாயாக. நிறைந்த சரணாகதி ஸ்துதிகளை சமர்ப்பிக்கின்றோம்.

தேவர்களின் வழியையும் அடைந்தோம் அந்த வழியை அனுசரித்துச் செல்ல எங்கள் சக்திக்கு இயன்ற வரை முயல்வோம். அக்னி எல்லாம் அறிந்தவன். அவன் (எங்களுக்காக) யக்ஞம் செய்வான். அவனேதான் ஹோமம் செய்பவன். அவனே யக்ஞ வழிகளையும், நியமங்களையும் அமைத்துள்ளான். ஒளிமிகுந்தவனே சிறந்த துதி எது சொல்லப்படுகிறதோ அது அக்னிக்கே. அரசனுடையது போன்றது உன் செல்வம். வலிமை உன்னிடமிருந்தே உதிக்கிறது.

எல்லா துன்பங்களிலிருந்தும் மங்களமான வழிகளால், இளையவனான அக்னியே, நீ எங்களை கரையேற்றுவாயாக.

புனிதப்படுத்துபவளும், பரந்து இருப்பவளும், பலவற்றை எங்களுக்கு வழங்குபவளும் ஆன பிருத்வியே எங்களுடைய புத்ர பௌத்ராதிகளுக்கு மகிழ்ச்சியையும், சௌக்யத்தையும் அருள்வாயாக.

தேவர்களிடமும், மனிதர்களிடமும், அக்னியே, நீ விரதத்தைக் காப்பவனாக உள்ளாய். யக்ஞங்களில் நீ துதிக்கப்பட வேண்டியவன்.

தேவர்களே, ஞானிகளான உங்களுடைய விரதங்களை அறிந்து கொள்ளாமல் சரிவர அனுஷ்டிக்கத் தவறினோமோ, (அந்த விரதங்களை) தேவர்களை எந்த யக்ஞங்களில் கல்பிக்கிறாரோ, அந்த அனைத்தும் அறிந்த அக்னி உள்ளிருந்து பூர்த்தி செய்கிறார்.

ஹரி: ஓம் தத்சத்

ப்ரஹ்மார்ப்பணமஸ்து.



## 'ஹவ்யம்' என்பதன் தத்துவம்

பழம் கொடுக்கும் ஒரு மரம் முழுவதும் ஹவ்யம். அது பிறந்து, வளர்ந்து, இறந்த பின்னும், அதைவிட மேல் நிலையில் உள்ள ஜீவராசிகளுக்கு பலவித அன்ன, அனுபவங்களுக்கு உதவி செய்கிறது. இது பலனைக் கருதி செய்யப்படவில்லை. நிஷ்காம்யமானதால் நாளடைவில் அதன் ஞானத்தைப் பெருக்கி உயர்நிலைப் பிறவிகளில் தேவர்கள் அதனை ஈடுபடுத்துவர்.

அதே மாதிரி மனிதன் தன்னை நிஷ்காம்யமாக மற்றவர்களுக்காக அர்ப்பணித்துக் கொண்டால் மரத்தின் யக்ஞத்துக்கு ஒப்ப மனிதனும் படிப்படியே உயர் ஞானம், பிறவிகள் அடைய தேவர்கள் வழி செய்வர்.

ஆனால், மரம் போல் அல்லாமல் மனிதர்களுக்கு மனம், புத்தி செயல் இவை அருளப்பட்டதால் இந்த நிஷ்காம்ய இயற்கை நியதியை துரிதப்படுத்த இயலும். ஞானத்தை அடைந்த ரிஷிகள், தேவர்களுக்கும், அவர்களுக்கு மேலும் மூலம் வரை பிரீதியை உண்டு பண்ணும் வழியான யக்ஞத்தை நமக்கு அருளியுள்ளனர். யக்ஞம் செய்யும் யஜமானன் ஹவ்ய ரூபமாக மாறி தேவர்களை மகிழ்விக்கிறான்.

மரம் மனிதர்களுக்கு பழம் கொடுத்து மகிழ்விக்கிறது.

மனிதன் தேவர்களுக்குக் கொடுக்கும் ஹவ்யம் எப்படி இருக்கும்? ஒரு ஊஹம். தேவர்கள் ஒளியால் ஆன சரீரம் படைத்தவர்கள். வருண பாசமாகிய ஸ்தூல சரீரம் அவர்களுக்கு இல்லை. ஆகவே மனிதர்களுக்கு வேண்டிய அன்னம், உடை, செயல்களுக்கு வேண்டிய கருவிகள் முதலியன அவர்களுக்கு அவசியமில்லை. அவர்கள் எல்லா ஜீவராசிகளிலும் உறைகிறார்கள்.

புத்தியினால் வாழும் தேவர்கள் எப்படிப்பட்ட அன்னத்தை வேண்டுவார்கள். அவர்கள் அன்னம் ஞானமாகத்தான் இருக்கமுடியும். அவர்களின் ஞானம் பெருக அவர்களுக்கு புஷ்டியும் மகிழ்ச்சியும் பெருகும்.

மனிதர்களுக்கு அன்னம் பூமியிலிருந்து கிடைக்கிறது. நல்லதும் தீயதும் கலந்த பூமியில் பண்பட்ட இடங்களில்

மட்டுமே, அந்தந்த இடங்களைப் பொறுத்து பலவிதமான அன்னங்கள் கிடைக்கின்றன.

விக்ஞான ரூபமான தேவர்களுக்கு எல்லா ஜீவ ராசிகளின் மனம் எண்ணங்கள், செயல்கள் ஒன்றுசேர்ந்து பூமிக்கு ஒப்பாகும். பண்பட்ட எண்ணங்கள், செயல்கள், சாஸ்திரங்கள், விக்ஞானம், சங்கீதம், நாட்டியம், நாடகம், காவ்ய, இதிகாச, புராணங்கள் என்பவை பலவகையான அன்னத்திற்கு ஒப்பாகும்.

மிகவும் புஷ்டியான, மனத்திற்கு ஆனந்தம் அளிக்கும், எளிதில் கிடைக்காததான உண்ணக்கூடிய பொருள்கள், மனோகரமான இடத்தில் ஸ்ரத்தை மிகுந்தவர்களால் பக்குவம் செய்யப்பட்டு தூய முறையில் வழங்கப்பட்டால், அந்த மகிழ்ச்சிக்கு ஈடு இல்லை.

அந்த மாதிரி சிரேஷ்டமான அன்னத்திற்கு ஒப்பானது வேத மந்திரம், ரிஷிகள் மிகுந்த பிரயாசையுடன் கண்ட பரா வாக், பஸ்யந்தீ, மத்யமா, வைகரீ வாக்குகளில் உள்ள பீஜ மந்த்ரங்கள் மனதையும், புத்தியையும் மிக உயர்ந்த அளவில் கொண்டு செல்லக்கூடியவை. சிரேஷ்டமான அன்னம் எல்லா இடங்களிலும், எல்லா நேரங்களிலும் கிடைக்காதது போல் இந்த ஸ்ரேஷ்டமான மந்த்ர ஞானம் எல்லோரிடமிருந்தும், எல்லாப் பொழுதிலும் கிடைக்காது. பலவிதமான விரதங்களை அனுசரித்து மனிதன் (அக்னி-சோமர்) இந்த ஸ்ரேஷ்டமான மந்த்ரங்களை ஏந்தக்கூடிய பாத்ரமாக அமைகிறான். இந்த மாதிரி வேத மந்த்ர பீஜங்களை ஏந்திய விரதத்தை அனுஷ்டிக்கும் மனிதனே தேவர்களுக்கு ஹவ்யமாகிறான்.

ரிஷியின் மந்த்ர சக்தியால் அவன் ஹவ்யரூபத்தில் தேவர்களுக்கும், பின் மூலமாகிய அதிதிக்கும் சமர்ப்பிக்கப் படுகிறான். ஒவ்வொரு நிலையிலும் சமர்ப்பிக்கும் முன் அந்த பாத்ரத்தில் உள்ள ராக்ஷச, தீயசக்திகள் அகற்றப்பட்டு சுத்தம் செய்யப்படுகிறது. (தோல், காம்பு முதலியவற்றை நீக்கி பழத்தை உண்ணுவது போல). பழத்தை மனிதர்கள் உண்டு இன்புறுவதை எப்படி மரம் அறியாதோ அதே மாதிரி இந்த ஹவ்யம்தான் தேவர்களுக்கு இன்பம் கொடுப்பதை நேரே அறியாது ரிஷியின் வாக்கு மூலமே தெரிந்து கொள்ளலாம்.

நல்ல பழங்களைக் கொடுக்கும் மரங்களை மனிதர் போஷிக்கின்றனர். அதே மாதிரி நல்ல ஞானங்களை கொண்டு தரும் மனிதர்களை தேவர்கள் புத்தி, மனம், செயல், செல்வம் இவற்றால் போஷிக்கின்றனர். நாளடைவில் ஞானம் மிகுந்து மனித லோகத்தைவிட்டு ஜீவன் தேவ பிறவிகளையும், பிரம்ம ஞானத்தையும் அடைகிறது ஒவ்வொரு முறை யக்ஞம் செய்யும்போதும் மூலம் வரை ஹவ்யரூபமாக சென்று பின் திரும்பி இவ்வுலகில் அக்னி மூலமாக யக்ஞம் செய்வது ஒவ்வொரு புதுப்பிறப்புக்கு ஒப்பாகும். பல பிறவிகள் எடுத்து அடையக் கூடிய ஞானம் யக்ஞத்தினால் சில பிறவிகளிலேயே கிடைக்கும் என்பதை உணரலாம்.



# பிரஸ்னம் 2 – அக்னிஷ்டோமம்

## அக்னிஷ்டோமத்தின் தத்துவம் என்ன?

*1. ஒரு மனிதனுக்கு அவனுடைய ஆயுள் காலத்தில், வாழ்க்கையின் அனுபவம் சரீரம், செயல், மனம் இம் மூன்றால் இயற்கையிலேயும், சுற்றுப்புற சூழ்நிலைகளாலும் அமைகின்றது. இவ்வனைத்தும் மனிதனுக்கு நல்ல குணங்களாகிய தேவ வழியிலும், கெட்ட குணங்களாகிய அசுர வழியிலும் பயன்படுத்த வாழ்க்கையில் வாய்ப்புகள் அமைகின்றன.*

*2. பண்படாத மனிதன் சூழ்நிலைகளாலும் மனம், இந்திரியங்கள் வசப்பட்டும், தன்னலம் ஒன்றே கருதும் அசுர வழியில் செல்லும் வாய்ப்பு. வாழ்க்கையில் இயற்கையால் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வித வாழ்க்கை தூய இன்பத்தை நல்குவதில்லை.*

*3. ரிஷிகள் அனைத்தையும் ஆராய்ந்து, மனிதன் எவ்வாறு தேவ வழியில் சென்று தூய இன்பத்தையும், முடிவில் ஞானத்தையும் அடையக்கூடும் என்பதை கண்டறிந்து அதை அக்னிஷ்டோமம் என்ற யக்ஞமாக நமக்கு அளித்துள்ளனர்.*

*4. கிருஷ்ண யஜுர் வேதம் 2, 3, 4 ஆவது பிரஸ்னங்கள் அக்னிஷ்டோம யக்ஞத்தைக் குறித்த வேத மந்த்ரங்களை அறிவிக்கின்றன.*

*5. இந்த 3 பிரஸ்னங்களில் கூறப்பட்ட கருத்துகளை சுருக்கமாக இவ்வாறு அறியலாம்.*

### பிரஸ்னம் 2

*அதிதி, ஆபோதேவதைகள், வாக், அக்னி, சோமன், இந்த்ரன், வருணன், மித்ரன், சூர்யன், பூஷண், ருத்ரன் முதலிய தேவர்களை வேத மந்த்ரங்களால் பிரார்த்தித்து, யஜமானனின் சுற்றுப்புற சூழ்நிலைகளில் சோமராஜனின் சகல செல்வங்களும் நிலைபெறுமாறு ரிஷி அநுக்ரஹிக் கிறார்.*

### பிரஸ்னம் 3

*வைஸ்வானர அம்சமான யஜமானனின் மூல சரீரத்தை, வைஸ்வானர அக்னிதேவன் அருளுடன் அறிந்து*

வேதமந்த்ரங்களால் தேவர்கள் அருளுடன் நன்கு சீரமைத்து, அசுர சக்திகளை ஒடுக்கி புனிதப்படுத்தி, தூயதாகிய சோமனைத் தாங்கும் பாத்ரமாக ரிஷி அநுக்ரஹிக்கிறார்.

## பிரஸ்னம் 4

யஜமானன் தூயதான சோமனைத் தாங்கும் பாத்ரமாக மனம், வாக்கு, செயல், சரீர இந்திரியங்கள் மூலம் அவற்றுக்குரிய தேவர்களை ஆராதிக்கிறார். இந்திராதி தேவர்களுக்கு சோமரசத்தை தன் மனம், வாக்கு, செயல், சரீரம், இந்திரியங்கள் மூலமாக அளித்து அவர்களை இன்பத்தில் நிலைபெறச் செய்கிறார். தூய சோமரசபாத்ரமான யஜமானனிடம் தேவர்கள் ப்ரீதி கொண்டு அசுரகுணங்களை ஒடுக்கி, அவனிடம் குடி கொண்டு தங்கள் சீரிய குணங்களால் செயல் ஆற்றச் செய்து, அதன் மூலம் யஜமானனும் தூய இன்பத்தை அனுபவிக்கிறான். முடிவில் ஞானத்தை நோக்கி செல்கிறான்.

இந்த செயல்பாட்டை "சோமோ வா ஏதஸ்ய ராஜ்ய மாதத்தே ... தேவசூராஜா பவதி" என்ற மந்த்ரத்தில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மந்த்ரத்தின் கருத்து பின்வருமாறு:-

"சோமன்தான் இவனுடைய (யஜமானனுடைய) ராஜ்யம் (வாழ்க்கை) அளிக்கிறான். எவன் வாழ்க்கையை அனுபவிப்பவனாக இருந்து கொண்டு சோமனால் யக்ஞம் செய்கிறான். அதாவது அடையும் பொருள், செயல், சரீரம் கொண்டு வாழ்க்கையை நடத்துகிறான். தேவர்களுக்கு (நல்ல குணங்கள்) அர்ப்பணிக்க வேண்டுமென்று இவை அமைகின்றன். இவற்றால் தேவர்களை (நல்ல குணங்களை) ஆராதிக்கவேண்டும். அவர்கள் (தேவர்கள்) நல்ல வாழ்க்கை யின் அத்தியாவசியங்களை இவனுக்கு அளிக்கின்றனர். அவர்கள் இவனை மறுபடி நல்வாழ்க்கை வாழ செயல் புரிகின்றனர். அதனால் தேவர்கள் அருளிய நல்வாழ்க்கை வாழும் யஜமானனாக ஆகின்றான்."



# பிரஸ்னம் 2

## அனுவாகம் 1

**"ஆப உன்தன்து ... சந்தம் பாஹி"**

*ஆபோ தேவீகள், வாழ்வதற்கும், நீண்ட ஆயுளுக்கும், ஞான ஒளிக்கும் அருள்வார்களாக. ஓஷதிகளே இவனை (யஜமானனை) காப்பாற்றுவீர்களாக. கோடரி போன்ற கர்மவினைகளே இவனை ஹிம்சிக்காதீர். தேவர்களின் ஞானமாகிய இவற்றை (மந்த்ர பீஜங்களை) விதைக்கிறேன். யக்ஞ கர்மத்தின் முடிவில் மங்களம் அடைவாயாக.*

*ஆபோதேவீக்களாகிய தாய்மார்கள் எங்களை புனிதப்படுத்தட்டும். ஞானமாகிய நெய்யினால் எங்களை ஞானத்தினால் புனிதம் அடைவிப்பவர்கள் (ஆபோ தேவிகள்) எங்களை ஞானத்தினால் புனிதப்படுத்தட்டும். எங்களுடைய எல்லா பாவங்களையும் அடித்துச் செல்லட்டும். ஆபஸ்ஸினால் புனிதம் அடைகிறேன். மனதும் புனிதம் அடைகிறேன். சோமனின் உடலாய் உள்ளாய் (ஆபஸ்). என் உடலைக் காப்பாயாக. உலகங் களின் ரசமாய் உள்ளாய். ஞான ஒளியைத் தாங்குபவளாக உள்ளாய். ஞானத்தை என்னுள் தாங்குவாயாக.*

*உண்மையை மறைக்கும் விருத்ரனின் கண்மணியாய் உள்ளாய். (எங்கள்) கண்களைக் காப்பவளாக உள்ளாய். என்னுடைய கண்களைக் காப்பாற்று.*

*(ஆபோதேவியே, நீயே உண்மையை மறைக்கும் விருத்ரனின் கண்மணியாகவும் எங்கள் கண்களைக் காப்பாற்றுபவளாகவும் இருப்பதால் எங்கள் கண்கள் உண்மையைக் காணாது போகலாம். ஆகவே) சித்பதி உன்னை (மறைக்கும் தன்மையை) புனிதப்படுத்தட்டும். வாக்பதி உன்னைப் புனிதப்படுத்தட்டும். சிதையாத, புனிதமான சூர்யனுடைய செல்வமாகிய கிரணங்களால், தேவர் சவிதா உங்களைப் புனிதப்படுத்தட்டும். பவித்ர பதியே (சவிதா), சூர்யனுடைய கிரணங்களாகிய செல்வங் களால் எவனுடைய ஆத்மனை புனிதப்படுத்துகிறேனோ அது என்னால் (ரிஷி) சாதிக்க முடியட்டும். எந்த யக்ஞத்தில் முயற்சியுடன் கூடிய யக்ஞம் செய்பவர்களான நாங்கள் தேவர்களாகிய உங்களை அழைக்கிறோமோ, சத்தியத்தை*

தர்மமாகக் கொண்ட தேவர்களே (அந்த யக்ஞத்தின்) உள்ளே பிரவேசியுங்கள். இந்த்ராக்னிகளே, த்யாவா - பிருதிவிகளே, ஆபோதேவீகளே, ஓஷதிகளே நீங்கள் விரத சங்கல்பங்களின் அதிபதியாக உள்ளீர். விரத சங்கல்பம் பூண்டுள்ள என்னை இங்கு காப்பாற்றுவீராக.

## அனுவாகம் 2

"ஆகூத்யை ... வாதாரபே"

(ஆபோதேவீகளே) சங்கல்பத்திற்கு, கர்மத்தில் ஈடுபடுவதற்கு, அக்னிக்கு ஸ்வாஹா (சமர்ப்பணம்). அறிவுக்கு மனதிற்கு அக்னிக்கு ஸ்வாஹா. தீக்ஷைக்கு, தபஸுக்கு, அக்னிக்கு ஸ்வாஹா. சரஸ்வதிக்கு, பூஷணுக்கு, அக்னிக்கு ஸ்வாஹா. எங்கும் பெருகியவர்களே, அனைத்து நலன்களும் அருளுபவர்களே, ஆபோதேவீகளே, த்யாவா-பிருதிவீ, பரந்த அந்தரிக்ஷம், பிருஹஸ்பதி (ஆகிய இவர்கள்) ஹவிஸ்ஸினால் (யக்ஞத்திற்கு) வளரட்டும் ஸ்வாஹா. அனைத்தையும் இயக்கும் தேவனுடைய (சவிதா) நட்பை மனிதன் வேண்டுகிறேன். அனைத்துச் செல்வங்களுக்கும் இலக்கை அடைய உதவும் அம்புகளின் கூடு போன்ற நீ (ஆபோதேவிகள்) உள்ளாய். செல்வம் வேண்டுகிறான். (மனிதன்) செழிப்பிற்கு ஸ்வாஹா. ரிக் சாமங்கள் என்ற உருவில் உள்ள அந்த உங்களைப் பற்றுகிறேன். யக்ஞத்தின் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை அந்த ரிக்குகள் என்னைக் காக்கட்டும்.

அறிவு, செயல், திறமை இவற்றைக் கற்பிக்கும் வருணதேவனே, கடக்கத் தகுதியான படகில் (நதியை) எப்படிக் கடப்போமோ அவ்வாறு எல்லாவிதமான இடையூறுகளையும் கடப்பதற்கு (எங்களுக்கு) திறமையை அருள்வாயாக. (ஆபோதேவீகளே) ரசம், பலம், தாது நிறைந்த அன்னமாக உள்ளாய். மிருதுவான கம்பளி போன்று இந்திரியங்களுக்கு உகந்ததும், காப்பதுமான அன்னத்தை அளி.

காப்பாயாக. காப்பாயாக. வேண்டாம் என்னை ஹிம்சிக்க வேண்டாம். விஷ்ணுவின் (சவிதா) சுக ஹேதுவாக உள்ளாய். யஜமானனின் சுகஹேது (நீயே). சுகத்தை எனக்கு அருள்வாயாக. மேகங்களே இல்லாத

*வானத்தில் பிரகாசிக்கும் நக்ஷத்ரங்கள் மிக அதிக ஒளியைக் கொடுக்கும். மேகங்களில்லையேல் மழை இல்லை, வாழ்வு இல்லை). நக்ஷத்ரங்களின் மிகுந்த ஒளியிலிருந்து காப்பாற்று (அப்பப்போது மழை பொழியட்டும்). இந்திரனுடைய மூலமாய் உள்ளாய். என்னை ஹிம்சிக்க வேண்டாம். உழவுக்காக, உன்னை, நல்ல தான்யங்களுக்காக, நல்ல போகங்களுக்காக, ஒஷதிகளுக்காக (வேண்டுகிறேன்). மங்களமான உபஸ்தத்தில் உயர்ந்து நிற்கும் வனஸ்பதி (சோமன்) யக்ஞத்தின் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை என்னைக் காப்பாற்றுவாராக. மனதினால் யக்ஞத்திற்கு ஸ்வாஹா. பரந்த அந்தரிக்ஷத்திலிருந்து பிராணனிலிருந்து யக்ஞத்தை ஆரம்பிக்கிறேன். (யக்ஞத்திற்கு) ஸ்வாஹா.*

## அனுவாகம் 3

**"தைவீம்தியம் ... சமீஷாமதேம"**

*தெய்வீகமான அறிவை (எங்களை) ரக்ஷிப்பதற்கு அருள்பவளை, ஒளியைத் தாங்குபவளை, யக்ஞத்தை நடத்திச் செல்பவளை, மாயையின் வசம் உள்ள எங்களை கரையேற்றுபவளை எண்ணுகிறோம்.*

*எந்த தேவர்கள், மனதில் பிறந்தவர்கள், மனதோடு இணைந்தவர்கள், நல்ல திறமையுடையவர்கள், திறமையின் குழந்தைகள், அவர்கள் எங்களைக் காக்கட்டும். அவர்கள் எங்களை (புத்தி) தூண்டட்டும். அவர்களுக்கு (செயல்களை) அர்ப்பணிக்கிறோம்.*

*மீண்டும் எங்களுக்கு நல்லுணர்வை அளிப்பவனாகிய அக்னியே, ஏங்களைக் காப்பதற்கும், மங்களங்களை அளிப்பதற்கும் நீ நல்ல விழிப்புடன் இருப்பாயாக. நாங்கள் நல்ல மகிழ்ச்சியுடன் இருப்போமாக. தேவர்களிடமோ, அல்லது மனிதர்களிடமோ, அக்னியே, நீ விரதங்களைக் காப்பவனாக உள்ளாய். நீ யக்ஞங்களில் போற்றத் தகுந்தவன்.*

*விஸ்வே தேவர்கள் என்னை மீண்டும் நல்வழியில் செலுத்துகின்றனர். பூஷண் செல்வங்களால் சோமன் எண்ணங்களை நிறைவேற்றுவதால், சவித்ரு தேவன் அருளும் செல்வங்களால்.*

சோமனே மிகுந்த அருளை மீண்டும் கொண்டு வருவாயாக. முழுவதுமாக அருள் செய்வதை நிறுத்த வேண்டாம். ஆயுளினால் குறைவுபடுத்த வேண்டாம்.

பொன் ஆகவும், வஸ்திரம் ஆகவும், பசுவாகவும், குதிரையாகவும், ஆட்டுக்கிடா, செம்மறி ஆடாகவும் உள்ள நீ எனக்கு இன்பம் அளிப்பாயாக. வாயுவுக்காக (நற்செயலுக்காக), வருணனுக்காக (வாழ்வுக்காக), நிருருதிக்காக (இவ்வுலக இன்பங்களுக்காக), ருத்ரனுக்காக (ஞானத்திற்காக) உன்னை அழைக்கிறேன்.

ஆபோதேவிகளே, ஆபோதேவிகளின் புத்ரனே (சோமனே) அலை போன்ற உன் (ஆபஸ்) ஹவிஷ்யங்கள், இந்திரியங்களை ஆள்பவன், மெய் மறக்கும் இன்பங்களை அருள்பவன் அவனை (சோமனை) உங்களை (ஆபோ தேவிகள்) மறந்து செயல்படமாட்டேன். சிதைவுபடாத சந்ததியை பிருதிவியினால் அடைவேன்.

மங்களத்திலிருந்து மேலும் உயர்வை அடைவிப்பாய். பிருஹஸ்பதி (நல்அறிவு) உன் வழிநடத்துபவனாக இருக்கட்டும். பிறகு இந்த யஜமானனுடைய சிறந்த வாழ்வு இந்த பிருதிவியினால் (அடைவிப்பாயாக). எல்லாரினும் வீரனே சத்ருக்களை எங்களிடமிருந்து ஒரு ஓரத்தில் வை. ரிக், சாமன்கள், யஜுஸ்களால் நன்கு கரை கடப்பவர் களாகிய விஸ்வே தேவர்கள் முன்னே எதை யக்ஞமாக செய்தனரோ, பிருதிவியினால் (சரீரத்தால்) இந்த தேவ யஜனத்தை அடைந்தோம்.

புஷ்டியான செல்வங்களால், அன்னங்களால் மகிழ்வோமாக.

## அனுவாகம் 4

"இயந்தே ... சஹரய்யா"

வாக்ரூபமான (ஆபோ தேவீகளே) இது உன்னுடைய புனிதமான உடல், இது சக்தியின் ஒளி. அதனால் உண்டாகுவாயாக, ஒளியை அடைவாயாக, உந்தும் சக்தியாக உள்ளாய். மனதினால் தாங்கப்பட்டவள். விஷ்ணுவிற்கு (சவிதா) பிரியமானவள். உன்னுடைய அந்த சத்ய வேள்வியினுடைய சிருஷ்டியில் வாக் புலன்களால்

*அறியப்படும் நிலையை அடைவதாக அர்ப்பணிக்கப் படுவாயாக.*

*புனிதமானவள், அமிருதமானவள், வைஸ்வதேவர் களின் ஹவிஸ், சூரியனின் கண்ணில் அமர்ந்து அக்னி, விருத்ரன் கண் விழிகளில் எந்த பலவிதமான அக்ஷரங்களாக தென்படுகிறோயோ (நீ) ஞானிகளால் ஒளிவீசுபவள், சித்சக்தியாய் உள்ளாய், மனமாக உள்ளாய், அறிவாக உள்ளாய், திறமையாக உள்ளாய், யக்ஞமாக உள்ளாய், க்ஷத்ரிய பலமாக உள்ளாய், அதிதியாக உள்ளாய். இருபக்கங்களிலும் (மேலுலகம், இவ்வுலகம்) முகம் உடையவளாக உள்ளாய். அந்த நீ எங்களுக்கு மேல் உலக வழியாகவும், ஆகுவாயாக. மித்ரன் வாக்தேவியான உன் வாக்குகளை மந்த்ரரூபமாகக் கட்டுவானாக. பூஷண் மந்த்ர வழியைக் காக்கட்டும். ஆணையிடும் இந்த்ரனுக்கு (வாக்தேவியாகிய) உன் மாதா, பிதா, பிராதா, கூட பிறந்தவர்கள், நண்பர்கள் அனைவரும் அனுமதிக்கட்டும். இந்திரனுக்காக அந்த தேவியான நீ சோமதேவனைச் சென்று அடைவாயாக. ருத்ரன் உன்னை மித்ரனின் வழியாக திரும்பி அழைத்து வரட்டும். மங்களமாக சோமன் என்ற நண்பனுடன் எல்லா நலங்களும் கூட மறுபடி திரும்பி வருவாயாக.*

**அனுவாகம் 5**

**"வஸ்வ்யசி ... வியோஷம்"**

*(வாக்தேவியே) வசுத்தன்மை உடையாய். ருத்ரனாக உள்ளாய். சந்திரனாக உள்ளாய். பிருஹஸ்பதி உன்னை உயர்ந்த இடத்தில் வைக்கட்டும். ருத்ரன் வசுக்களால் (சரீரத்தில் உண்டாகும் வாக்குகளால்) அறியட்டும். பிருதிவியின் உயர்ந்த இடத்தில் (சரீரத்தினுள்ள ஹ்ருதயத்தில்) உன்னை அந்தர்முகமாக த்யானிக்கிறேன். தேவயஜனத்தில் வாக்கினுடைய நிலையில் நெய்த்தாரை போன்ற தியானத்தில் அர்ப்பணிக்கிறேன்.*

*ராக்ஷச சக்திகள் முற்றும் அழிக்கப்பட்டன தீய எண்ணங்கள் முற்றும் அழிக்கப்பட்டன. இந்த ராக்ஷசர் களின் கழுத்தை வெட்டுகிறேன். எவர்கள் எங்களை*

வெறுக்கிறார்களோ, யாரை நாங்கள் வெறுக்கிறோமோ அந்த இவர்களின் கழுத்துகளையும் வெட்டுகிறேன். எங்களுக்கு உன்னுடைய செல்வம் (இருக்கட்டும்). உன்னால் ரக்ஷிக்கப்பட்ட செல்வம் (இருக்கட்டும்) (வாக்) தேவியே. சிறந்த நலங்களை அடைந்தவளும், சிறந்த நலங்களில் உள்ளவளும் ஆன (நீ) தெய்வீக சக்தியாய் எங்களைப் பார்த்து அருள்வாயாக. வாக்கிற்கும் உருவம் கொடுக்கும் உன்னை வணங்குவே னாக. மங்களமான சொல் அருவியே, சொல் அருவியைத் தன்னுள் தாங்குபவளே உன்னுடைய மங்களமான பார்வையில் நான் செல்வச் செழிப்பிலிருந்து விடுபடாமல் இருப்பேனாக.

## அனுவாகம் 6

"அம்சுனா ... பிராணன்து"

(சவித்ருதேவனே) உன்னுடைய ஒளியால் (திவம்) ஒளி (பிருத்வி) பற்றப்படட்டும். பருவத்தில் உன்னுடைய பருவ வாசனா சக்திகள் காமத்தைத் தூண்டட்டும். இன்பத்திற்கு உன்னுடைய ரசங்கள். நிலைவழுவாதவனும், உடன் இருப்பவனுமாக உள்ளாய். சோமன் உன்னிடம் வைக்கப் பட்டுள்ளான். அனைத்தையும் தூண்டும் சவித்ரு தேவனை தியாவா பிருதிவிகளில் ஞான வேள்வி செய்பவனும், சத்யவேள்வி செய்பவனும், ரத்னங்களைத் தாங்குபவனும், பிரியத்தை அருளும் மதியை உடையவனுமான சவித்ருதேவனை போற்றுகிறேன். எவருடைய ஒளி மதிக்கு அப்பாற்பட்டதாய் மேல்நோக்கிப் பிரகாசிக்கிறதோ அது காட்டும் வழியில், ஹிரண்ய பாணியும், நல்வேள்வி இயற்றுபவனும், கிருபை சுரப்பவனும் (ஆன சவித்ருதேவன்) சோமரசத்தை (த்யாவா பிருதிவி சிருஷ்டிக்கு) அளந்து பரிபாலிக்கிறார். பிரஜைகளுக்கு உன்னை பிராணனுக்காக வேண்டுகிறேன், உன்னை வ்யானனுக்காக உன்னை வேண்டுகிறேன். பிரஜைகளுக்கு நீ பிராணனை அளி. பிரஜைகள் உன்னை அனுசரித்து பிராணன் உடையவர் களாக ஆகட்டும்.

## அனுவாகம் 7

**"சோமன் தே ... மாவோதபன்"**

*(சவித்ரு தேவனே) உன்னுடைய சோமனை வாங்குகிறேன். ரசமுள்ளவனும், போஷண சக்தியுள்ளவனும், வீர்யமுடையவனும், பாபங்களை நாசம் செய்பவனும் (ஆன சோமனை) ஞான ஒளிமிக்க செயல்களால் உன்னுடைய ஞான ஒளிமிக்க செயற்திறமையையும், ஹிரண்யத்தினால் ஹிரண்யத்தையும், அன்னத்தினால் அன்னத்தையும், மங்களமான எது உன்னுடைய அறிவு எங்களுடைய செல்வங்கள், தபஸ், உடலாய் உள்ளது, பிரஜாபதியின் அக்ஷரங்கள் (வைகரீ வாக்) அவற்றினுடைய ஆயிரக்கணக்கில் போஷிப்பதான, வளர்ந்து பெருகும் முடிவான அறிவினால் வாங்குகிறேன்.*

*எங்களுக்கு உன்னுடைய பந்து (சோமன்). என்னில் உன்னுடைய செல்வங்கள் செழிக்கட்டும். எங்களுடைய ஜோதியும், சோமனை வாங்குவதில் திறமைமிக்கவனுமான மித்திரன் எங்களிடம் மங்களமான மித்திரனை (சோமனை) தாங்கியவனாக வருவாயாக. இந்திரனின் தொடையில் (வீர்யத்தில்) பிரவேசிப்பாயாக. உன்னை விரும்புபவனை நீ விரும்புபவனாக, சுகத்தின் இருப்பிடமானவனை சுகமாகவும் (பிரவேசிப்பாயாக)*

*பாபத்தின் எதிரியான சப்தரூபமான அக்னி, மயக்கத்தின் எதிரியான அக்னி, செயலே, நற்செயலே, சத்ருக்களை நாசம் செய்யும் அக்னி இவைதான் சோமனை வாங்கும் சாதனங்கள். (சவித்ருதேவனே) அவர்களைக் காப்பீர்களாக. அவர்களை கைவிட வேண்டாம்.*

## அனுவாகம் 8

**"உதாயுஷா ... வருணஸ்யபாச"**

*வளரும் ஆயுளால், மங்களமான ஆயுளால், பெருகும் ஓஷதிகளின் ரசத்தினால், பெய்யும் மழையின் சக்தியாலும் அமிருதங்களுடன் கூட இருக்கிறேன். பரந்த அந்தரிக்ஷத்தை அடைவாயாக, அதிதியின் மடியை. அதிதியின் மடியில் அமர்வாயாக. விருஷபமான (வருணன்) வானத்தை திடமாக அமைத்தார். பிருதிவியின் பரந்த அமைப்பை (சிருஷ்டித்தார்). அனைத்து உலகங்களிலும் சம்ராட்*

வருணனின் இந்த வ்ரதங்கள் வியாபித்துள்ளன. சக்தியை குதிரையில், பாலை பசுக்களில், ஹ்ருதயங்களில் விக்ஞானம், அழியும் பொருள்களில் அக்னியையும், வானத்தில் சூர்யனையும் வருணன் ஸ்தாபித்தார். சோமனை மலையிலும் (அ) மேகங்களிலும், அந்த ஜாத வேதஸை (வைஸ்வானரன்) ஒளிக்கதிர்கள் மேல்நோக்கித் தாங்குகின்றன. எல்லாரும் காண சூர்யனை (கிரணங்கள்) தாங்குகின்றன). ஹே, சிருஷ்டியை நுகத்தடியில் தாங்கும் எருதுகள் போன்றவர்களே, வேத சப்தமல்லாதவற்றை தள்ளியவர்களே, ஞானிகளை அழிக்காதவர்களே, பிரஹ்ம ஞானத்தை தூண்டுபவர்களே (சூரியன், வைஸ்வானர அக்னி);

(சூர்யனே) வருணனின் சிருஷ்டிக்கு ஆதாரஸ்தம்ப மாய் உள்ளாய். (வைஸ்வானரனே) வருணனின் சிருஷ்டி ஆதாரஸ்தம்பத்திலிருந்து வெளிப்படும் சிருஷ்டியாக உள்ளாய் (இவ்வாறு அறிவதால்) வருணபாசம் உதறித் தள்ளப்பட்டது.

## அனுவாகம் 9

"பிரச்யவஸ்வ ... வருணஸ்யபாச:"

புவர்லோக பதியே (சோமனே) அனைத்து நிலைகளிலும் பாய்ந்து செல்வாயாக. உன்னை எதிர்சக்தி தடுக்கவேண்டாம். உன் பாதையில் வழிமறிக்கும் சக்திகள் உன்னைத் தடுக்கவேண்டாம். பருந்து ஆகி நீ எங்கள் யஜமானன் கிருஹத்தை அடைவாயாக. தேவர்களால் நன்கு இயற்றப்பட்ட (யக்ஞத்தில்) யஜமானனுடைய மங்களமான வழியாய் உள்ளாய். நாங்களும் உன் வழியை அடைகிறோம். மங்களத்தை அடைவிப்பதும், தடை களற்றதும் ஆன எவ்வழியால் அனைத்து எதிரிகளும் தள்ளப்படுகின்றனர், செல்வங்களை அடைகின்றான்.

சரணமடைகிறேன் -மித்ரனின், வருணனின் கண்களாகிய மஹத்தான (சூர்ய)தேவனிடம். அந்த யக்ஞ நியமத்தால் வணங்கப்படுகிறான். தூரத்தில் தெரிபவனும், தேவர்களைப் பிறப்பிக்கும் பிரக்ஞா ரூபமானவனுக்கு, வானத்தை உய்விக்கும் புத்ரனுக்கு, சூரியனுக்கு ஆராதனை செய்யப்படுகிறது. வருணனின் ஆதாரஸ்தம்பமாக

உள்ளாய் (வைஸ்வானரனாக) வருணனுடைய ஆதாரஸ்தம்பத்திலிருந்து பெருகும் சிருஷ்டியாக உள்ளாய். வருணனின் பாசம் களையப்பட்டது.

## அனுவாகம் 10

"அக்னேராதித்யமசி ... சுவிதேமாதா:"

விஷ்ணு(சவிதா)விற்காக, அக்னியின் அதிதிசத்காரமாய் நீ (வருணன்) உள்ளாய். சோமனின் அதிதி சத்காரமாய் விஷ்ணுவிற்காக நீ உள்ளாய். அதிதியின் அதிதி சத்காரமாய் விஷ்ணுவிற்காக நீ உள்ளாய். செல்வ புஷ்டியை அளிக்கும் அக்னிக்காக நீ, சோமனை சுமந்து வரும் பருந்து ஆன விஷ்ணு (சவிதாவிற்காக) நீ, எந்த உன்னுடைய நிலைகளை ஹவிஸ்ஸினால் ஆராதிக்கிறார்களோ, அந்த உன்னுடைய எல்லா நிலைகளும் யக்ஞத்தால் ஆராதிக்கப்படட்டும்.

கிருஹங்களின் செல்வங்களை அருளுபவனும், கஷ்டங்களிலிருந்து கரை சேர்ப்பவனும் மங்களமான வீரனும், புத்ரபௌத்ராதிகளை அழிக்காதவனும் ஆன சோமனே, எல்லா நிலைகளிலும் பிரவேசித்து அருள்புரி. அதிதியின் மடியாக உள்ளாய். அதிதியின் மடியில் அமர்வாயாக.

விரதங்களைத் தாங்கும் வருணனாக உள்ளாய். வருணனின் தன்மையாக உள்ளாய். தேவர்களின் நட்பிலிருந்து இகபர சௌக்யம். (எங்களுக்கு உண்டாகட்டும்). தேவர்களின் யக்ஞகார்யத்தில் நாங்கள் தவறுகள் செய்யாமல் இருப்போமாக. வாழ்வாகிய பிராணனுக்காக உன்னைக் கைக்கொள்கிறேன். எங்கும் பரந்த லோகங்களின் பதியான பூஷணின் அருளுக்காக கைக்கொள்கிறேன். தன்னில் உண்டானவனாகிய அக்னியின் அருளுக்காக உன்னைக் கைக்கொள்கிறேன். இந்திரன் அருளுக்காக உன்னைக் கைக்கொள்கிறேன். மிகுந்த சக்தி வாய்ந்த பலவானாகிய இந்திரனின் அருளுக்காக உன்னைக் கைக்கொள்கிறேன். எல்லோரினும் வலியவன். யாராலும் வெல்ல முடியாதவன். தேவர்களின் பலம்.

யாராலும் சபிக்க முடியாதவன் நீ (சோமன்). தீக்ஷாபதியான சவிதா விஷ்ணு எனக்கு தீக்ஷையை அருளட்டும். தபஸை தபஸ்பதி அக்னி விரைவாக அருளட்டும். சத்யத்தை அடைவேனாக. நல்வழியில் என்னை நிலைநிறுத்துவாயாக.

## அனுவாகம் 11

**"அம்சுரம்சுஸ்தே ... அபாவதீம்ஸ்வாஹா"**

சோமதேவனே உன் (அமிருத) கிரணம் கிரணமாக முக்யமான செல்வத்தை உடைய இந்த்ரனுக்காக வளரட்டும். உனக்காக இந்த்ரன் வளரட்டும். இந்த்ரனுக்காக நீ செழிப்பாயாக. நண்பர்களான ரித்விக்குகளை தனத்தினாலும், புத்தியினாலும் வளர்விப்பாயாக. சோமதேவனே உன்னுடைய மங்களமான ரசத்தையும், விரும்பத்தக்க சிரேஷ்டமான அன்னத்தையும் யக்ஞத்தை நடத்துவிப்பவர்களையும் அடைவோமாக. வானமே சரண் அடைகிறோம். விரதத்தைக் காக்கும் அக்னியே, நீ விரதங்களின் விரதத்தைக் காப்போன். எது என்னுடைய இந்த உடல். அது உன்னுள். எது உன்னுடைய இந்த உடல். அது என்னுள். இருவரும் கூடி விரதபதியே விரதம் செய்பவர்களின் விரதங்களை (அனுஷ்டிக்கிறோம்). எந்த ருத்ரரூபமான உடல் உன்னுடையதோ அதனால் எங்களைக் காப்பாற்று.

அந்த உன்னுடைய உடலுக்கு (என்னை) அர்ப்பணிக்கிறேன். எந்த உன்னுடைய உடல் இந்த பிருதிவியில், அந்தரிக்ஷத்தில், வானத்தில் உள்ளதோ அந்த விருத்தி மிகுந்த வானத்தில் விளங்கும் அதனால் உக்ரமான வாக்கையும், பயத்தை அளிக்கும் வாக்கையும் அழிக்கிறேன். இதற்காக என்னை அர்ப்பணிக்கிறேன்.

## அனுவாகம் 12

**"வித்தாயனிமேசி ... புரிஷமசி"**

(வாக்) செல்வத்தின் வழியாக எனக்கு உள்ளாய். (பிரம்ம) தேஜஸின் வழியாக எனக்கு உள்ளாய். அச்சம் அடைந்துள்ள என்னை நீ ரக்ஷிப்பாயாக. ஞானிகளால் அறியப்படும் நபன் என்ற நாமமுடைய அக்னியே (வேதம்)

இந்த பிருதிவியில் வேதரிஷியான அங்கிரஸ் என்று நீ உள்ளாய். ஆயுளினால், எது உன்னுடைய தோல்வியே அடையாத யக்ஞத்தினுடையதானதோ அந்த நாமத்தினால், உன்னைக் கைக்கொள்கிறேன். அக்னியே, அங்கிரஸ் என்ற நீ இரண்டாவதினுடைய (புவ:), மூன்றாவதினுடைய (சுவ:) பிருதிவியில் உள்ளாய். அந்த நீ ஆயுளினால், தோல்வியே அடையாத யக்ஞத்தினுடையதோ அந்த நாமத்தினால், உன்னைக் கைக்கொள்கிறேன். (எதிரிகளை அழிக்கும்) சிம்ஹமமாய் உள்ளாய். (புஷ்டியை அளிக்கும்) மஹிஷியாக உள்ளாய். (ஆயுளையும், புஷ்டியையும்) அகல விரிப்பாயாக. உன்னுடைய யக்ஞபதியான ரித்விக் அகல விரிக்கட்டும். திடமாக உள்ளாய். தேவர்களுக்கு ஞான பிரகாசத்தை அளிப்பாயாக.

பூமியின் செல்வங்களுக்கு அதிபதிகளான வசுக்கள் உன்னை இந்திரிய மூலம் வேத கோஷத்தினால் (வேதம் ஓதும் ரித்விக்குகளால்) உன்னைப் பாதுகாக்கட்டும். மனோவேகத்தை உடையவர் உன்னை பித்ருக்களால் (பிரஜைகள்) தெற்கில் பாதுகாக்கட்டும். ஞானத்தை உடையவர் (வேத ரிஷி, ரித்விக்குகள்) உன்னை ருத்ரர்களால் மேற்கில் பாதுகாக்கட்டும். அனைத்தையும் நடத்தும் விஸ்வகர்மா (பிரம்மன்) உன்னை ஆதித்யர்களால் வடக்கில் பாதுகாக்கட்டும்.

எதிரிகளை அழிக்கும் சிம்ஹியாய் உள்ளாய். உனக்கு அர்ப்பணம். நல்ல பிரஜா சந்ததியை அருளும் சிம்ஹியாய் உள்ளாய். உனக்கு அர்ப்பணம். உயரிய செல்வங்களை அருளும் சிம்ஹியாய் உள்ளாய். உனக்கு அர்ப்பணம். ஆதித்யன் விதித்த கர்மங்களை செய்யும் சக்தியை அருளும் சிம்ஹியாய் உள்ளாய். உனக்கு அர்ப்பணம். சிம்ஹியாய் உள்ளாய். தேவர்களை விரும்பும் யஜமானனுக்கு தேவர்களை சுமந்து வருவாயாக. உனக்கு அர்ப்பணம். ஜீவராசிகளுக்கு எல்லாம் ஆயுளாக உள்ளாய். பூமியை (சரீரத்தை) திடப்படுத்து. திடசக்தியில் வசிக்கும் நீ அந்தரிக்ஷத்தை (செயலை) திடப்படுத்து. வழுவாத நிலையில் உள்ள நீ வானத்தை (மனதைத் திடப்படுத்து). அக்னியினுடைய ஞானஒளியாய் உள்ளாய். அக்னியினுடைய செல்வச் செழிப்பாய் உள்ளாய் (வாக்).

## அனுவாகம் 13

**"யுஞ்சதேமன ... விஷ்ணவேத்வா"**

ஞானவானாகிய அக்னியின் உயரிய ஞானங்கள் மனத்தை (யக்ஞத்தில்) இணைக்கின்றன. புத்தி சக்திகளை (யக்ஞத்தில்) இணைக்கின்றன. வழியை அறிந்த ஒருவனே ஆகிய (அக்னி) பலவிதமான (வேத மந்த்ரங்களால் யக்ஞத்தைத் தாங்குகிறார். (அதனால்) மஹத்தான சவித்ரு தேவனின் எல்லா விதமான ஸ்துதிகளையும் நடத்து விக்கிறார். மங்களமான வாக் ஆகிய தேவனே (அக்னி) வழிகளை மனதில் தோற்றுவிப்பீராக. மனம் புத்தி தேவர்களால் கேட்கப்படுபவர்கள். தேவர்களின் மனதில் கோஷத்தை எழுப்புவார்களாக. எங்களுக்கு வீர்யம் மிக்க பிரஜைகள் உண்டாவார்களாக. யக்ஞகர்மங்களில் எவனை நாங்கள் அனைவரும் பின்பற்றுவோமோ, எவனை அனுசரித்து வாழ்வோமோ, எவன் பலவிதமான செல்வங்களை உடையவனாய் உள்ளானோ (அவனை அடைவோமாக)

இதை (பதத்தை) விஷ்ணு (சவிதா) பகுத்து நடந்தார். மூன்று பகுதிகளாக அமைத்தார். இவருடைய கால்தூசி போன்ற உலகங்களை ஒன்றுசேர்த்தார். அன்னங்களை உடையவர்களும், பசுக்களை உடையவர்களும் ஆக (இந்த உலகங்கள்) உண்டாயின. மங்களமான மேய்ச்சல் நிலங்களை உடையவர்களும், எண்ணங்களை தோற்று விப்பவர்களும், புகழை அடைவிப்பவர்களுமான தியாவா-பிருதிவிக்களை விஷ்ணு வெவ்வேறாக ஸ்தாபித்தார். இவற்றை விஷ்ணு சுற்றிலும் தன் சக்தியால் தாங்கினார். முன்னே சென்று வழிகளைக் (யக்ஞம்) கல்பிப்பவர்கள், மேலே யக்ஞத்தை நடத்திச் செல்வார் களாக. எங்களை தேவர்களுடையது அல்லாத வழியில் செலுத்தாமல் இருப்பார்களாக. இந்த பிருதிவியின் செழிப்பான இடங்களில் மகிழ்வோமாக. வானத்தி லிருந்தோ, பூமியிலிருந்தோ, மஹத்திலிருந்தோ, ஹேவிஷ்ணோ, அந்தரிக்ஷத்திலிருந்தோ. இரு கைகளிலும் நிரப்புவாயாக. பலவகையான செல்வங்களைக் கொடுப்பா யாக. உனது வலது கையாலும், இடது கையாலும்.

விஷ்ணுவினுடைய அதிவேகமான வீரம்மிக்க செயல்களைப் பேசுகிறேன். எவர் இந்த பிருதிவிக்களையும் ஒளிமிக்க உலகங்களையும் அளந்து ஸ்தாபித்தாரோ (அவரைப் பற்றி) பின்னர் அதனுடனே ஒன்றி நிற்கிறாரோ, பரந்து சென்று பகுத்து நடந்தாரோ (ஹே, அந்த உலகங்களே) விஷ்ணுவின் நெற்றியாக உள்ளாய், விஷ்ணுவின் பிருஷ்டபாகமாக உள்ளாய், விஷ்ணுவின் வாயின் நுனிகளாக உள்ளாய். விஷ்ணு விளங்கும் சரடாக உள்ளாய். விஷ்ணுவின் ஸ்திரத்தன்மையாக உள்ளாய். (இவை அனைத்தும்) விஷ்ணுவிற்காக உள்ளாய்.

## அனுவாகம் 14

"க்ருணஷ்வபாஜ: .... அதேவீ:"

1. சேனையைப் போன்ற பலத்தை அளிப்பாயாக. ராஜாவைப் போன்று உன் மந்திரிகளுடன் எங்கள் பயத்தை அகற்ற வருவாயாக. விரைந்து வரும் ராக்ஷசர்களுடைய படையை விரட்டிக் கொண்டு, அவர்களுடைய அஸ்த்ரங்களை அழித்துக் கொண்டு உள்ளாய். தபிக்கும் அஸ்த்ரங்களால் (அவர்களை) அழிப்பாயாக.

(நோக்குக. ராக்ஷசர்கள் நம் மனதில் அஹங்காரத்தையும், சுயநலத்தையும் உண்டுபண்ணும் சக்திகள்).

2. உன்னுடைய சுழலும், விரைவான, விழும் (அஸ்த்ரங்களால்) ஜ்வலித்துக் கொண்டு வலிமையுடன் எரிப்பாயாக. எங்கும் ஜ்வலித்துக் கொண்டு, தஹிக்கும் வாயிலிருந்து விழும் தடுக்க முடியாத அஸ்த்ரங்களை விடுவாயாக. (வாயிலிருந்து விழும் அஸ்த்ரங்கள் வேத மந்த்ரங்கள்).

3. ஹே அக்னியே, எங்களுடைய தூரத்திலிருக்கும் பாபத்தை தூண்டும் சக்திகளையும் அல்லது கிட்ட இருந்து பாபத்தை தூண்டும் சக்திகளையும் அதிவிரைவாகச் செல்லும் உன்னுடைய பாசத்தால் கட்டுவாயாக. உன்னை பயத்தால் வெற்றிகொள்ளும் எந்த சக்தியும் இல்லை. இந்த பிரஜைகளை எவராலும் ஹிம்சிக்கப்படாதவனாக உள்ள நீ காப்பாயாக.

(தூரத்தில் இருந்து தூண்டும் சக்திகள் - வெளி உலகத்தில் அநியாய வழியில் அடையும் செல்வம், மது,

சாஸ்த்ர விரோதமான ஸ்திரீ, புருஷ சம்போகங்கள். கிட்ட இருக்கும் சக்திகள். நம் மனதில் எழும் அஹங்கார, சுயநல எண்ணங்கள்).

4. ஹே அக்னியே, எழுவாயாக. கூர்மையான ஆயுதத்தை உடையவனே (எங்கள்) உள்ளே விரிந்து படர்வாயாக. மனதில் உள்ள அசுர சக்திகளை எரிப்பாயாக. எவர் எங்களுடைய பேராசை, பொறாமை போன்ற அசுரசக்திகளால் தூண்டப்பட்ட எண்ணங்களை சமித்தாகச் செய்தாரோ அவர் அதைக் கீழே கட்டையைப் போல் முழுதும் எரிப்பாராக.

5. மேலே இருப்பாயாக (தீயசக்திகளை) அழிப்பாயாக. தேவ நடப்புகளை நாங்கள் அறியுமாறு செய்வாயாக. துன்புறுத்தும் சக்திகளையும், எங்கள் உள்ளேயே உறவாடும் தீயசக்திகளையும், வெளியே இருக்கும் தீயசக்திகளையும் ஸ்திரமில்லாமல் செய்வாயாக. சத்ருக்களை அழிப்பாயாக.

6. இளையோனே, மங்களமான வழியைக் காட்டு விப்போனே, வேத மந்த்ரமே, எவன் உன்னை ஸ்துதி செய்கிறானோ, அவன் உன் நல் எண்ணத்தை அறிகிறான். இவனுக்கு எல்லா நாட்களும் நல்ல நாட்களே. ஸ்வாமியே, ஞானியே, செல்வமும் புகழும் (இவனுக்கு) அருள்வாயாக.

7. அக்னியே, அவன் நல்ல பாக்யமுள்ளவனாகவும், நல்ல கொடையாளியுமாக இருக்கட்டும். எவன் உன்னை எப்போதும் ஹவிஸ்ஸினாலும், மந்த்ரங்களாலும் பிரியப் படுத்துகிறானோ, (அவனை) தன்னுடைய ஆயுட்காலத் திலும் வீட்டிலும் இவனுக்கு எல்லாம் சுதினமாக அந்த இஷ்டியானது அமைக்கிறது.

8. உன்னுடைய நல்ல மதியை பூஜிக்கிறேன். திரும்ப திரும்ப உன்னைக் குறித்த இந்த ஸ்துதி கோஷத்தை இந்த உலகில் முடிந்தவாறு செய்கிறேன். மங்களமான செல்வங்களுடனும், நல்ல பிரஜைகளுடனும் உன்னைச் சுற்றி அலங்காரங்கள் செய்கிறோம். தினம் தினமும் எங்களுக்கு க்ஷத்ரியபலத்தை அருள்வாயாக.

9. இந்த உலகில் உன்னை மிகவும் ஆசரிக்கவேண்டும். (குரு - ஆசார்யன் - வழி காட்டுபவன்). இரவும் பகலும் எல்லா நாட்களிலும் என்னுள் பிரகாசிப்பவனாகிய

(உன்னை) திருப்தி உடையவர்களாக, நல்ல மனது உடையவர்களாக உன்னை பூஜிப்போமாக. ஜனங்களுக்குத் தகுந்த செல்வத்தையோ, புகழையோ எங்களுடையதாக செய்து கொண்டு (இருப்போமாக).

10. எவன் வலிமை மிக்கதும், நலம் பயப்பதுமான மனச் செல்வம் என்ற (மனோ)ரதத்தால் உன்னை அடைகிறோனோ அவனைக் கரையேற்றுபவனாக ஆகிறாய். எவன் உன்னுடைய அதிதிசத்காரத்தை எப்பொழுதும் செய்து மகிழ்விக்கிறானோ அவனுடைய நண்பன் நீ.

11. விஷ்ணு (அ) சவிதாவினால் பதங்களாக பகுக்கப் பட்ட) மஹர் லோகத்தை உன்னுடைய உறவினால் அடைந்த வேத வசனங்களால் உடைத்தெறிகிறேன். (முதல் பதத்தை அடைகிறேன்) அந்த வேத வசனங்கள் பிதா போன்ற பரம ஞானியிடமிருந்து வந்து அடைந்தன. தேவர்களை அழைப்பவனே, இளையோனே மங்களமான பிரக்ஞையை உடையவனே, மனத்தை அடக்கியவனே நீதான் இந்த எங்களுடைய வேத வசனங்களை (பொருளை) அறிந்துள்ளாய்.

12. ஸ்வப்ன ஜன்மா இல்லாதவை (எப்போது விழிப்புடன் இருப்பவை), விரைவில் கடக்க உதவியா யிருப்பவை, இன்முகம் கொண்டவை, சோம்ப லில்லாதவை, ஸ்ரமத்தை உண்டு பண்ணாதவை. ஆகிய உன்னுடைய காக்கும் சக்திகள் மங்கள முண்டாக்குபவை, அக்னியே, மோஹமடையாதவனே, உன்னுடைய உடலில் அமர்ந்து எங்களைக் காப்பதாக.

13. அக்னியே உன்னுடைய எந்த காக்கும் சக்திகள் (அஹங்காரத்தின் விளைவாகிய) சுயநலத்தைக் கண்டு அந்த இருள்மிகுந்த துன்பத்திலிருந்து எங்களைக் காத்தனரோ (அவற்றை) நற்செயல் உடையவனே, அனைத்தையும் அறிந்தவனே, எப்பொழுதும் வெற்றி கொள்ள விழையும் தீயசக்திகள் மேலோங்காதவாறு, அவற்றை (காக்கும் சக்திகளை) காப்பாயாக.

14. உன்னால் நாங்கள் அழைத்துச் செல்லப் படுபவர்கள், உன்னால் ரக்ஷிக்கப்படுபவர்கள், உன்னுடைய

*வழிகாட்டுதலில் சக்தியை அடைவோமாக. சத்யத்தை விஸ்தரிப்பவனே, இகபர நலங்களை அளிப்பாயாக. உன் வலிமையை தானே முழுதும் அறிந்தவனே, இதை கிரமமாக அருள்வாயாக.*

*(இக நலம் வாழ்க்கைக்கும், பரநலம் ஞானத்திற்கும்)*

*15. அக்னியே, உன்னுடைய பொருள் நிறைந்த வேதஸ்துதியை சமித்துடன் சமர்ப்பிக்கிறோம், நீ ஏற்றுக்கொள்வதற்காக. நண்பர்களில் மஹத்தானவனே, துரோகிகள், நிந்தனை செய்பவர்கள், அசத்யத்தைச் சொல்பவர்கள் ஆகிய எங்கள் எதிரிகளாகிய ராக்ஷசர்களை எரிப்பாயாக. எங்களைக் காப்பாயாக.*

*16. ராக்ஷசர்களை அழிப்பவனை, சக்தி படைத்தவனை, நண்பனை, பரந்து விரிந்தவனை என்னுள்ளே பிரகாசிக்கச் செய்கிறேன். (அதனால்) ரக்ஷிக்கப்படுகிறேன். (செயல்களால்) எண்ணங்களால் தூண்டப்பட்டு கூர்மையுடன் ஜ்வலிக்கும் அக்னி. அவர் எங்களைப் பகலிலும் இரவிலும் காக்கட்டும்.*

*17. அக்னி பெரிய ஜ்யோதியினால் பிரகாசிக்கிறார். மஹத்தில் உள்ள அனைத்தையும் பிரத்யக்ஷமாகச் செய்கிறார். வெல்வதற்கு அரிதான அசுர மாயைகளை கூர்மையாக்கப்பட்ட கொம்பினால் (புத்தியால்) ராக்ஷச சக்திகளை அடக்குவதனால், வெல்கிறார்.*

*18. மேலும் அக்னியுடைய பேரொலியை எழுப்புபவை, கூர்மையான ஆயுதங்களை உடையவை, ராக்ஷச சக்திகளை அழிப்பதற்காகவே (மனோ) ஆகாசத்தில் இருப்பதாக. உத்சாஹத்துடன் கூடிய சித்ஸ்வரூபமான இந்த (அக்னியுடைய) பிரகாசிக்கும் (ஞான) ஒளிகள் (ராக்ஷச சக்திகளை) அழிக்கின்றன. அசுர சக்திகள் அந்த ஒளிகளை மறைக்க இயலாது.*



# பிரஸ்னம் 3

## அனுவாகம் 1

**"தேவஸ்ய ... இந்த்ராயத்வா"**

*(வாக் தேவதைகளே) சவித்ரு தேவனின் சிருஷ்டி கார்யத்தில் அஸ்வினி தேவர்களின் புஜங்களாலும் பூஷ்ணனின் கைகளாலும் உன்னை என்னுள் அடைகிறேன். கடினமான பிரதேசத்தில் பிரவேசிக்கும் சக்தியுள்ளவளாய் இருக்கிறாய். மென்மையான பெண்மை குணம் உள்ளவளாகவும் இருக்கிறாய். ராக்ஷச சக்திகள் சுற்றிலும் அழிக்கப்பட்டன. பொறாமை முதலிய தீய சக்திக்ள் சுற்றிலும் அழிக்கப்பட்டன. நான் இந்த ராக்ஷசனின் கழுத்தை வெட்டுகிறேன். எவன் எங்களை வெறுக்கிறோனோ, எவனை நாங்களும் வெறுக்கிறோமோ அந்த இவனுடைய கழுத்தை வெட்டுகிறேன். வானத்திற்காக உன்னை (நல்ல மனம் அடைவதற்காக), அந்தரிக்ஷத்திற்காக உன்னை (நல்ல செயலை அடைவதற்காக), பிருதிவிக்காக உன்னை (நல்ல சரீரம், சுற்றுச் சுழலை அடைவதற்காக). லோகம் புனிதமாகட்டும். பித்ருக்கள் வசிக்கும் யவதான்யமாக உள்ளாய். தீய சக்திகளை வெளியே தள்ளுவாயாக. பித்ருக்களின் ஆசனமாக உள்ளாய். வானத்தை (மனதை) மேலே தாங்கு வாயாக. அந்தரிக்ஷத்தை (செயலை) மகிழ்விப்பாயாக. பிருதிவியை (சரீரத்தை) விருத்தி செய்வாயாக. த்யுதானம் என்ற பிரக்ஞா ஒளியூட்டும் மாருதத்தை (சரீரத்தில்) நிலை நிறுத்து. மித்ரா வருணர்களின் ஸ்திரமான தர்மத்தினால், பிராம்மணத்வம், க்ஷத்ரியத்வம், மங்களமான பிரஜைகள், செல்வங்கள் ஆகியவற்றை திரட்டுகிறேன். பிரஹ்ம சக்திகளை, க்ஷத்ரிய சக்திகளை, பிரஜைகளை, செல்வங்களை விருத்தி செய்வாயாக. ஞானத்தினால் (கிருதத்தினால்) தியாவா ப்ருதிவிகளை மகிழ்விப்பாயாக. இந்திரனின் ஆசனமாக உள்ளாய். எல்லா ஜனங்களின் வாசஸ்தலமாக உள்ளாய். உன்னைச் சுற்றிலும் வேதங்கள் ஓதுபவர்களின் வார்த்தைகள் இவை ஆகட்டும். தீர்க்காயுள் சம்பூர்ணமாகவும், மகிழ்விப்பவை மகிழ்விப்பவனவாகவும் ஆகட்டும். இந்திரனின் (சக்திகள் கோக்கப்படும்) சரடாக*

உள்ளாய். இந்திரனுக்கு அவனுடைய இந்த்ரத்வ தன்மையாக உள்ளாய் நீ (வாக்).

**அனுவாகம் 2**

**"ரக்ஷோஹணோ ... வாசம்வத"**

**ரக்ஷோஹணோ வலகஹணோ**
**வைஷ்ணவான் (வாக்)**

1) கனாமி – (பரா வாக்) மந்த்ரங்களை ஹ்ருதயத்தில் தோண்டி எடுக்கிறேன்.

2) ப்ரோக்ஷாமி – (பஶ்யந்தீ) அவற்றை சுத்தப்படுத்துகிறேன்.

3) அவநயாமி – (மத்யமா) – மனோ உலகத்திற்கு கொண்டு வருகிறேன்.

4) அவஸ்திருணாமி (வைகரீ) அக்ஷரங்களைப் பரப்புகிறேன்

5) அபிஜுஹோமி (மந்த்ரம்) – மனதால் மந்த்ரங்களை அர்ப்பணிக்கிறேன்.

வைஷ்ணவீ (இருமை) – மனம் – வாக்கு (அ) வாய் மேல் தாடை – கீழ் தாடை.

1) உபததாமி — கூட தாங்குகிறேன்.

2) பர்யூஹாமி — ஒன்றுசேர்க்கிறேன்.

3) பரிஸ்திருணாமி — பரப்பி வைக்கிறேன்.

4) வாசம் வத — சொற் தொடர்கள் புகல்வாயாக.

ராக்ஷச சக்திகளை அழிப்பது, அக்ஞான சக்திகளை அழிப்பது ஆகிய எங்கும் நிறைந்திருப்பவரின் (விஷ்ணு (அ) சவிதா) பராவாக் பீஜங்களை ஹ்ருதயத்திலிருந்து தோண்டி எடுக்கிறேன். (உடன் வரும்) இந்த அஞ்ஞான சக்தியை வெளியே எறிகிறேன். எவன் எங்கள் மனதில் உள்ளவனோ எவன் எங்கள் மனதில் இல்லாதவனோ (அ-து) பரம் வரைக்கும் ஹ்ருதயத்தில் பரந்திருக்கும் அக்ஞான சக்திகள் ஆகிய தோண்டி எடுக்கப்பட்ட இவனை வெளியே தள்ளுகிறேன். எவன் எங்கள் மனதில் உள்ளவனோ எவன் எங்கள் இதயத்தில் உள்ளவனோ தீய எண்ணங்களைப் பரப்புபவனாகிய அவனை காயத்ரீ சந்தஸால் கால் கீழ் கட்டிப் போடப்பட்டான். பின் என்ன. இங்கு

மங்களந்தான். எங்களுடன் பலவிதமாகப் பிரகாசிக்கிறாய். எதிரிகளை அழிப்பவனே (வைஷ்ணவன்) எல்லாவற்றிலும் பிரகாசிக்கிறாய். எதிரிகளை அழிப்பவனே தன்னைப் பிரகாசிக்கிறாய். பாபிகளை அழிப்பவனே எல்லா லோகங்களிலும் பிரகாசிக்கிறாய். எல்லாவற்றையும் அழிக்கும் சக்திகளை அழிப்பவனே, ராக்ஷச சக்திகளை அழிப்பது, அஞ்ஞான சக்திகளை அழிப்பது ஆகிய வைஷ்ணவர்களை (பராவாக் பீஜங்களை) மறைப்பை அகற்றி புனிதப்படுத்துகிறேன். ராக்ஷச சக்திகளை அழிப்பது, அக்ஞான சக்திகளை அழிப்பது ஆன் வைஷ்ணவர்களை (பராவாக் பீஜங்களை) கீழே பஸ்யந்தீ நிலைக்குக் கொண்டுவருகிறேன். பசி நோயைப் போக்கும் யவதான்யமாய் உள்ளாய். நாங்கள் வெறுக்கும் தீய சக்திகளை வெளியே தள்ளுவாயாக. ராக்ஷச சக்தி, அக்ஞான சக்திகளை அழிக்கும் வைஷ்ணவர்களை (மத்யமா வாக் மந்த்ர பீஜங்களாக) கீழே (மனதில்) பரப்புகிறேன். ராக்ஷச சக்தி, அக்ஞான சக்திகளை அழிக்கும் வைஷ்ணவர்களை (வைகரீ வாக் மந்த்ர பீஜங்களாக) வாயினால் அர்ப்பணிக்கிறேன்.

ராக்ஷச சக்திகளை, அக்ஞான சக்திகளை அழிக்கும் இரு வைஷ்ணவீ சக்திகளால் (மனம், வாயால்) தாங்கு கிறேன். ராக்ஷச சக்தி, அக்ஞான சக்திகளை அழிக்கும் இரு வைஷ்ணவீ சக்திகளால் (அக்ஷர பீஜங்களை வார்த்தை களாக) ஒன்று கூட்டுகிறேன். ராக்ஷச சக்திகளை அழிக்கும், அக்ஞான சக்திகளை அழிக்கும் இரு வைஷ்ணவீ சக்திகளால் (மந்த்ரவாக்யங்களை) பரப்புகிறேன். ராக்ஷச சக்திகளை அழிக்கும் அக்ஞான சக்திகளை அழிக்கும் இரு வைஷ்ணவீ சக்திகளே பெருகுபவளாக இருக்கிறாய். பெருகும் அரைகல் மாதிரி, பெருகும் மந்த்ர வசனங்களை ஜீவாத்மாவில் ஆட்சி புரியும் இந்த்ரனுக்காக சொல்வா யாக.

## அனுவாகம் 3

**"விபூரசி ... மாஹிம்ஸீ:**

பலவித ஜீவராசிகளாக உள்ளாய். (காலச் சுழலில்) எல்லாவற்றையும் சுமந்து செல்கிறாய். (ஆஹவனீய அக்னி)

தேவர்களை அழைத்து வருபவனாக உள்ளாய். தேவர்கள் விரும்பும் ஹவ்யங்களை (ஜீவராசிகள்) சுமப்பவனாகவும் உள்ளாய் (வைஸ்வானர அக்னி) விரைந்து காப்பவனாக உள்ளாய். சீரிய ஞானத்தை அடைவிப்பவனாக உள்ளாய். மஹான் ஆக உள்ளாய். அனைத்தையும் அறிந்தவனாக உள்ளாய். கண்ணுக்கு இனியவனாக உள்ளாய். மங்கள மானவை என்று கூறப்பட்ட வழிகளை காண்பிப்பவனாக உள்ளாய். தன் வழியில் வந்து விழும் சத்ருக்களை எரிப்பவன். நலங்களைக் கெடுத்து வருந்தச் செய்யும் சத்ருக்களுக்கு எதிரி. யாவரையும் காக்க விரும்புவனாக உள்ளாய். எல்லோராலும் பின்பற்றப்படுபவன் (குரு), புனிதப்படுத்துபவன் ஆக உள்ளாய். சிறிய ஜீவராசிகளில் உள்ளவன். எல்லா ஜீவராசிகளும் உன்னுள் உறைபவனாக உள்ளாய். புனிதம் அடையச் செய்பவன்; சீரிய செயல் கொண்ட வழியை உடையவனாக உள்ளாய். சரீரங்களில் ஆகாச ரூபமாயுள்ளவன், விநாசமில்லாதவனாக உள்ளாய். ஜீவராசிகளாகிய ஹவ்யங்களைப் பக்குவப்படுத்துபவன். ருதத்தின் இருப்பிடமாக உள்ளாய். சூர்யனின் ஜோதி, பரம்பொருளாகிய பிரம்ம ஜோதியாக உள்ளாய். சுகத்தின் இருப்பிடம், பிறப்பில்லாதவனாக உள்ளாய். எல்லா வற்றையும் உள்ளடக்கிய ஒரே நிலை, எதிரிகளை அழிப்பவனாக உள்ளாய். ஸ்ரத்தையுள்ளவர் ஹ்ருதயத்தில் இருப்பவன் ஆகிய நீ குரூரமான ருத்ர முகத்தினால், அக்னியே, என்னைக் காப்பாயாக. என்னுள் பூர்ணமாக அனுக்ரஹிப்பாயாக. என்னை ஹிம்சிக்க வேண்டவே வேண்டாம்.

## அனுவாகம் 4

**"த்வம் சோம ... விரதினோர்விரதானி"**

சோமனே, நீ சரீரத்தை அழிக்கும் சக்திகளுக்கும், எங்களை வெறுக்கும் சக்திகளுக்கும், மற்றும் வேறுவிதமான நாசம் விளைவிக்கும் சக்திகளுக்கும் பரிஹாரமான பாதுகாப்போனாக உள்ளாய். பரந்த செல்வங்களை அளிப்பவனான உனக்கு அர்ப்பணம். அடைக்கலம் அடையத்தக்கவனும், ஆஜ்யத்தை அருந்தி மகிழ்பவனும் ஆன உனக்கு அர்ப்பணம்.

இந்த அக்னி எங்களுக்கு விரும்பிய நலங்களைச் செய்வாராக. இவர் போர்களில் எதிரிகளை நாசம் செய்து கொண்டு முன்னேறுவாராக. மேலும் ஜெயத்தினால் மிக்க மகிழ்ச்சியுடைய மனத்தினனாக இவர் எதிரிகளை ஜெயிப்பாராக. அன்னம் (அ) சக்தி அடையக்கூடியதில் இவர் அன்னம் (அ) சக்தியை வென்று அடையட்டும். எங்கும் நிறைந்தவனாகிய விஷ்ணு (அக்னியே) மஹத்தான வெற்றியுடையோன் ஆகுக. மஹத்தான வாசஸ்தலத்தை எங்களுக்கு அருள்வாயாக.

ஞானத்தின் (கிருதம்) மூலமே, ஞானத்தை (வேத கோஷத்தை) பருகு. யக்ஞ பதியை (யஜமானன்) மேல் நிலைக்கு அழைத்துச் செல்வாயாக. வழியை அறிந்த சோமன் செல்கிறான். தேவர்களை அடைகிறார். (சிருஷ்டியால்) அலங்கரிக்கப்பட்ட ருதத்தில் மூலத்தை அடைகிறார். (ருதத்தின் மூலமே) அதிதியின் ஆசனமாக உள்ளாய். (சோமனே) அதிதியின் மடியில் அமர்வாயாக. சவித்ரு தேவனே, தேவர்களாகிய உங்களுடையவன் இந்த சோமன். அவனை ரக்ஷிப்பீர்களாக. உங்களுடைய இவன் ஹிம்சிக்கப்படாது இருப்பானாக. சோமதேவனே, நீ தேவர்களை கூடி அடைவது போல நான் (ரிஷி) இந்த மனிதன். (ரூபத்தில்) மனிதர்கள் கூட, பிரஜைகள் கூட, செல்வ நலங்களுடன் கூட (அடைகிறேன்). தேவர்களிடம் சரணம் அடைகிறேன். பித்ருக்களுக்கு ஸ்வதா என்று என்னையே அளிக்கிறேன். இந்த நான் (மனித ரூபத்தில் ரிஷி) வருணனின் பாசத்திலிருந்து விடுபட்டு சுவர்க்கத்தில் வைஸ்வானர ஜோதியை உள்ளே (ஹ்ருதயத்தில்) காண்கிறேன்.

அக்னியே, விரதபதியே, நீ எல்லா விரதங்களுக்கும் விரதபதியாக உள்ளாய். என்னுடைய உடல் எது உன்னுள் உண்டானதோ இந்த அவள் (உடல்) என்னுள். உன்னுடைய எந்த உடல் என்னுள் உண்டானதோ இந்த அவள் (உடல்) உன்னுள். விரதபதியே எந்தவிதமாகவும் நம்முடைய விரதிகளுடைய விரதங்கள் (இருவராலும் அனுஷ்டிக்கப் படுகின்றன).

## அனுவாகம் 5

"அத்யன்யானகான் ... ராயஸ்ஸுவீர:"

*மற்றவர்கள் பலரை (ரிஷியாகிய நான்) கடந்து வந்தேன். மற்றும் பலரை நோக்கிச் செல்லவில்லை. இந்த உலகில் உள்ள உன்னை (யஜமானனை), பரத்தில் உள்ளவற்றால் (சுவர்க்கத்தில் வைஸ்வானரனைக் கண்டு) உன்னை (தகுந்தவன்) என அறிந்தேன். பரத்தில் உள்ளவற்றாலும் இகத்தில் உள்ளவற்றாலும் எங்கும் நிறைந்திருக்கும விஷ்ணு (அ) வைஸ்வானரின் அம்சமாக தேவயக்ஞத்திற்காக உன்னைக் கைக்கொள்கிறேன். சவித்ரு தேவன் உன்னை மகிழ்விக்கும் தூண்டுதல்களால் தொடட்டும். ஓஷதிகள் இவனைக் காக்கட்டும். அந்தரிக்ஷமாகிய கோடரியே, இவனை ஹிம்சிக்கவேண்டாம். திவம் (சுவர்க்கம்) இவனை கூர்மையான (எண்ணங்களால்) சிதைத்துவிட வேண்டாம். அந்தரிக்ஷம் மத்யத்தினால் (ருதத்திற்கு விரோதமான செயல்களால்) ஹிம்சிக்க வேண்டாம். பிருதிவியினால் நல்ல சரீரம் அமையட்டும்.*

*வனஸ்பதியான சோமனே, நூறு மடங்காக இவனுள் வளர்வாயாக. ஆயிரம் மடங்காக நாங்கள் (பிரஜைகள்) வளர்வோமாக.*

*அந்த சிதைவுபடாததும், செல்வம் நிறைந்ததும், நல்ல பிரஜைகளை உண்டுபண்ணுவதும், கூர்மையானதும் ஆன (அந்தரிக்ஷமாகிய) கோடரி மஹத்தான சௌபாக்யத்திற்கு உற்சாஹத்துடன் உன்னை (யஜமானனை) கொண்டு வந்துள்ளது.*

## அனுவாகம் 6

"பிருதிவ்யைத்வா ... கூஹாமி"

*(அந்தரிக்ஷத்தில் உள்ள) பித்ருக்கள் அமர்ந்துள்ள லோகம் உன்னை (வைஸ்வானர அம்சமான யஜமானனை) பிருதிவிக்காக, அந்தரிக்ஷத்திற்காக, வானத்திற்காக புனிதப்படுத்தட்டும்.*

*(வைஸ்வானர அக்னியே) பசிநோயைப் போக்கும் யவதான்யமாக உள்ளாய். எங்களை வெறுப்பவரையும் தீய சக்தியையும் போக்குவாயாக. பித்ருக்களின் உறைவிடமாக உள்ளாய். நன்கு உறைபவனாக உள்ளாய். வழிநடத்தும்*

திக்பாலர்களில் முதலில் செல்பவனாக உள்ளாய். வனஸ்பதியான சோமன் உன்னைச் சார்ந்து உறைகிறான். அவனை அறிவாயாக. சவித்ரு தேவன் உன்னை உயரிய அறிவினால் தீண்டட்டும். ஓஷதிகள் நலம் பயப்பதாக. வானத்தை மேலே தாங்குவாயாக. அந்தரிக்ஷத்தை மகிழ்விப்பாயாக. பிருதிவியை வானம் அந்தரிக்ஷத்தால் விருத்தி செய்வாயாக. அந்த உன்னுடைய வாசஸ்தலங் களுக்கு செல்ல விரும்புகிறோம்.

(வாசஸ்தலம் திவம், அந்தரிக்ஷம், பிருத்வி (அ) மனஸ், செயல், உடல்). எங்கு அறிவு, செயல், உடல் நலங்கள் மிகுந்த வீர்யத்துடன் நடமாடுகின்றனவோ, அங்கு அந்த பரந்து போற்றப்பட்ட மஹாபலமுடைய விஷ்ணு (அ) சவித்ரு தேவனுடைய சிறந்த பரமபதம் பிரகாசிக்கின்றது. விஷ்ணுவினுடைய செயல்களைப் பாருங்கள். இச் செயல்களால் எல்லா விரதங்களையும் பிணைத்துள்ளார். இந்திரனுடைய நெருங்கிய நண்பன். அந்த விஷ்ணுவின் பரமபதத்தை எப்பொழுதும் ஞானிகள் பார்க்கின்றனர். வானத்தில் கண் அகண்ட தூரத்தை எவ்வாறு பார்க்கிறதோ அவ்வாறு.

உன்னிடம் பிராம்மணத்துவம், க்ஷத்ரியத்துவம், மங்களமான பிரஜைகள், செல்வங்கள் ஆகியவற்றை திரட்டுகிறேன். பிரஹ்மசக்திகளை, க்ஷத்ரிய சக்திகளை, பிரஜைகளை, செல்வங்களை விருத்தி செய்வாயாக. எல்லாவற்றாலும் சூழப்பட்டு உள்ளாய். உன்னைச் சுற்றிலும் தெய்வீகமான நலங்கள் சூழட்டும். இந்த யஜமானனை எல்லாவிதமான நலங்களும், மனிதச் சுற்றமும் சூழட்டும். (வைஸ்வானர அம்சமான) உன்னை அந்தரிக்ஷத்தின் உன்னத ஸ்தானத்தில் நல்ல காப்பு உள்ளதில் (யஜமானனுடைய ஹ்ருதயகுஹையில்) ஸ்தாபிக்கிறேன்.

**அனுவாகம் – 7**

**"இஷேத்வோப ... பாகதேயம்"**

அன்னம் உன்னை (வைஸ்வானர அம்சம்) கூட சூழ்ந்துள்ளது. தேவர்களுடன் கூட விஷயத்தில் ருசி உடைய காமனா அக்னி சக்திகள் (உன்னை சூழ்ந்துள்ளன).

பிருஹஸ்பதியே, நலங்களைத் தாங்குவாயாக. உன்னுடைய ஹவ்யங்கள் நற்சுவையுடன் கூடியதாக ஆகட்டும். தேவனாகிய த்வஷ்டாவே, நல்ல ரூபத்தை அருளுவாயாக. நலங்களை உடைய ஆபோதேவிகளே மகிழுங்கள். ஆஹவனீய அக்னியின் உற்பத்தி ஸ்தானமாக உள்ளீர்கள். (வைஸ்வானர அம்சமாகிய கார்ஹபத்ய) அக்னி - சோமனிடம் நிலை பெறுங்கள். எங்கும் பரந்தவனாய் உள்ளாய் (சோமன்) மிகுந்த ஒலி எழுப்புபவனாக உள்ளாய் (அக்னி). ஞான அமிருதத்தால் தீண்டப்பட்டு சக்தி வாய்ந்த ஞான ரேதஸைத் தாங்குங்கள். காயத்ரீ சந்தஸை (சோமனுடன்) கூடிப் பெற்றெடுப்பாயாக. திருஷ்டுப், ஜாகதீ சந்தங்களை (சோமனுடன்) கூடிப் பெற்றெடுப்பாயாக.

எங்களிடம் நீங்கள் இருவரும் (கார்ஹபத்ய (அ) வைஸ்வானர அம்ச அக்னி, ஆஹவனீய அக்னி) ஒருமித்த மனம் உடையவர்களாக, ஒருமித்த வாசம் உடையவர் களாக, பாவமில்லாதவர்களாக (இருந்துகொண்டு) யக்ஞத்தை ஹிம்சிக்க வேண்டாம், யக்ஞபதியை ஹிம்சிக்க வேண்டாம்.

அனைத்து ஜீவராசிகளையும் அறிந்த இருவரும் இப்பொழுது எங்களிடம் மங்களமாய் உண்டாகட்டும். ஆஹவனீய அக்னி (வேத மந்த்ரங்கள்) கார்ஹபத்ய அக்னியில் (யஜமானன்) பிரவேசித்து வளர்கிறது. இந்த ஆஹவனீய அக்னி ரிஷிகளின் புத்ரனும் மஹாராஜனும் ஆக உள்ளவன். அர்ப்பணம் செய்து வேத மந்த்ரத்தால் உனக்கு ஆஹுதி கொடுக்கிறேன். தேவர்களுடைய பாகத்தை இல்லாததாகச் செய்துவிட வேண்டாம்.

## அனுவாகம் – 8

**"ஆதத ... பூயாஸ்ம"**

(வைஸ்வானர அம்சமான) உன்னை தேவர்கள் ஹவி என்று ருதத்தின் பாசத்தினால் பிணைக்கிறேன். மானுட எண்ணங்களை அகற்றி, மூலமாகிய ஆபஸ்களாலும் ஓஷதிகளாலும் தெளிக்கின்றேன். (புனிதமாக்குகிறேன்).

கொள்வதற்கு இனியதும், தேவர்களுடன் கூடியதும், சித் சக்தியுடன் கூடியதுமான ஆபஸ் சக்திகளை உள் வாங்குபவனாக உள்ளாய். இந்த ஹவ்யமாகிய

(யஜமானனை) ஆபோதேவிகளே அருந்துவீர்களாக. இவனை மங்களமான உங்கள் பிராணன் என்று வாயுவினால் அடைவீர்களாக. யக்ஞும் புரியும் (தேவர்கள்) என்று அங்கங்களை அடைவீர்களாக. ஆசிகளால் யக்ஞபதியான யஜமானனை அடைவீர்களாக. (வேத மந்த்ரங்களாகிய) ஞான அமிருதத்தால் தீண்டுபவர்களாக இந்த மிருகம் போன்றவனைக் காப்பாற்றுவீர்களாக.

சகல நலங்களும் அருளுபவர்களே யக்ஞபதியை பிரியம் கொண்டு பரந்த அந்தரிக்ஷத்தில் (ஹ்ருதயத்தில்) உள் புகுவீர்களாக. சமானப் பிரீதியுடன் தேவன் வாயுவினால் இந்த யஜமானனாகிய ஹவிஸ்களை, ஆத்மாவினால் யக்ஞம் புரிவீர்களாக. மங்களமான உடலாக ஆவீர்களாக. அருள் மழையான நீ (ஆபோதேவிகள்) அருள் மழை பொழிகிறாய். யக்ஞத்தில் யக்ஞபதியைத் தாங்குவாயாக. பிருதிவி சம்பந்தமுடைய அனைவரையும் காப்பாற்றுவாயாக.

(சூர்யனே) உனது அழிவில்லாத பரந்து செல்லும் கிரணங்களுக்குச் சரணம். செல்வாயாக, ஞானத்தின் சமூஹம் கூட, பிரஜைகளுடன் கூட, எல்லா நலங்களும் செல்வங்களும் கூட (யஜமானனிடம்)

புனிதமான வாழ்வைத் தாங்குபவர்கள் ஆகிய ஆபோதேவிகளே, புனிதமான நீங்கள் தேவர்களை செயல் புரியத் தூண்டுங்கள். புனிதமடைந்த நாங்கள் உங்களால் சூழப்பட்டவர்களாக உங்களைச் சூழ்ந்து இருப்போமாக.

## அனுவாகம் – 9

**"வாக்த ஆப்யாயதாம் ... மாருதங்கச் சதம்"**

உன்னுடைய (வைஸ்வானர அம்சம்) வாக் முழுமையான வளர்ச்சி அடையட்டும். உன்னுடைய பிராணன் முழுமையான வளர்ச்சி அடையட்டும். உன்னுடைய கண் முழுமையான வளர்ச்சி அடையட்டும். உன்னுடைய காது முழுமையான வளர்ச்சி அடையட்டும். எந்த உன்னுடைய பிராணன்கள் தேய்ந்து போயினவோ, எந்த கண், எந்த காது உன்னுடைய அவலக்ஷணமோ, எது பிறவியிலேயே உண்டோ அந்த அவை இந்த ஞான அமிருதத்தினால் தெளிக்கப்பட்டு புனிதமாகட்டும். உன்னுடைய நாபி

முழுமையாக வளர்ச்சி அடையட்டும். உன்னுடைய குதம் முழுமையான வளர்ச்சி அடையட்டும். புனிதமான நடத்தைகள், மங்களமான ஆபோதேவீகள், ஓஷதிகள் (இவனுள் வளரட்டும்). மங்களம் பிருதிவிக்கு. (சரீரம்) மங்களம் பகலிரவுகளுக்கு (செயல்கள்).

ஓஷதியே இவனைக் காப்பாற்று. கோடரியே (அந்த ரிக்ஷத்தின் வஜ்ராயுதம்) இவனை ஹிம்சிக்க வேண்டாம். இந்த வைஸ்வானர அம்சத்தில் (கார்ஹபத்ய அக்னி) ராக்ஷசர்களுடைய பாகமாக இருக்கும் இந்த கீழானவனை செயலின்மைக்கு அடைவிக்கிறேன். எவன் எங்களை வெறுக்கிறானோ, யாரை நாங்களும் வெறுக்கிறோமோ இவனை செயலின்மைக்கு அடைவிக்கிறேன்.

அன்னமே உன்னை ஞான அமிருதத்தால் தியாவா – பிருத்வி உற்சாகத்துடன் மூடட்டும். சிதைவுபடாதவன், செல்வம் மிகுந்தவன், நல்ல பிரஜைகளை உற்பத்தி செய்பவன், பரந்த அந்தரிக்ஷத்தில் செல்வாயாக. வாயுவே இந்த ஹவிஸ் திவலைகளை பல திக்குகளிலும் பரப்புவாயாக. (ஹவிஸ்ஸை) அர்ப்பணிக்கிறேன். மேலே வானத்தில் மாருதத்தை (வாயுவை நோக்கிச் செல்லட்டும்).

(வைஸ்வானர அம்சம் புனிதப்படுத்தப்பட்டு, யஜமானனின் ஹ்ருதயத்தில் மீண்டும் ஸ்தாபிக்கப்பட்டு, சூக்ஷ்ம சரீரம் முறைப்படியே மங்களமாக அமைக்கப் பெற்று பின்னர் பிராணன்களை அடைய வாயுவிடம் செல்கிறது. அடுத்த அனுவாகத்தில் பிராணன்களின் சேர்க்கை).

## அனுவாகம் 10

**“சந்தேமனஸா ... நமோதிக்ப்ய:”**

மங்களமான உன் மனதினால் மனத்தையும், மங்களமான, உன் பிராணனால் பிராணனையும், ஹவ்யம், கிருதம் போன்று தேவர்களுக்குப் பிரியமானதை (தேவர்களுக்கு) அர்ப்பணம். இந்த்ர சக்தியான பிராணன் அங்கம் அங்கமாக முறைப்படி நிற்கட்டும். இந்த்ர சக்தியான் அபானன் அங்கம் அங்கமாக பலவிதமாக நிற்கட்டும். தேவன் த்வஷ்டா பூரணமாக உன்னிடம் மங்களமாக அடைவானாக. விரூபமான எவையோ

(அங்கங்கள்) அவை லக்ஷணத்துடன் கூடியவையாக ஆகட்டும். பாதுகாப்புக்கு தேவர்கள் பக்கம் செல்லும் உன்னை சகாயர்களான ரித்விக்குகள், மாதா, பித்ருக்கள் அனுமதிக்கட்டும். பக்குவமடைய வேண்டிய ஹவிஸாக உள்ளாய். அக்னி உன்னை நன்கு பக்குவப்படுத்தட்டும். ஆபஸ் (உன்னை) கலந்து இருக்கட்டும்; காற்றினுடைய சலனத்துக்கு, (செயல்) பூஷணனின் பிரகாசத்திற்கு ஆபஸ் ஓஷதிகளின் வளர்ச்சிக்கு (சரீரம்) (உன்னிடமுள்ள) ஞான அமிருதத்தை, அமிருதத்தைக் காப்பவர்கள் (தேவர்கள்) பருகட்டும். சரீர வளத்தை, சரீர வளம் காப்பவர்கள் (தேவர்கள்) பருகட்டும். அந்தரிக்ஷத்தின் ஹவிஸாக உள்ளாய். உன்னை அந்தரிக்ஷத்திற்கு அர்ப்பணிக்கிறேன். திசைகள், பிரதான திசைகள், உள் வரும் திசைகள், வெவ்வேறு திசைகள், மேல்நோக்கிய திசைகள் அனைத்துக்கும் அர்ப்பணம் திக்குகளுக்கு, சரணம் திக்குகளுக்கு.

(வைஸ்வானர அம்சம் பிராண, அபானங்களின் சேர்க்கையோடு, அக்னி ஆபஸ்ஸால் புனிதப்படுத்தப் பட்டு தேவர்களின் ஹவிஸாக பக்குவப்படுத்தப்பட்டு எல்லா செயல்களையும் வெவ்வேறு நோக்கங்களில் (திக்குகளில்) தூண்டும் தேவர்களுக்கு அர்ப்பணம் செய்ய தயார்ப்படுத்தப்படுகிறது. அடுத்த அனுவாகத்தில் தேவர்களிடம் அனுப்பப்படுகிறது).

## அனுவாகம் 11

"சமுத்ரங்கச்ச ... வருண நோமுஞ்ச"

(ரேதசைத் தாங்கும் ஆபஸ்) சமுத்திரத்தினிடம் செல்வாயாக. (பிரஜை உண்டுபண்ணும்) அந்தரி க்ஷத்தினிடம் செல்வாயாக. (அனைத்தையும் தூண்டும்) சவித்ரு தேவனிடம் செல்வாயாக. (பிரஜைகளுக்கு ஆதாரமான) பகல் - இரவு (தேவதைகளிடம்) செல்வாயாக. (பிராண அபானன்களை தரிக்கும்) மித்ரா - வருணர் களிடம் செல்வாயாக. (பிரஜைகளின் தேவதையான) சோமனிடம் செல்வாயாக. (யக்ஞம், பிரஜைகளின் வளமான வாழ்வுக்கு), யக்ஞத்தினிடம் செல்வாயாக.

*(அறிவுப் பசுக்களுக்கு காரணமான) சந்தங்களிடம் செல்வாயாக.*

*(பிரஜைகளின் விருத்திக்குக் காரணமான) த்யாவா. பிருதிவிக்களிடம் செல்வாயாக. (வானம், வர்ஷத்திற்காக) தேவர்களுக்கு ஹிதமான வானத்திடம் செல்வாயாக. (எல்லா பிரஜைகளின் ஆயுளுடன் சம்பந்தம் உடைய) வைஸ்வானரிடம் செல்வாயாக. இவர்கள் அனைவருக்கும் உன்னை அர்ப்பணம் செய்கிறேன்.*

*வருண ராஜனே, எனக்கு (யஜமானனுக்கு) புனித நீர்கள், ஓஷதிகள், மனஸ், த்ருப்தியை கொடுப்பாயாக. உடல், ரூபம், புத்ரன், பௌத்ரன் இவற்றை அடைவோமாக. எரிக்கும் கனலாக உள்ளாய் (வருணன்) எங்களை எவன் வெறுக்கிறானோ, எவனை நாங்கள் வெறுக்கிறோமோ அவனை எரித்துவிடு. இருப்பிடம் இருப்பிடமாக இங்கு, வருணனே, எங்களை விடுவிப்பாயாக. எங்கெல்லாம், ஹே ஆபோதேவதைகளே, ஹே வேதப் பசுக்களே, ஹே வருணனே என்று எங்கள் (துயரத்தால்) ஆணை வைக்கிறோமோ அங்கெல்லாம் எங்களை விடுவிப்பாயாக.*

## அனுவாகம் 12

**"ஹவிஷ் மதீரிமா ... ஜாக்ருத"**

*இந்த ஆபோதேவதைகள் ஹவிஸ் உள்ளவர்கள். யக்ஞத்தின் தேவன் (சவிதா) உள்ளே (யஜமானன் ஹ்ருதயத்தில்) வாழ்கிறான். ஹவிஸ்ஸுடன் கூடியவனாக சூர்யன் இருக்கட்டும் அக்னியுடைய நித்யமான கிருஹத்தினுடைய (யஜமானன்) சதஸில் இவர்களை சமர்ப்பிக்கிறேன். சுகத்திற்காக, சுகத்தின் காரணமான இவர்களின் ஹவிஸ்ஸை சுகத்தில் என்னால் தாங்கப் படட்டும். இந்த்ராக்னிகளின் பாக தேயமாக இருக்கட்டும் (சங்கல்பம், மனஸ்). மித்ரா வருணர்களின் பாகதேயமாக இருக்கட்டும் (பிராணன், அபானன்). எல்லா தேவர்களின் பாகதேயமாக இருக்கட்டும் (இந்திரியங்கள், உலகம்) இந்த யக்ஞத்தில் கவனத்துடன் இருப்பீர்களாக.*

## அனுவாகம் 13

"ஹ்ருதேத்வா ... சஸ்வதீரிஷ:"

*ஹ்ருதய(சமுத்திரத்திற்காக)த்துக்காகவும், மனதிற்காகவும் (இந்த்ரன்) வானத்திற்காகவும், (தேவர்கள்) சூர்யனுக்காகவும் மேல்நோக்கி இந்த யக்ஞத்தை நடத்துவாயாக. வானத்தில் தேவர்களில் எங்கள் மந்த்ரஸ்துதிகளை சமர்ப்பிப்பாயாக. சோம ராஜனே செய்வாயாக. மீண்டும் கீழே வருவாயாக. பயம் வேண்டாம். நடுக்கம் வேண்டாம். (கீழே வரும் உன்னை) நான் (எனது ராக்ஷசத் தன்மையான செயல்களால்) உன்னை ஹிம்சிக்க மாட்டேன். பிரஜைகளிடம்கூட நீ இறங்கி அமர்வாயாக. பிரஜைகள் உன்னில் அமரட்டும்.*

*ஒளிமிகுந்த (ஞானம் பொதிந்த) இந்த என்னுடைய துதியை அக்னி கேட்கட்டும். எல்லா அறிவுகள் ஸ்வரூபமான ஆபோதேவீகள் கேட்கட்டும். யக்ஞத்தில் மந்த்ரங்களை வாயால் சொல்லும் அறிஞர்கள் கேட்கட்டும். தேவன் ச்விதா என் துதியைக் கேட்பாராக.*

*ஆபோதேவீகள், ஆபோதேவீகளின் புதல்வன் (சோமன்) எவர் அலைபோன்ற ஹவிஷ்யமானவர். இந்த்ரனின் சக்தியானவர், மகிழ்விப்பதில் சிரேஷ்டமானவர், அவரை தேவர்களுக்கு, தேவர்களைக் காப்பதற்கு (என்னால்) தாங்கப்பட்டது. ஒளிவீசும் (சோமனை) ஒளியை அருந்துபவர்களுக்கு எவர்களுடைய பாகதேயமாக (சோமன்) இருக்கிறானோ, அவனை அர்ப்பணிக்கிறேன்.*

*இந்த ஆபோதேவீகளில், உழவு செய்யும்போது வரும் களைகள் போன்ற தீயசக்திகளை அகற்றுகிறேன். உங்களுக்கு (தேவர்களுக்கு) சமுத்திரத்தினுடைய (ஆபோதேவிகள்) அழியாத ஹவிஸ்ஸை மேலே கொண்டு வருகிறேன்.*

*அக்னியே, எந்த மனிதனைப் போர்களில் (ஞானம் - அஞ்ஞானப் போர்) காக்கிறாயோ, யக்ஞங்களில் எவனை அடைகிறாயோ, அவன் எப்பொழுதும், பிரம்ம சக்திகளை அடைகிறான்.*

## அனுவாகம் 14

"த்வமக்னே ... ஜ்யோதீருஷ்யர்ச்சய:"

அக்னியே, நீ தேவனாகிய ருத்ரன், தெய்வீகமான அசுரன், மஹான், சுவர்க்கம், நீ பலம், காற்று, அன்னத்தை ஆள்கிறாய். நீ காற்றிலும், சிவந்த கிரணங்களிலும் செல்கிறாய். சுகமான கிருஹம். நீ பூஷணாக சுற்றும் உள்ள ஜீவராசிகளை விரைவாக தானே காக்கிறாய். (ரித்விக் - யஜமானர்களே) யக்ஞத்தின் ராஜாவும், ருத்ரனும், (தேவர்களை) கூப்பிடுபவனும், த்யாவா-பிருதிவிகளின் சத்யத்தில் சங்கமம் செய்பவனும், ஹிரண்யவர்ண முடையவனும் அக்னி ரூபமாக உள்ளவனை, குரல் எழுப்பும் சித்தம் அடங்கும் முன், நீங்கள் உங்கள், ரக்ஷணத்திற்காக, உள்ளே ஸ்தாபித்துக் கொள்ளுங்கள்.

அக்னி தேவர்களை அழைப்பவன், யக்ஞம் செய்பவர்களில் சிறந்தவன், என்றும் இளையோன், மேதாவி, பல ஸ்தானங்களில் இருப்பவன், யக்ஞம் உடையவன், மனிதர்களைத் தாங்குபவன், மேலும் அவர்கள் ஹ்ருதயத்தில் ஒளிவிடுபவன், கந்தம் வீசும் இந்த லோகமாதாவின் மடியினுள் அமர்ந்துள்ளான். யக்ஞத்தின் நாக்கு போன்றவனும், மங்களமானவனும், எங்களுடைய தேவயக்ஞத்தை (வாக்தேவி) இன்று செய்வாளாக. மறைபொருளை அறிந்து கொண்டோம். அந்த அக்னி ஆயுளாக உள்ளவன். வாக்தேவியிடம் குடிகொண்டவன். இன்று தேவர்களை அழைக்கும் இந்த யக்ஞத்தை மங்களமாகச் செய்வாராக.

வானத்தில் இடிபோல அக்னி சப்தம் செய்து கொண்டு கீழான சத்ருக்களை செடி கொடிகளைத் தொட்டு எரிப்பது போல் விழுங்கினார். (நம்) ஹ்ருதயத்தில், வானத்துக்கும் பூமிக்கும் இடையில் சூர்யன் போல எப்பொழுது ஞான ஒளியை ஏற்றுகிறாரோ அப்பொழுதே (நாம்) ஞானம் அடைகிறோம்.

பல முகங்களைக் கொண்டவரே, இரவும் பகலும் தேவர்களை அழைத்து யக்ஞம் செய்பவர் உன்னில் எல்லா (செல்வங்களையும்) நலங்களையும் அடைந்தனர். க்ஷீணம் அடைந்த நலங்களுடன் கூடிய எல்லா உலகங்களும்

(உடைய எங்களுக்கு) அவற்றில் எல்லா நலங்களையும் எந்த புனிதமானவர் (அக்னி) அவர்கள் உள்ளே தாங்கினர்.

அடையவேண்டியவர்களில் சிறந்தவரே, உன்னுடையது எல்லா மங்களமான வாசஸ்தலங்கள் ஒவ்வொன்றும் (ஜீவர்கள்), அக்னியே, விருப்பங்கள் நிறைவேற அவர்கள் உன்னையே அடைந்தனர். அக்னியே, அந்த விருப்பத்தை அடைவோமாக உன்னுடைய காப்பை அடைவோமாக. செல்வம் படைத்தவரே, செல்வத்தையும், மங்களமான வீரனையும் (புத்ரன்) அடைவோமாக. வலிமையை விரும்புபவர்களாகிய நாங்கள் வலிமையை அடைவோமாக. அழிவில்லாதவனே, அந்த அழிவில்லா புகழை அடைவோமாக. இளையோனே, ரிஷிகளால் உற்பத்தியானவனே (வாக் ரூபம்), சிறந்த ஒளிவீசும் வாசஸ்தலத்தை, பல நலங்களை நல்கும் செல்வத்தை சுமந்து வருவாயாக.

அவர் அழிவில்லாத, பரந்து உள்ள ஞான ஒளியில் நிற்பவைகளான, வேத மந்த்ர ஸ்துதிகளால் ஒளிவிடும் இளையவர். எவர் புனிதப்படுத்துபவரும், பலவிதமான பரந்து உள்ள விஷயங்களை நுகர்ந்தவராக (நம்முடன்) கூட செல்கிறார். உனக்கு ஆயுளை எங்கும் தாங்குபவரான இந்த அக்னி எல்லோரிலும் சிறந்தவர். மீண்டும் உனக்கு பிராணன் உள் நுழைகிறது. கொடிய நோயை ஜயம் கொள்கிறேன் (ரிஷி).

வேதத்தின் மூலமும், வேத கோஷமே உருவானவனும், ஹவிஸ்ஸினால் மகிழ்பவனும், ஆயுளைக் கொடுப்பவனும் ஆக வருவாயாக. இனிமையானதும், மங்களமானதும், ஞானத்திலிருந்து உண்டாகியதுமான வேத மந்த்ர கோஷங்களை ஏற்று பிதாபுத்ரனைப் போல் இவனைக் காப்பாற்றுவாயாக.

அக்னியே, உனக்கு நல்ல ஸ்துதியை உண்டாக்கு கிறேன். பல்வேறு கார்யங்களில் ஈடுபட்டவனே, ஜீவராசிகள் அனைத்தையும் அறிந்தவனே, அப்படிப்பட்ட உனக்கு இந்த ஸ்துதிகளைச் சேர்க்கிறேன்.

முதலாக வானத்தில் சூர்யனாக உதித்தாய். அக்னி எங்களிடம் இரண்டாவதாக எல்லா ஜீவராசிகளையும்

அறிந்த வைஸ்வானரனாக உதித்தாய். மூன்றாவதாக அந்தரிக்ஷத்தில் நீர்களுக்குள் (மின்னலாக) எப்பொழுதும் மனிதர்களுக்கு உபகாரம் செய்யும் எண்ணத்தோடு உள்ளாய். கர்மநிஷ்டனும், ஆத்மநிஷ்டனும் இவரைத் துதிக்கின்றனர்.

தூய்மையானவன், புனிதப்படுத்துபவன், அக்னியே, நீ எல்லோராலும் துதிக்கத் தகுந்தவன். பெரிதாக, பலவிதமாகப் பிரகாசிக்கிறாய். நீ ஞானதாரைகளினால் மனதின் உள் துதிக்கப்படுகிறாய்.

சாது அம்சம் கொண்டவன், பரந்த ஒளியினால் வெவ்வேறு விதமாகப் • பிரகாசிப்பவன், வெல்லப்பட முடியாதவன். ஆயுளை அடைய விரும்புபவன் அதனால் அக்னி அன்னங்களால் அமிருதனாக ஆனார். எதனால் இவரை வானம் அளவில்லாத ரேதஸ் உடையவராக உண்டாக்கியது? வானம் அன்னத்தில் சேர்ந்த தேஜஸ் உடைய புனிதமான ரேதசினால் மனிதனை வாழ்விக்கும் அம்சத்தை (வைஸ்வானரன்) அடைந்தது. அக்னி பலவானும், இளையோனும் குற்றமில்லாதவனும் ஆத்மநிஷ்டனுமான மனிதனைப் பிறப்பித்தார். நடத்துவிக்கிறார். அந்த மனிதன் ஒளி வீசும் மனதினால், உன்னால் காக்கப்பட்டவனாகவும் மேலும் அவனுடைய பிரஜைகளின் ஞானத்திற்கும் காரணமாவாயாக.

அக்னியே, மனிதர்களில் சிறந்தவனும் செல்வ நலங்கள் படைத்தவனுமான இவனுடைய பிரபாவத்தில் நாங்கள் செல்வம் படைத்தவர்களாகவும் உன்னுடைய நற்துதிகளைச் செய்பவர்களுமாக இருப்போமாக.

அக்னியே, வெற்றியை சுமந்து வருவாயாக. புகழ்ச் செல்வத்தை வெல்வ்தை, அனைத்து முயல்வோர்களுடைய திரும்ப, திரும்ப செய்யும் முயற்சிகளில் வெற்றி அடைவதை, போரில் வெற்றி தரும் அச்செல்வத்தை, மஹாபலமுடையோனே சுமந்து வருவாயாக.

நீதான் சத்யம், ஆச்சரியமானவன், நல் மதி என்ற செல்வத்தை அருளுபவன். மிகுந்த அன்னத்தை உடைய வனும், அன்னம் தன் வசத்தில் உள்ளவனும், சோமனை

உச்சியில் வைத்திருப்பவனும், அறிஞனும் ஆன அக்னிக்கு ஸ்துதிகளை சமர்ப்பிக்கின்றோம்.

வாக்கின் இருப்பிடமாய் உள்ளாய். அக்னி அடையத் தகுந்த அன்னத்தை சிருஷ்டித்து அதில் சுவையை அமைத்தார். ரசம் மிக்க அன்னத்தை அளிப்பவனே அப்படிப்பட்ட நீ எங்களுக்கு (எல்லாவற்றிலும்) ரசத்தைத் தாங்குவாயாக. தீயசக்திகளை ராஜா போன்று ஜெயிப்பாயாக (எங்கள்) உள்ளே அமர்வாயாக.

அக்னியே, ஆயுள்களில், நீ புனிதப்படுத்துகிறாய். எங்கள் ஹ்ருதயத்தில் வலிமையான ரசமுள்ள சிந்தனை களை உண்டாக்குவாயாக. தூரத்தில் உபத்ரவம் தரும் தீய சக்திகளை அடக்குவாயாக.

அக்னியே, எங்களிடம் வர்ச்சஸையும், மங்களமான வீர்யத்தையும், ஆபோதேவிகளின் மங்களமான சக்திகளை யும் வளரச் செய்வாயாக, புஷ்டியையும் செல்வத்தையும் என்னிடத்தே தாங்கிக் கொண்டு.

புனிதமாக்கும் அக்னியே, ஒளியாலும் இன்பம் பயப்பதாலும், வாக்கினாலும் தேவர்களை அழைப்பாயாக. தேவர்களை என்னுள் அழைத்துவா. யக்ஞம் புரிவாயாக.

அந்த புனிதமாக்கும் ஒளிமிக்க அக்னியே, தேவர் களை இங்கே அழைத்துவா. யக்ஞத்தையும், ஹவிஸ் களையும் தேவர்களுக்கு உடன் எடுத்துச் செல்.

அக்னி புனிதமான விரதங்களை அனுஷ்டிப்பதில் சிறந்தவன். புனிதமான மேதாவி. புனிதமான மந்த்ரங் களைக் கண்டவன். உள்ளே பூஜிக்கப்பட்டு புனிதமாக ஒளி வீசுபவன்.

ஒளிவிடும் அனைத்திலும் உன்னுடைய கிரணங்கள், அந்த புனிதமான உன்னுடைய ஒளிகள், அக்னியே, ஒளியுடன், மேல் செல்கின்றன. (எல்லா தெய்வீகமான காரியங்களிலும் அக்னியின் ஞான ஒளி ஊடுருவி நிற்கிறது).



# பிரஸ்னம் 4

## அனுவாகம் 1

**"ஆததே ... சோமாயஸ்வாஹா"**

*கைக்கொள்கிறேன். நீ (விருப்பம் ஆகிய சோமனைப் பிழியும்) கல்லாக (சங்கல்பம் வாக்) உள்ளாய். யக்ஞத்தை செய்பவன். இந்த யக்ஞத்தை ஆழமான பயன் உள்ளதாகச் செய். உத்தமமான சுத்திகர்மாவினால் சோமன் பிழியப் பட்டது. இனிமையானதும், பால் போன்றதும் ஆன விருஷ்டி சமூஹத்தை, விருத்திரனை வதம் செய்யும் இந்திரனாகிய உனக்கு, விருத்திரனை அடக்கும் இந்திரனாகிய உனக்கு, பாபத்தை அழிக்கும் இந்திரனாகிய உனக்கு, ஆதித்யன் போன்றவனாகிய இந்திரனாகிய உனக்கு, அனைத்து தேவர்களின் சக்தியும் போன்ற வனாகிய இந்திரனாகிய உனக்கு.*

*விரைவில் காக்கும் சக்திகளில் உள்ளவர்கள், அன்னத்தை சிருஷ்டிப்பதில் முயற்சி உள்ளவர்கள், அமிருதத்(சோமன் (அ) அன்னம்)தைக் காக்கும் தலைவிகள். அந்த ஆபோதேவிகள் தேவர்களைக் குறித்த இந்த யக்ஞத்தை தாங்குபவர்களாக, அழைக்கப்பெற்று சோமனுடைய ரசத்தை அருந்துபவர்கள். அழைக்கப்பெற்ற உங்களுடைய ரசத்தை சோமன் அருந்தட்டும். சோமனே, எந்த உன்னுடைய, வானத்தின் ஒளியில், எது பூமியில், எது பரந்த அந்தரிக்ஷத்தில் (ரசம் உள்ளதோ), அதனால் இந்த யஜமானனுக்குப் பரந்த செல்வத்தை அருளுவாயாக. அளிப்பவனே, பரிந்து பேசுபவனே, புத்தியில் உறுதி, உண்மையில் உறுதி கொள்ளச் செய்வாயாக. ரசத்தை அருள்வாயாக. ரசத்தை எனக்குத் தாங்குவாயாக. உங்களை ஹிம்சிக்கமாட்டேன். என்னை ஹிம்சிக்க வேண்டாம். கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, அந்த திசைகள் உன்னை அடையட்டும். சோமனே, உள்ளே பிரகாசிப்பாயாக. சோமனே, எந்த உன்னுடைய சிதைக்கப்படமுடியாத நாமமோ (அதனால்) விழித்தெழுவாயாக. சோமனே, அந்த உன்னுடைய சோமன் (என்ற நாமத்திற்கு) அர்ப்பணிக் கிறேன்.*

## அனுவாகம் 2

**"வாசஸ்பதயே ... ப்ராணாயத்வா"**

*அன்னமுடையவனே, அபீஷ்டங்களைப் பொழிபவனே, விருப்பங்களை நிறைவேற்றுபவனே, சூர்ய கிரணங்களால் புனிதப்படுத்தப்பட்டவனே, வாக்பதியான (பிராணனின்) கலைகளை புனிதப்படுத்துவாயாக. தேவனே தேவர்களின் புனிதமாக உள்ளாய். எவர்களுக்கு நீ பாகமாக உண்டோ, அவர்களால் உள்ளாய். இனிமை பொருந்திய அன்னத்தை எங்களுக்கு அருள்வாயாக. எல்லா தெய்வீகமான இந்திரியங்களும், ஸ்தூல இந்திரியங்களும் மனதும் உன்னை அடையட்டும். பரந்த (ஜீவனின்) அந்தரிக்ஷத்தை அடைவாயாக. உன்னை அர்ப்பணிக் கிறேன். மங்களமாக உண்டாகிய சூர்யனுக்கு, சூர்யகிரணங்களை அருந்தும் தேவர்களுக்கும் உன்னை அர்ப்பணிக்கிறேன். இந்த பிராணன் (மனது) உனது செல்லும் வழி. (மனம், இந்திரியங்கள், தேவர்கள், சூர்யன் குறித்து) பிராணனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

*(சோமனால் மகிழ்விக்கப்பட்ட பிராணன் தெய்வீக குணங்கள் கொண்ட மனது; இந்திரியங்களை ஜீவாத்மா விலும், தெய்வீகமான அனுபவங்களை தேவர்கள், சூர்யன் மூலம் வெளி உலக அனுபவங்களால் சிருஷ்டிக்கிறது).*

## அனுவாகம் 3

**"உபயாம கிருஹீதோ ... யோனிநபானாயத்வா"**

*சரீரம், மனஸ் இவற்றால் கூடிய யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டு உள்ளாய். உள்ளே செல்வாயாக. இந்திரனே (சகல நலங்களும் படைத்தவனே) சோமரசத்தை அருந்துவாயாக, செல்வத்தைக் காப்பாயாக. அன்னங்களை நன்கு அருள்வாயாக. உன் உள்ளே தாங்குகிறேன். த்யாவா (மனத்தை), பிருதிவீ (சரீரத்தை), பரந்த அந்தரிக்ஷம் (சரீரம், மனம் இவற்றை நல்முறையில் நடத்தும் அனைத்து மத்தியில் உள்ள சக்திகளும்). ஒன்று கூடி மகிழும் தேவர்களால், கீழ்நிலையில் உள்ள (தேவர்)களால் இந்திரனே, மகிழ்வுறச் செய்வாயாக. சோமனே, ஸ்வீகரிக்கப்பட்டவனாக உள்ளாய். இனிமை யான அன்னத்தை எங்களுக்கு அருள்வாயாக. எல்லா தெய்வீகமான இந்திரியங்களும், ஸ்தூல இந்திரியங்களும்,*

*மனதும் உன்னை அடையட்டும். பரந்த (ஜீவனின்) அந்தரிக்ஷத்தை அடைவாயாக. மங்களமாக உண்டாகிய சூரியனுக்கு, சூரிய கிரணங்களை அருந்தும் தேவர்களுக்கும் உன்னை அர்ப்பணிக்கிறேன். இந்த அபானன் (மனது) உனது செல்லும் வழி. அபானனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

*(அபானன் உள் முகமான அனைத்து சரீர மனஸ் செயல்களைச் செய்கிறது.)*

## அனுவாகம் – 4

**"ஆவாயோ பூஷ ... சஜோஷாப் யான்த்வா"**

*அனைவராலும் விரும்பப்படுபவனே, ஹே, வாயுவே, புனிதமான சோமரசத்தை அருந்துபவரே, எங்களை உன்னுடைய ஆயிரம் அஸ்வங்களுடன் (சக்திகளுடன்) அலங்கரிப்பீராக. மதம் உண்டுபண்ணும் சோமரசத்தை உடன் அளிக்கிறேன். எந்த சோமரசத்தை, தேவனே, முதலாகப் பருகுபவராக உள்ளீர். சோமனே, யஜமானன் என்ற உபயாமத்தால் வாயுவிற்காக எடுக்கப்பட்டுள்ளீர். இந்த்ர வாயுக்களே, இந்த சோமரசம் பிழியப்பட்டது. அன்னங்களுடன் வருவீர்களாக. சோமரசத்துளிகள் உங்களை விரும்புகின்றன அல்லவா. யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டு உள்ளீர். இந்த்ர வாயுக் களுக்காக இந்த வாயுவே உன்னுடைய செல்லும் வழி. கூடி மகிழ்பவர்களுக்கு (இந்த்ர-வாயு) உன்னை அர்ப்பணிக் கிறேன்.*

*(பிராணன், அபானன் ஆகிய வாயுவுக்கு அர்ப் பணிக்கப்பட்ட பின் சோமரசம் இந்த்ர-வாயு என்ற இரு தேவதைகளும் சேர்ந்து சரீரத்தில் எல்லா சக்திகளையும் இயக்குவதால் இந்த இந்த்ர-வாயுவுக்கு அர்ப்பணிக்கப் படுகிறது)*

## அனுவாகம் – 5

**"அயம் வாம் ... ருதாயுப்யான்த்வா"**

*ருதம் (அல்லது) இயற்கை நியதியை வளர்க்கும் மித்ரா-வருணர்களாகிய உங்களுக்கு சோமரசம் பிழியப்பட்டது. என்னுடைய இந்த அழைப்பை கேட்கவும். யஜமானனாகிய உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர்,*

*சோமனே, மித்ராவருணர்களுக்கு உன்னை. இந்த ருதத்தில் செய்யப்படும் யக்ஞத்தின் அழைப்பே உனக்கு (அவர்களிடம்) செல்லும் வழி. ருதத்தை வளர்ப்பவர்களுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

**அனுவாகம் – 6**

**"யாவாங்கசா ... மாத்வீப்யாந்த்வா**

*அஸ்வினீ தேவர்களே,, இனிமையானதும், பிரியமானதும் ஆன எந்த உங்களுடைய புகழைக் குறித்த துதிகளால் (எங்கள்) யக்ஞம் நிறையப் பெற்றது. யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, நீ எடுக்கப்பட்டு உள்ளாய். இந்த துதிகளே நீ அஸ்வினீ தேவர்களை அடையும் வழி. இனிமை நிறைந்த அஸ்வினீ தேவர்களுக்கு (உன்னை அர்ப்பணிக்கிறேன்)*

**அனுவாகம் 7**

**"பிராதர்யுஜௌ ... அஸ்விப்யாந்த்வா"**

*காலையில் கர்மத்தில் ஈடுபட ஆயத்தமாக உள்ளவர்கள், அவற்றை விட்டு இங்கு வரட்டும். இவனுடைய (யஜமானன்) சோமரசத்தை அருந்துவதற்காக.*

*(இந்த்ர வாயுக்கள் மகிழ்வதன் மூலம் உண்டாகிய வாக் இனிமையாகவும், பிரியமாகவும் அமைய அஸ்வினீ தேவர்களுக்கு சோமன் அர்ப்பணம்)*

**அனுவாகம் 8**

**"அயம் வேனஸ் ... வீரதாம் பாஹி"**

*சூர்யனின் கிரணங்களை கர்ப்பத்தில் சுமப்பவர்கள். கர்ப்பப்பையினால் சூழப்பட்ட ஜோதி (மேகத்தால் சூழப்பட்ட சூரிய கிரணங்கள்) அந்தரிக்ஷத்தின் உச்சியில், இந்த மின்னல் ரூபமான வேனன் (மழை பொழிய) தூண்டுகிறார். இந்த ஜலசங்கமத்தில் சூர்யனின் குழந்தை போன்றவனை (மின்னல் தேவனை - அக்னி தேவனை) ஞானிகள் தங்கள் புத்தியால் ஸ்பரிசிக்கின்றனர் (துதிக்கின்றனர்). யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர். இந்த ஞானமே உனது செல்லும் வழி. வீரத்தன்மையைக் காப்பாயாக.*

*(இந்த் மந்த்ரம் மனிதனின் மனதில் வித்யுத் மூலம் (உள் உணர்வு) ஞானம் தோன்றுவதைக் குறிக்கிறது. ஞானத்தின் முயற்சியில் வித்யுத் தேவதைக்கு சோமரசம் சமர்ப்பிக்கப்படுகிறது.)*

## அனுவாகம் – 9

**"தம்பிரத்னதா ... பிரஜா: பாஹி"**

*மிகப் புராதன காலத்தில் துதிக்கப்பட்டவர், முன் காலத்தில் துதிக்கப்பட்டவர், எல்லோராலும் துதிக்கப் பட்டவர், இப்பொழுதும் துதிக்கப்படுபவர். துதிக்கப்பட வேண்டியவர்களில் சிறந்தவரும், மந்த்ராசனத்தில் அமர்ந்திருப்பவரும், சுவர்க்கத்தை அறிந்தவரும், ஆத்மாவில் நிலைத்தவரும், பலவானும், விரைவாக செயல்படுபவரும், ஜயம் உடையவரும் ஆன அவரைத் (மின்னல் தேவன்-அக்னி) தொடர்ந்து எந்த ஆபோதேவீகள் அமர்ந்திருக்கும் மேகத்தை (வாக்கை) கறக்கிறாய். எவர்களில் நீ வளர்ச்சி அடைகிறாய்? யஜமானனாகிய உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர், சோமனே. மர்க்கன் என்ற மனதிற்கு உன்னை அர்ப்பணிக்கிறேன். இந்த வாக்சமுத்ரத்தை கறந்து வளர்வதன் வழியாக நீ மனதுள் செல்கிறாய். பிரஜைகளைக் காப்பாயாக.*

*(மர்க்க என்பது அர்க்கம் (வாக் துதியின்) திருப்பம்)*

## அனுவாகம் 10

**"யே தேவா ... தேவேப்ய:"**

*எந்த தேவர்கள் வெளி உலக வானிலும், யஜமானனின் உள் உலக மனவானிலும் இருக்கிறார்கள். எந்த தேவர்கள் பூமியின் மேலும், யஜமானனின் சரீரத்திலும் இருக்கிறார்கள். தண்ணீரின் ஆசனமாகிய அந்தரிக்ஷத்தின் மஹிமையினால் எந்த தேவர்கள் யஜமானனின் உள்ளும் புறமும் இருக்கிறார்கள். அந்த தேவர்கள் இந்த யக்ஞத்தில் மகிழட்டும். யஜமானனாகிய உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர், சோமனே, முக்யமானவராக உள்ளீர், மங்களமாக முக்யமானவராக உள்ளீர். யக்ஞத்தை ஊக்குவிப்பீராக. யக்ஞபதியை ஊக்குவிப்பீராக. சோமரசம் பிழிவதைக் காப்பீராக. எங்கும் உள்ள சவிதா (விஷ்ணு) உன்னைக் காக்கட்டும்.*

*மனிதர்களை நீ காப்பாற்று இந்திரியத்தால். இந்திரியமே நீ செல்லும் வழி. விஸ்வே தேவர்களுக்கு (இந்திரிய தேவதைகள்) உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

**அனுவாகம் – 11**

**"த்ரிகும்சத்த்ரயஸ்ச ... தேவேப்ய:"**

*33 கணங்கள் ஆகிய ருத்ரர்கள் வானத்தையும், பூமியையும், (அவற்றில்) 11 கணங்கள் மேகத்தைத் தாங்கும் அந்தரிக்ஷத்தையும், தீயசக்திகளை அழிப்பவர்களாக அடைகின்றனர். பிழியப்பட்ட சோம ரசத்தை எல்லோரும் சவனத்தில் அருந்தி மகிழட்டும். யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர். முக்யமானவராக உள்ளீர்., மங்களமான முக்யமானவராக உள்ளீர். யக்ஞத்தை ஊக்குவிப்பீராக, யக்ஞபதியை ஊக்குவிப்பீராக. சோமரச சவனத்தைக் காப்பீராக. எங்கும் உள்ள சவிதா (விஷ்ணு) உன்னைக் காக்கட்டும். மனிதர்களை நீ காப்பாற்று. இந்திரியமே உன் செல்லும் வழி. விஸ்வேதேவர்களுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

**அனுவாகம் 12**

**"உபயாமக்ருஹீதோ சீன்த்ராய ... த்வோக்தாயுவே"**

*யஜமானன் என்ற உபயாமத்தால் சோமனே எடுக்கப்பட்டுள்ளீர். இந்திரனுக்காக, உன்னை, பிருஹத் சாமனால் போற்றப்படுபவனுக்கு, பராக்ரமம் பொருந்திய வனுக்கு ஸ்துதிகளில் பிரியம் உள்ளவனுக்கு. இந்திரனே, வலிமை உடையோனே, அப்படிப்பட்ட உனக்கு, எங்கும் நிறைந்தவனான உனக்கு. இந்த ஸ்துதியே (சோமன்) நீ இந்திரனிடம் செல்லும் வழி. ஸ்துதிகளில் பிரியம் கொண்ட இந்திரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

**அனுவாகம் – 13**

**"மூர்த்தானன்திவோ ... வைஸ்வானராய"**

*வானத்தின் சிரஸில் தாங்கப்பட்டவனும், பிருதிவிக்கு செல்பவனும், எல்லா நரர்களிலும் சம்பந்தப்பட்டவனும், ருதம் (அ) நியதியில் பிறந்தவனும், மேதாவியும், மங்களமாகப் பிரகாசிப்பவனும், ஜனங்களுடைய அதிதியும் ஆன அக்னியை வாயினுள்ளும், தேஹத்தி*

னுள்ளும் தேவர்கள் தோற்றுவித்தனர். யஜமானன் என்னும் உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர். சோமனே, அக்னி வைஸ்வானரனுக்காக. உறுதியாக உள்ளீர். உறுதியானவற்றுடைய சிறந்த உறுதியாகவும், கீழே நழுவாத ஸ்தானங்களுடைய நழுவாத்தன்மையாகவும் உள்ளீர். இந்த வாக்கும் (வாய்), வயிறும் (பாத்ரம்) அக்னியைக் குறித்து நீ செல்லும் வழி. அக்னி .வைஸ்வானரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.

## அனுவாகம் 14

**"மதுஸ் ச ... த்வா"**

1) மது, மாதவ - வசந்த ருது
2) சுக்ர, சுசி - கிரீஷ்ம ருது
3) நப:, நபஸ்ய: - வர்ஷ ருது
4) இஹ:. ஊர்ஜ: - சரத் ருது
5) சஹ:, சஹஸ்ய: - ஹேமந்த ருது
6) தப:, தபஸ்ய: - சிசிர ருது.

மது, மாதவன் என்ற இனிமையான வசந்த ருது, சுக்ரன், சுசி என்ற சுட்டுப் பொசுக்கும கிரீஷ்ம ருது, நப:, நபஸ்ய: என்ற ஜனங்கள் பிரவிருத்தியின்றி உள்ள வர்ஷ ருது, இஷ:, ஊர்ஜ: என்ற அன்னம், பால் விருத்தியாகும் சரத் ருது, சஹ:, சஹஸ்ய: என்ற குளிரினால் துன்பப்படும் ஹேமந்த ருது. தப:, தபஸ்ய: என்ற பனியினால் துன்பப்படும் சிசிர ருது. யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர் சோமனே. இந்த ருதுக்களில் எல்லாம் ஊர்ந்து செல்பவனாக உள்ளாய். ருதுக்களால் ஏற்படும் கவலை, துன்பம் இவற்றின் காவலனான ஆதித்யனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன். (என்னை கவலை துன்பங்களி லிருந்து விடுவிக்க)

## அனுவாகம் 15

**"இந்த்ராக்னி ஆகதம் ... அக்னிப்யாந்த்வா"**

இந்த்ராக்னிகளே, வருவீர்களாக. சிறந்ததும், மனதைக் கவர்வதும் ஆன பாடல்களால் பிழியப்பட்டு இவனுடைய (சோமரசத்தை) அருந்துவீர்களாக. யஜமானனாகிய உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர், சோமனே, (இந்த

பாடல்களே) இதுவே நீ செல்லும் வழி. இந்த்ராக்னிகளுக்கு அர்ப்பணிக்கிறேன்.

**அனுவாகம் 16**

**"ஓமாசஸ்சர்ஷணீ ... தேவேப்ய:"**

*பிரஜைகளைக் காப்பவர்களே, மனிதர்களுடைய செயல்களைத் தாங்குபவர்களே, தேவர்களே, வருவீர் களாக, அருள்பவர்களாகிய உங்களுக்காக, சமர்ப்பிப்பவர் களாகிய (எங்களால் சோம ரசம்) பிழியப்பட்டது. யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப் பட்டுள்ளீர். விஸ்வே தேவர்களுக்காக. இந்த மனிதர்களின் செயல்களே நீ (சோமன்) செல்லும் வழி. விஸ்வேதேவர் களுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

**அனுவாகம் 17**

**"மருத்வந்தம் ... மருத்வதே"**

*மருத்கணங்களுடன் கூடியவனும், கொடை வள்ளலும், விருத்தி அடைவிப்பவனும், தன்னலமற்றவனும், தெய்வீகமானவனும், சேனாபதியும், எல்லா சத்ருக் களையும் வெல்பவனும், புதியதான செயல்களில் வேகம் உடையவனும், வலிமையை அருள்பவனுமான அந்த இந்திரனை இங்கு துதி செய்கிறோம். யஜமானனாகிய உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர், மருத்கணங் களுடன் கூடியவனுக்காக. இந்த இந்திரனின் செயல்களே நீ செல்லும் வழி. மருத்கணங்களுடன் கூடிய இந்திரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.*

*(மனது, மருத்கண பிராணன்களால் தேஹ இந்திரியங் களை செயலில் ஈடுபட உத்தரவு செய்கிறார். இந்திரிய செயல்கள் மூலம் சோமன் தேவனை மகிழ்விக்கிறார் - மனம்)*

**அனுவாகம் 18**

**"இந்த்ர மருத்வ ... மருத்வதே"**

*மருத்கணங்களுடன் கூடிய இந்த்ரனே, எவ்வாறு சார்யாதியின் (யக்ஞத்தில்) பிழியப்பட்ட ரசத்தைக் குடித்தீரோ, அவ்வாறு இங்கு சோமரசத்தைப் பருகுங்கள். வீரனே, உன்னுடைய வழிகாட்டுதல், உன்னுடைய*

பாதுகாப்பு இவற்றில் ஞானிகள், நல்யக்ஞங்களைப் புரிபவர்கள் வாழ்கின்றனர். யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர், மருத் கணங்களுடன் கூடிய இந்த்ரனுக்காக. இந்த வேதமும், யக்ஞங்களுமே நீ மருத்கணங்களோடு கூடிய இந்திரனிடம் செல்லும் வழி. மருத்கணங்களோடு கூடிய இந்திரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.

(மனது வேதத்தாலும், யக்ஞங்களிலும் மகிழ்ச்சி அடைகிறது - செயல்)

## அனுவாகம் 19

"மருத்வாகும் ... மருத்வதே"

மருத்கணங்களுடன் கூடிய இந்த்ரனே, அருளைப் பொழிபவனே. (அன்னத்தை) வெல்வதற்காக சோமரசத்தை பருகுவாயாக. அன்னத்துடன் கூட இன்பத்திற்காக அருந்துவாயாக. வயிற்றில் இனிமையான அலை போன்ற சோமரசத்தால் தெளிப்பாயாக. முன்பு பிழியப்பட்ட அனைத்து சோமரசத்திற்கும் நீயே ராஜா. யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர். மருத் கணங்களுடன் கூடிய இந்த்ரனுக்காக. இந்த அன்னத்தின் வழியே மருத்கணங்களுடன் கூடிய இந்திரனிடம் செல்வாயாக. மருத்கணங்களுடன் கூடிய இந்த்ரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன். (மனதும், பிராணன்களும் அன்னத்தை ஜீரணம் செய்யும் இந்திரியங்களை தூண்டி இன்பம் அடைகின்றன - சரீரம்).

அனுவாகம் 17, 18, 19 முறையே மனம், செயல், உடல் மூலமாக சோமரசம், எல்லா ஜீவராசிகளிடமும் உள்ள இந்த்ரன், மருத்கணங்களுககு யஜமானன் மனம், செயல், சரீரத்தால் வழங்கப்படுகிறது என அறிவிக்கின்றன.

## அனுவாகம் 20

"மஹாகும் இந்த்ரோய ஒஜஸா ... இந்த்ராயத்வா"

(மழை வேண்டி நிற்கும் பூமிக்கு) பர்ஜன்யன் விருஷ்டியை (அ-து) மழையைப் பொழிவது போல, புத்ரன் போன்ற யஜமானனின் ஸ்தோத்ரங்களால் மஹாள் இந்த்ரன் வலிமை வளர்ந்து அருளுகிறார். யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர்,

மஹேந்திரனுக்காக. இந்த ஸ்தோத்ரங்களே நீ மஹேந்திர னிடம் செல்லும் வழி. மஹேந்திரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.

## அனுவாகம் 21

"மஹாகும் இந்த்ரோ நிருவதா ... இந்த்ரயத்வா"

மஹேந்திரன், மனிதர்கள் போல், கர்மாவினால் விருப்பங்களை நிறைவேற்றுபவர். மேலும் இரு உலகங் களிலும் புகழ் உடையவர், எதிரிகளுடன் ஒப்பிடமுடியாத வலிமை மிகுந்தவர். எங்களை நோக்கி வலிமைக்காக வளர்ந்துள்ளார். பலத்தால் விரிந்தவரும், புகழினால் பரந்த வரும், கர்மத்தை இயற்றுபவர்களால் போற்றப்பட்டவராக ஆனார். யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர், மஹேந்திரனுக்காக. நல்ல கர்மாக்களே நீ மஹேந்திரனிடம் செல்லும் வழி. உன்னை மஹேந்திர னுக்கு அர்ப்பணிக்கிறேன்.

## அனுவாகம் 22

"கதாசனஸ்தரீரசி ... ஸ்ரீணாமி"

இந்திரனே, ஒரு பொழுதும் நீ அருள் செய்யாதவனாக இல்லை. யஜமானனுக்கு (எப்பொழுதும்) அருள் புரிகிறாய். மீண்டும், மீண்டும் உன் அருட்கொடை அடையப் படுகிறது. யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர். ஆதித்யர்களுக்காக (இந்திரன் மூலம் ஆதித்யர்கள் சோமரசத்தை அடைகின்றனர் – மனது மூலம் புத்தி).

ஒரு பொழுதும் (ஆதித்யனே) நீ கவனமில்லாமல் இருப்பதில்லை. இவ்வுலகப் பிறப்பினும் மறுஉலகப் பிறப்பிலும் நீ உள் நின்று காக்கிறாய். உன்னுடைய மேல் நிலைக்குரிய ஆதித்ய சவனம் (எ) சோமரசம், இந்திரனின் சிறந்த சக்தியாக சுவர்க்கத்தில் அமிருதமாக உள் நிற்கிறது. ஆதித்யர்களாகிய உங்களால் மகிழ்ச்சி அடையப்பட்டு தேவர்களுடைய யக்ஞத்தை (மகிழ்ச்சி) சுகமாக திரும்பி அடைகிறது. உங்களுடைய மங்களமான மதி எங்கள் பக்கம் உள் நிற்கட்டும். தீயதான மதி திரும்பிப் போகட்டும். செல்வங்களில் சிறந்ததாக சுமதி இருக்கிறது. விவஸ்வானே, ஆதித்யனே, இந்த சிறந்த இந்த்ர சக்தியான சோமரசம்

உன்னுடையது. அதனால் மகிழ்வாயாக. உன்னை திருப்தி அடையச் செய்வோமாக. உன்னை திருப்தி செய்யும் நாங்கள் திருப்தி அடைவோமாக. எந்த தெய்வீகமான மழை (சுமதி (அ) நல் எண்ணங்கள்) அதனால் உன்னை புரோக்ஷிக்கிறேன்.

## அனுவாகம் 23

"வாமமத்ய ... சவித்ரே"

சவித்ரு தேவனே, மங்களமானதை இன்று, மங்களமானதையே நாளையும், ஒவ்வொரு நாளும் எங்களுக்கு மங்களமானதையே ஊக்குவிப்பீராக. தேவனே மங்களமானதும், குடிகொண்டுள்ள இந்த புத்தியால் மங்களமானதை செய்பவர்களாக இருப்போமாக. யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே, சவித்ரு தேவனுக்காக எடுக்கப்பட்டுள்ளீர்.

(மங்களமான புத்தியே நீ செல்லும்வழி).

## அனுவாகம் 24

"அதப்தேபிஸ் ... சவித்ரே"

சவித்ரு தேவனே, சூதுகள் இல்லாதவற்றால் மங்களமானவற்றால் கூடிய பாதுகாப்பை இன்று எங்கள் கிருஹங்களைச் சுற்றிலும் அருள்வாயாக. பொன் போன்ற நாவினால் (அருளும் சொல்லினால்) நல்ல கதியைப் புதிதாக அடைய ரக்ஷிப்பாயாக. தீய எண்ணங்கள் எங்களை ஆள வேண்டாம். யஜமானனாகிய உபயாமத் தால், சோமனே, எடுக்கப்பட்டுள்ளீர், சவித்ரு தேவனுக் காக.

(மங்களமான சொல்லே நீ செல்லும் வழி)

## அனுவாகம் 25

"ஹிரண்யபாணி ... சவித்ரே"

பொன் போன்ற கைகள் கொண்டவனும், சவித்ரு தேவனுமானவனை ரக்ஷணத்திற்காக கூப்பிடுகிறேன். அவரே புத்தியை இயக்கும் நிலையில் உள்ள தேவன். யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர் சவித்ரு தேவனுக்காக

(மங்களமான செயலே நீ செல்லும் வழி)

## அனுவாகம் 26

"சுசர்மாசி ... தேவேப்ய:"

*மங்களமான நலம் ஆக உள்ளாய். மங்களமான நிலைப்பாட்டில் உள்ளாய். பெரிய இன்ப விருஷ்டியாக உள்ளாய். உனக்கு சரணம் இந்த உன்னுடைய தன்மைகளே நீ விஸ்வே தேவர்களிடம் செல்லும் வழி.*

## அனுவாகம் 27

"பிருஹஸ்பதி சுதஸ்ய ... ஸ்வாஹா"

*பிருஹஸ்பதியினால், இந்திரியங்கள் வாயிலாகப் பிழியப்பட்ட உன்னுடைய (சோமன்) துளிகள் (சுக்லம்) பத்னி உடையவனாகிய யஜமானனால் கிரஹிக்கப்பட்டது. அக்னியே பத்னி உடையவனே (யஜமான்), தேவன் த்வஷ்டாவினால் (ரூபம் அடையும் சந்ததி மூலம்) சோமரசத்தை அருந்துவாயாக.*

## அனுவாகம் 28

"ஹரிரஸி ... ஸ்வாஹா"

*அஸ்வம் (சக்தி) ஆக உள்ளாய். சோமனே அஸ்வம் (சக்தி) எவனுக்கு வாஹனமோ, அந்த இந்த்ரனின் சக்தி, அஸ்வ சக்திகளில் நிற்பவன், வஜ்ர ஆயுதத்தைத் தாங்கும் சக்தி, அன்னத்தின் தூண்டும் சக்தி, சோமதேவனே, அந்த உன்னுடைய, செய்யப்பட்ட யக்ஞத்தினுடைய, துதிக்கப் பட்ட ஸ்தோமத்தினுடைய, வேத மந்திரங்கள் உச்சாடனத்துடைய அஸ்வம் போன்ற சக்தியை கிரஹிக்கிறேன். சக்தியில் நிற்பவன், சக்தியான அன்னம் கூடிய சோமனே, இந்த்ரனுக்கு அர்ப்பணிக்கிறேன்.*

## அனுவாகம் 29

"அக்ன ஆயுகும்ஷி ... தேஜஸ்வதே"

*அக்னியே, ஆயுள்களில் நீ புனிதப்படுத்துகிறாய். எங்கள் ஹ்ருதயத்தில் வலிமையான ரசமுள்ள சிந்தனைகள் உண்டாக்குவாயாக. உபத்ரவம் தரும் தீயசக்திகளை தூரத்திலே அடக்குவாயாக. யஜமானன் என்ற உபயா மத்தால் சோமனே எடுக்கப்பட்டுள்ளீர், தேஜஸ்வியான வருக்காக. இந்த ஆயுள், நற்சிந்தனை, தீயதை அடக்கும்*

தன்மையே நீ அக்னியிடம் செல்லும் வழி. தேஜஸ்வியான அக்னிக்கு (பூமியின் தேவதை) உன்னை அர்ப்பணிக்கிறேன்.

(பூமி - சரீரம், ஆயுள்)

**அனுவாகம் 30**

**"உத்திஷ்டன்னோ ஜஸா ... த்வௌஜஸ்வதே"**

தடுமாறாத, உப்பிய கன்னங்களால், (சோமரசத்தை) குடித்து வலிமையுடன் நிற்கும் இந்த்ரனே. சோமரசம் மனம், உடல் என்ற இரு கிண்ணங்களால் (வேதவாக்காக) பிழியப்பட்டது. இந்த வேதகோஷமே நீ (சோமன் இந்திரனிடம் செல்லும் வழி. வலிமை வாய்ந்த இந்திரனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.

(அந்தரிக்ஷம் - செயல்)

**அனுவாகம் 31**

**"தரணீர் ... ப்ராஜஸ்வதே"**

விரைவில் செல்பவரும், அனைத்தையும் அறிவிப்ப வரும், ஜ்யோதி (அ) ஞானத்தை உண்டுபண்ணுபவரும் ஆக உள்ளீர், சூர்யனே எல்லாவற்றின் உள்ளும் பிரகாசிப் பவராக உள்ளீர். யஜமானன் என்ற உபயாமத்தால் சோமனே எடுக்கப்பட்டுள்ளீர். இந்த புத்தியே சூர்யனிடம் நீ செல்லும் வழி. பிரகாசிக்கும் சூர்யனுக்கு உன்னை அர்ப்பணிக்கிறேன்.

(வானம் - புத்தி, மனஸ்).

**அனுவாகம் 32**

**"ஆப்யாயஸ்வ ..., சப்ரதஸ்தம:"**

எல்லா நலங்களும் பல்கிப் பெருகுவீராக. மகிழ்ச்சி அளிப்பதில் சிறந்தவரான சோமனே, எங்களுக்கு விரிந்து பெருகுவீராக.

**அனுவாகம் 33**

**"ஈயுஷ்டே ... பஸ்யான்"**

முன்பிருந்த மனிதர்கள் எவரோ அவர்கள் ஒளிவீசும் உஷஸ்ஸை (அறிவு உதயம்) கண்டு சென்றனர். எங்களாலும் கண்ணெதிரே காணப்பட்டது- எவர்கள் பின்வருபவரோ, அவர்கள் இதை கண்டு செல்வார்கள்

*(அறிவு (அ) ஞான உதயத்தின் ஒளி - காலை உஷக்கால பிரகாசம்)*

## அனுவாகம் 34

**"ஜ்யோதிஷ்மதீந்த்வா ... சாதயாமி"**

*அறிவு ஒளிவீசும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். அறிவு ஒளியைச் செய்யும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். அறிவு ஒளியை அறியும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். ஒளிவீசும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். ஒளிப் பிழம்பான உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். ஒளியால் மினுமினுக்கும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். ஜ்வாலை கூசும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். ஜ்வாலை வீசும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். ஒளிரும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். எப்பொழுதும் (ஒளிவீசும்) உள்ள உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். பெருஒளி வீசும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். அறிவை மலரச் செய்யும் உன்னை என்னுள் அமரச் செய்கிறேன். விழிப்புடன் உள்ள உன்னை என்னுள் அமரச் செய்கிறேன்.*

## அனுவாகம் 35

**"பிரயாசாய ... சர்வஸ்மைஸ்வாஹா"**

*(திக்பாலகர் - ஈசான தேவருக்கு) சிறந்த முயற்சியை அர்ப்பணம் செய்கிறேன்*

*(சோமனுக்கு) உள்ளத்தினுள் முயற்சியை அர்ப்பணம் செய்கிறேன்*

*(வாயுவுக்கு) பலவிதமான முயற்சியை அர்ப்பணம் செய்கிறேன்.*

*(இந்திரனுக்கு) மங்களமான முயற்சியை அர்ப்பணம் செய்கிறேன்.*

*(ஆஹவனீய அக்னிக்கு) மேன்மைதரும் முயற்சியை அர்ப்பணிக்கிறேன்.*

*(வருணனுக்கு) கீழ்நோக்கிச் செல்லும் முயற்சியை அர்ப்பணிக்கிறேன்.*

*(அக்னிக்கு) அறிவு ஒளி வீசும் வருந்தும் முயற்சியை அர்ப்பணிக்கிறேன்.*

*(யமனுக்கு) வருத்தப்பட வைக்கும், வருத்தும் முயற்சியை அர்ப்பணிக்கிறேன்.*

*(நிருருதிக்கு) பிரம்ம ஞானத்தை அழிக்கும் முயற்சியை அர்ப்பணம் செய்கிறேன்*

*(இந்த முயற்சிகள் மூலம் சோமனை திக் தேவதைகளின் மகிழ்ச்சியாக அர்ப்பணிக்கிறேன்.)*

## அனுவாகம் 36

**"சித்தக்கும் சந்தானேன ... கோஸ்யாப் யாம்"**

*(ஆயுள் உள்ள வரை உடல்களில் எப்பொழுதும் மாறுதல்களை உடற்பகுதிகளால், மனதால் நிகழ்த்தி வாழவைக்கும் தேவர்களை மகிழ்விக்க, தேஹத்தில் சோமரசத்தை அர்ப்பணிக்கிறேன்)*

*ஜீவன் உடலுடன் தொடர்ந்து வாழ்வதால் சித்தம் (அ) நினைவு என்ற தேவதையும், கல்லீரலால் பவனையும், கல்லீரல் குழாய்களால் ருத்ரனையும், ஸ்தூல ஹ்ருதயத் தால் பசுபதியையும் (சூஷ்ம - அஹம்) ஹ்ருதயத்தால் அக்னியையும், ரத்தத்தால் ருத்ரனையும், சர்வனை ஹ்ருதயத்தின் பக்கலில் உள்ள எலும்புகளாலும், மஹாதேவனை இருபக்கமும் உள்ள தசைகளாலும், திடீரெனக் கொல்பவனை மூக்கின் கோசங்களாலும் (நுரைஈரலால்) (மகிழ்விக்கிறேன்).*

## அனுவாகம் 37

**"ஆதிஷ்ட ... ஷோடசினே"**

*உன்னுடைய வேத மந்த்ரங்களால் பூட்டப்பட்ட குதிரைகள் (சக்திகள்) கூடிய ரதத்தின் (சரீரத்தின்) உள்ளே நில். இப்பக்கம் உன்னுடைய மங்களமான மனது (தாடைகள் என்ற)க்ராவா மூலம் வேத சப்தத்தை செய்யட்டும். யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப் பட்டுள்ளீர் சோமனே, 16 கூடிய (மனது, 5 ஞானேந்த்ரியம், 5 கர்மேந்திரியம், 5 விஷயங்கள்) இந்திரனுக்காக. இந்த வேதஸ்துதியே நீ 16 கூடிய இந்திரனிடம் செல்லும்வழி.*

## அனுவாகம் 38

**"இந்த்ரமித்தரீ ... ஷோடசினே"**

*யாராலும் வெல்ல முடியாத இந்திரனை இங்கு இரண்டு குதிரைகள் (சக்திகள்) சுமந்து கொண்டு, ரிஷி, மனிதர்கள் ஸ்துதிகள் கூடிய யக்ஞத்தின் சமீபம் வரட்டும். யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர், 16ம் கூடிய இந்த்ரனுக்காக. இந்த வேதஸ்துதிகள், யக்ஞமே நீ 16ம் கூடிய இந்திரனிடம் செல்லும் வழி.*

## அனுவாகம் 39

**"அசாவி சோம ... ஷோடசினே"**

*சோமரசம் (விஷய ரூபத்தில் சோமன்) உனக்குப் பிழியப்பட்டது. பலவானே எதிரிகளை அடக்குபவனே வருவாயாக. அந்தரிக்ஷத்தை சூர்யன் கிரணங்களால் நிரப்புவது போல் இந்திரியங்களாகிய உன்னை இந்த ரசமாகிய விஷயங்கள் நிரப்பட்டும். யஜமானன் என்ற உபயாமத்தால், சோமனே எடுக்கப்பட்டுள்ளீர். 16ம் கூடிய இந்திரனுக்காக இந்த விஷயங்களே நீ 16ம் கூடிய இந்திரனிடம் செல்லும் வழி.*

## அனுவாகம் 40

**"சர்வஸ்ய ... ஷோடசினே"**

*எல்லாவற்றையும் தாங்கும் பூமி உன்னை (இந்த்ரன் - சரீர இந்திரியங்கள்) தன் மடியில் தாங்கட்டும். இவனுக்கு (இந்திரனுக்கு) சுகமாகவும், சுகாசனமாகவும் ஆவாயாக. இவனுக்கு பரந்த பாதுகாப்பையும் அருள்வாயாக. யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டுள்ளீர் சோமனே, 16ம் கூடிய இந்திரனுக்காக. சரீர இந்திரியங்களே நீ 16ம் கூடிய இந்திரனிடம் செல்லும் வழி.*

## அனுவாகம் 41

**"மஹாகும் இந்த்ரோ ... ஷோடசினே"**

*மஹான் இந்த்ரன், வஜ்ரத்தைக் கையில் தாங்கியவன், 16 நலங்களை அருளுவாராக. கொடைவள்ளல் ஆகியவன் எங்களுக்கு மங்களத்தை செய்வாராக. எங்களை வெறுக்கும் பாவிகளை வதம் செய்வாராக. யஜமானன் என்ற உபயாமத்தால் எடுக்கப்பட்டு உள்ளீர், சோமனே, 16ம்*

உடைய இந்திரனுக்காக. இந்த செயலை 16ம் உடைய இந்திரனிடம் செல்லும் வழி.

(16ம் கூடிச் செயல்)

## அனுவாகம் 42

"சஜோஷா ... ஷோடசினே"

ஞானவானே, வீரனே, விருத்ரனை அழித்தவனே, பிரியத்துடனும், உன் கணங்களுடனும், சோமரசத்தை பருகுவாயாக, சத்ருக்களை அழிப்பாயாக. போர்புரிய வருபவர்களை அடக்குவாயாக. எப்பொழுதும் எங்கும் எங்களுக்கு அபயம் அளிப்பாயாக. யஜமானன் என்ற உபயாமத்தால் சோமனே எடுக்கப்பட்டுள்ளீர், 16ம் உடைய இந்திரனுக்கு இந்த இந்திரிய சமூஹமே நீ இந்திரனிடம் செல்லும் வழி.

## அனுவாகம் 43

"உதுத்யம் ஜாதவேதசம் ... சக்குஸ்க்ருதம்"

உண்டான அனைத்தையும் அறியும் இந்த தேவனை, உலகங்கள் அனைத்தும் காணும்படியாக கிரணங்கள் சுமந்து செல்கின்றன. பூஜிக்கத் தகுந்தவனும், தேவர்களின் முகமும், மித்ரன், வருணன், அக்னி முதலானவர்களுடைய கண்ணும் ஆன இவர் மேலே சென்றார். த்யாவா பிருதிவி, அந்தரிக்ஷம் இவற்றை, அசையும் அசையாப் பொருள் களின் ஆத்மாவும் ஆன சூர்யன் அனைத்தின் உள்ளும் வியாபித் திருக்கிறார். அக்னியே, மங்களமான ராஜ பாட்டையில் எங்களை அழைத்துச் செல். அனைத்து வழிகளையும் அறிந்த ஞானியே, எங்களுடைய தீய குணம் கொண்ட பாபங்களை எதிர்த்துப் போர் புரிவாயாக, மிகுந்த சரணாகதி செய்யும் துதிகளை உனக்கு சமர்ப்பிக்கிறேன். வானத்தில் செல், சுவர்க்கத்தை அடை. உங்கள் ரூபம் மாதிரியான ரூபத்துடனும், நீங்கள் கிரஹிக்கக்கூடிய அன்னம் முதலான விஷயங்கள் எந்த ரூபத்திலோ அந்த ரூபத்திலும் யஜமானனாகிய நான் ஹவ்யரூபமாக கூட வருகிறேன். மிகச் சிறந்த அதிநாக சுவர்க்கத்தில் இந்த ஹவ்ய ரூபமாகிய என்னை அனைத்தையும் அறிந்த துத: என்ற அக்னி அனைத்து தேவர்களுக்கும் பகிர்ந்து அளிக்கட்டும். அக்னியே

ஹவ்யரூபமான, இந்த உன்னுடைய, சோமனால் கொண்டு வரப்பட்ட (என்னை), ருதத்தின் (இயற்கை நியதியின்) வழியால் அழைத்துச் செல். யக்ஞத்தின் வழியால் சோமனின் அளிப்பு (சந்திர தக்ஷிணை) செல்லட்டும். மங்களமான வழியினால் அழைத்துச் செல்லும் ரிஷியினாலும், ரிஷிசந்ததியாலும், பித்ருக்களாலும், பித்ரு சந்ததியாலும் காணப்பட்ட, மங்களமான, பொருட் செறிவு நிறைந்த வேத மந்த்ரதை வடிவமைத்துள்ளேன் (அக்னியே) சுவர்க்கத்தைக் காண்பாயாக. அந்தரிக்ஷத்தில் பரந்து செல். சதஸில் உள்ள தேவர்களிடம் எங்களால் கொடுக்கப் பட்டது செல்வதாக. இனிமையானவையாக யஜமானன் உள் புகுவதாக. எங்களை விட்டு அகலாமல் தேவ யானமாகிய வழியில் செல்க. நல்லன செய்தோர் உலகத்தில் வாழ்க. அது எங்களுக்கு மங்களமாகச் செய்யப்பட்டது. (யஜமானன் என்ற உபயாமத்தால் அளிக்கும் சோமரசத்தை சுவர்க்கத்தில் அக்னி தேவர்களுக்கு பகிர்ந்து அளிக்கிறார். நல்ல மகிழ்வுடன் யஜமானன் அமரும் தேவர்கள் அவனை நல்வழியில் நடத்துகின்றனர்).

## அனுவாகம் 44

"தாதா ... வாதேதா:"

அனைத்தையும் படைத்தவர், ஸ்ரேயஸ் அனைத்தும் கொடுப்பவரான தாதா, சவிதா; எல்லா நலங்களையும் கொடுப்பவரான பிரஜாபதி, அக்னி எங்களுடைய இந்த யக்ஞத்தில் மகிழட்டும். எங்கும் நிறைந்தவரான த்வஷ்டா, பிரஜைகளை தாராளமாக அருளுபவர், யஜமானனுக்கு மக்கட்செல்வத்தை அருளட்டும். இந்திரனே மனதுடன் ஞானத்தை ஒன்று சேர்க்கவும். ஞானவான்களாலும், மங்களங்களாலும் (ஒன்று சேர்க்கவும்). யக்ஞத்தில் பங்கு பெறும் தேவர்களுடைய நல்ல எண்ணங்களால், தேவர்களால் செய்யப்பட்ட மந்த்ரங்கள் எது உண்டோ அவற்றால் (ஒன்று சேர்க்கவும்). பலத்தினாலும், வனப்பினாலும், மங்களமான உடல்களால், மங்களமான மனதினால் அடையப்பட்டவர்களாக ஆகுவோமாக. த்வஷ்டா இங்கு எங்களுக்கு நல்ல இடத்தை அருளுவாராக. உடலில் குறைகள் எதுவோ அவற்றை நிறை செய்வீராக. எந்த, இப்பொழுது ஆராதிக்கப்பட்டு இந்த யக்ஞத்தில்,

அக்னியே, உன்னை ஹோத்ருவாக வரித்துள்ளோம். இங்கு சமிருத்தியை (மங்களமான நிறைவை) அளிப்பீராக. மேலும் சமிருத்திக்கு உள்ள தடைகளை சாந்தி செய்வீராக எல்லாவற்றையும் அறிபவராக, வித்வானே, யக்ஞத்தை அடைவீராக.

தேவர்களே, எவர்கள் இந்த (சோமரச பிழியும்) யக்ஞத்தை வந்து அடைந்தீர்களோ, உங்களுடைய வாழும் வாசஸ்தலமாக செய்தோம் உண்பவர்களாகவும், அருந்துபவர்களாகவும், செல்வங்கள் அருளுபவரான நீங்கள் எங்களுக்கு செல்வங்களை அருளுவீர்களாக. ஒளிவீசுபவனே, அக்னியே, ஹவிஸ்களை விரும்பியவர் களாக எந்த தேவர்களோ, அவர்களை உங்களுடைய ஸ்தானத்தில் அமர்த்துவாயாக. ஹவிஸ்களை எடுத்துச் செல்பவர்களாகவும், தாங்குபவர்களாகவும், ஒளிவீசும், வெப்பம் உள்ள வசுவாகிய (அக்னியை) கூடி நிற்கட்டும். யக்ஞமே, யக்ஞமாகிய சவிதாவிடம் செல்வாயாக. யக்ஞ பதியான அக்னியிடம் செல்வாயாக. தன்னுடைய மூலத்திற்கு செல்வாயாக. அர்ப்பணம் செய்கிறேன்., யக்ஞமே, யக்ஞபதியே, மங்களமான வீரனை, (யஜமானன்) சூக்த வாகங்கள் கூட (உங்களுக்கு) அர்ப்பணம். வழியை அறிந்த தேவர்கள், வழியை அறிந்து, வழியே செல்கின்றனர். மனதின் பதியே தேவனே (இந்த்ரனே) இந்த யக்ஞத்தை தேவர்களில் அர்ப்பணம் செய்கிறேன். வாக்கில் அர்ப்பணம் செய்கிறேன். வாயுவில் நிலை நிறுத்துவாயாக.

## அனுவாகம் 45

"உருகும் ஹிராஜா ... ஸ்ருஜவர்ச்சஸா"

ராஜா வருணன், சூர்யன் தொடர்ந்து செல்வதற்காக, பரந்த வழியைச் செய்தார் அல்லவா. ஆபோதேவீகள் அருளியவற்றில் எதிர் தாங்குவதற்கு, பதங்கள் (அ) நிலைகள் செய்தார். மேலும் ஹ்ருதயத்தை துன்புறுத்துபவரும், சித்தத்தை மிரட்டுபவரும் (அவரே). ராஜனே (வருணன்) நூற்றுக்கணக்கான, பாவ எண்ணங்களை அழிக்கும் வழிகள் உன்னுடையவை (எங்களுக்கு) இருக்கட்டும். தீய சக்திகளை இயக்கும் நிருருதியை அடக்குவாயாக. எதிர்மறையான சித்தத்தால் செய்யப்பட்ட பாபத்திலிருந்து எங்களை விடுவிப்பாயாக.

வருணபாசம் முறியடிக்கப்பட்டது. அக்னியின் முகம் ஆபோதேவிகள் உள் பிரவேசித்தது. ஆபஸ்ஸின் புத்ரனே, எல்லா யக்ஞகிருஹங்களிலும் ஒவ்வொன்றிலும் அசுர சக்திகளிடமிருந்து பாதுகாத்துக் கொண்டு உள்ள அக்னியே, சமித்தை (யஜமானனை சரீரத்தை) ஸ்வீகரிப்பா யாக. ஒவ்வொரு இடத்திலும் (சரீரத்திலும்) உன்னுடைய நாக்கு நெய்யை (வேத வாக்கை) பெற்று மேல் செல்லட்டும். ஆபஸ்களின் உள்ளே சமுத்ரத்தில் உன்னுடைய ஹ்ருதயம் குடிகொள்ளட்டும். யக்ஞபதியே உன்னை யக்ஞத்தி னுடைய ஹவிஸ்களால் (வேத மந்த்ரங்களால்) அளிக்கப் பட்ட ஓஷதிகள், மேலும் ஆபோதேவிகளையும் அடையட்டும். சூக்தவாக்காலும் நமோ வாக்காலும் உன்னை வழிபடுகிறோம். (பாவங்களை) கழுவுபவனே, மெதுவாகச் செல்பவன், ஊர்ந்து செல்பவனாக உள்ளாய் (ருது, காலம்), ஊர்ந்து செல்பவனே, தேவர்களின் அருளினால், தேவர்களுக்கு இழைக்கப்பட்ட பாவங் களையும், மனிதர்களின் கருணையினால் மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட பாவங்களையும் (எங்களிடமிருந்து) அழிப்பாயாக. விரிந்துள்ள துன்புறுத்தும் சக்திகளிடமிருந்து எங்களைக் காப்பாற்று. ஆபஸ், ஓஷதிகள் எங்களுக்கு மங்களம் தரும் நண்பர்களாக இருக்கட்டும். எவன் (தீய சக்தி) என்னை வெறுக்கிறானோ, எவனை நாங்கள் வெறுக்கிறோமோ, அவனுக்கு ஆபஸ் ஓஷதிகள் எதிரிகளாக ஆகட்டும்.

ஆபோதேவிகளே இவர் (அக்னி) உங்களுடைய கர்ப்பத்தில் உள்ளவர். அவரை நல்ல பிரீதியுடையவ ராகவும், நன்கு பேணப்பட்டவராகவும் செய்தோம். தேவர்களிடம் நாங்கள் மங்களமான கர்மங்கள் செய்தவர்கள் என அறிவிக்கவும். வருணபாசத்தின் முடி அவிழ்க்கப்பட்டது. வருண பாசம் அழிக்கப்பட்டது. அக்னியே வளர்பவனாக உள்ளாய். எங்களை வளரச் செய்வாயாக. ஒளியை எனக்கு நிலைநிறுத்துவாயாக. ஆபஸ் உள் (உன்னை தொடர்ந்து யஜமானனாகிய நான்) கூடச் செல்கிறேன்.

நாங்கள் (ஆபோதேவீகள்) ரசத்தினால் (சத்ரசம், சித்ரசம், ஆனந்த ரசம்) மங்களமாக சிருஷ்டிக்கிறோம்.

*ஆப ஓஷதிகள் உடையவனே, அக்னியே, உடன் வந்துள்ள அந்த (யஜமானனாகிய) என்னை ரூபத்துடனும் பலத்துடனும் சிருஷ்டிப்பாயாக.*

**அனுவாகம் 46**

**"யஸ்த்வா ஹ்ருதா ... விஜ்யோதிஷா"**

*எந்த மரணமில்லா உன்னை, மிருத்யுவசப்பட்ட நான் ஹ்ருதயத்தினால், துதிகளால் நினைப்பவனாக அழைக்கிறேன். பிறந்த அனைத்தும் அறிபவரே, எங்களிடம் புகழை ஸ்தாபிப்பாயாக. பிரஜைகளால் நாங்கள் அழியாத் தன்மை அடைவோமாக. நற் செயல்புரியும் எவனுக்கு (அவனுக்கு) ஜாத வேதஸே, உலகத்தை சுகம் அளிப்பதாகச் செய்கிறாய் அல்லவா. அவன் சக்தி படைத்தவனாகவும், புத்ரர்கள் உடையவனாகவும், ஞானம் உள்ளவனாகவும், செல்வத்தையும் மங்களத்தையும் அடைகிறான். வலிமையின் மங்களமான புத்ரனாகிய உன்னிடம், விருப்பங்களை வேண்டி பிரார்த்தனை செய்பவர்கள், அடைகின்றனர்.*

*இந்த்ரனே உன்னை (எவரும்) மிஞ்சியதில்லை. ஸ்துதி, ஸ்துதிகளில், மந்த்ரம், மந்த்ரங்களில் பிழியப்பட்ட சோமன் (பிறப்பிக்கப்பட்ட சோமன்), தனங்கள் அருளும் இந்த்ரனை மகிழ்விக்கிறார். பிரச்னைகளில் அவதிப்படும் புத்ரர்கள் பிதாவை அணுகுவது போன்று, எல்லோருக்கும் பொதுவான தந்தையாகிற (இந்திரனை) பாதுகாப்பிற்காகத் துதிக்கின்றனர்.*

*ரசமாகிற ஆபோதேவிகளுடன் ஒளியினால் ஜாதவேதஸ் பிரகாசிக்கிறீர். ஆபோதேவிகளை உன்னைத் தொடர்ந்து அடைகிறேன். (ஆபோதேவிகளாகிய நாங்கள்) ரசத்தினால் மங்களமாக மீண்டும் சிருஷ்டிக்கிறோம். புஷ்டியுள்ளவனே, அக்னியே வந்துள்ள அந்த (யஜமானனாகிய) என்னை மீண்டும் ரூபத்துடன் சிருஷ்டிப்பாயாக. இவனுடைய (யஜமானனுடைய) செல்வமும், செல்வத்தைக் காப்பவனும், பெரிய செல்வங்களை உடையவனும் நீயே. உன்னுடைய நல்ல எண்ணத்தில் நாங்கள் இருப்போமாக.*

*அக்னியே யக்ஞங்களில் செல்வங்களுடைய பதி என்று மனதால் துதிக்கிறேன். சக்தியை வேண்டியவர்*

களாக உன்னால் அவற்றை வெல்வோமாக. மனிதர் களுடைய போரிடும் குணத்தை வெல்வோமாக.

அக்னியே, யுத்தங்களில் வெல்பவர்களில் சிறந்தவனே, சிறந்த துதிகளால் வணங்கப்பட்டவனே, உன்னை ஞானிகள் விருத்தி அடைவிக்கின்றனர். அந்த நீ எங்களுக்கு மங்களமான வீர்யத்தை அருள்வாயாக. இந்த அக்னி எங்களுக்கு விரும்பிய நலன்களைச் செய்வாராக. இவர் போர்களில் எதிரிகளை நாசம் செய்து கொண்டு முன்னேறுவாராக. வெற்றியினால் மிக மகிழ்ந்த மனத்தினனாக இவர் எதிரிகளை மேலும் வெல்வாராக. அன்னம் அல்லது சக்தி அடையக் கூடியவற்றில் இவர் அன்னம் அல்லது சக்தியை வென்று அடையட்டும்.

ஞானி, கிருஹபதி, இளையோன், நாக்குள்ள வாயுடையவன் (வேதத்தை வாயினால் ஓதுபவன்) ஆகிய அக்னி (யஜமானனிடம் உள்ள கார்ஹபத்ய அக்னி) அக்னியால் (வேதவாக்காகிய ஆஹவனீய அக்னியால்) கொழுந்துவிட்டு எரிகிறான். (கார்ஹபத்ய) அக்னியே ஞான வேட்கையுடையவனான நீ ஞானியான குருவினாலும், பொருள், பொருள்களின் சேர்க்கையாலும் போல் (விருத்தி அடைகிறாய்) நண்பன், நண்பனால் பலம் பெறுவது போல் வளர்கிறாய்.

அக்னியே, உன் ஒளிப் பிழம்புகள் மேல் நோக்கி செல்கின்றன. (ஞானத்தை குறித்து) விசேஷமான ஜ்யோதியினால்.



# யக்ஞம் - ஆஹவனீய குண்டம் ஒரு ஆராய்ச்சி

**வே**தயக்ஞ கர்மாக்களில் அமைக்கப்படும் ஆஹவனீய அக்னி குண்டத்தை பற்றி பல விஷயங்கள் சூசகமாக முதல் நான்கு பிரஸ்னங்களில் காணப்படு கின்றன. அந்த அடிப்படையில் ஆஹவனீய குண்டத்தைப் பற்றி இங்கு ஆராயப்படுகிறது.

யக்ஞம் என்பது ("யாதயதி க்ஞம்") "நான் என்று அறிபவனை அழைத்துச் செல்கிறது" என்று பொருள் கொள்ளலாம். முதல் பிரஸ்னத்தில் உத்கிராபம் (மேல் உலகம் செல்லுதல்), நிக்ராபம் (கீழ்உலகம் திரும்புதல்) என்று குறிக்கப்படும் வழியை பின்வருமாறு குறிக்கலாம்.




சவிதா (எ) விஷ்ணுவால் ஒவ்வொரு பதமும் மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது

 நிக்ராபம் (அ) கீழ்லோகம் செல்லுதல்

 உத்க்ராபம் (அ) மேல் லோகம் செல்லுதல்

மூன்று பதங்களும் சேர்ந்ததே ஆஹவனீய குண்டம். ஆஹவனீய அக்னி வேத மந்த்ர ஸ்வரூபமே. அதுவே யக்ஞத்தின் போது தகுந்தவாறு மாறிச் சென்று செயலாற்று கிறது.

இனி ஆஹவனீய குண்டத்தைப் பற்றி மேலும் ஆராயலாம்.

**1) அதிநாகம் (அ) பரபமபதம்**

| | | | |
|---|---|---|---|
| சுவ: | மூன்றாம் சுவர்க்கம் | இரண்டாம் சுவர்க்கம் | முதல் சுவர்க்கம் |
| புவ: | மூன்றாம் புவர்லோகம் | இரண்டாம் புவர்லோகம் | முதல் புவர்லோகம் |
| பூ: | மூன்றாம் பூலோகம் | இரண்டாம் பூலோகம் | முதல் பூலோகம் |
| | பதம் 3 | பதம் 2 | பதம் 1 |

மூன்று பூலோகப் பகுதிகள்

மூன்று புவர்லோகப் பகுதிகள்

மூன்று சுவர்லோகப் பகுதிகள்

இதன் மேல் பரமபதம் (அ) அதிநாகம் என்ற சுவர்க்கம்



# ஆஹவனீய அக்னி குண்டம் சிருஷ்டிக் கிரமத்தை பிரதிபலிக்கும் யந்த்ரம்.

சச்சித் ஆனந்தம் ஆகிய சகுணப் பிரம்மன் சவிதாவாக பராகாசத்தில் சிருஷ்டி கார்யத்தை சங்கல்பிக்கிறார். பராகாசத்தில் கோடிக்கணக்கான பிரமாண்டங்கள் சிருஷ்டிக்கப்படுகின்றன.

**பராகாசம்**
**சத், சித், ஆனந்தம்**
**சவிதா**

| பரமபதம் | சிதாகாசம் | சித்தாகாசம் | ஸ்தூல ஆகாசம் |
|---|---|---|---|
| | பஞ்சபிரம்மன் ஆகாசதன் மாத்ரம் ஞாநம் (ஈசானன்) ↓ | அந்தஃகரணம் + பிராணன் அக்னிதன் மாத்ரம் விஞ்ஞாநம் (இந்திரன்) ↓ | பிருதிவிதன் மாத்ரம் அஞ்ஞாநம் (அக்னி) ↓ |
| | ஆனந்தம் (சோமன்) ↓ | வேதம் ஆஹவனீய அக்னி ↓ | காலாக்னி (சூர்யன்) (அ) யமன் ↓ |
| | பஞ்சபிராணன் வாயுதன்மாத்ரம் | ஒளிசமுத்ரம் ஆபஸ்தன் மாத்ரம் (வருணன்) | பஞ்சீகிருத ஸ்தூல சிருஷ்டி மனிதர்கள் (நிருருதி) |
| | பதம் 1 | பதம் 2 | பதம் 3 |

*ஒவ்வொரு பிரம்மாண்டமும் சத்யம், ருதம் இவற்றால் செயல்படுத்தப்படுகின்றன. உதாரணமாக ஒரு பிரம்மாண்டத்தை எடுத்துக் கொண்டு மேலும் ஆராய்வோம். பிரம்மாண்டத்தில் முதலில் சிதாகாசம் தோன்றுகிறது. இந்த சிதாகாசத்தில் காரண உலகங்கள் அமைகின்றன. சிதாகாசத்தில் உள்ள மூன்றாவது சுவர்க்கத்தில் பஞ்சபிரம்மன் ஆவிர்பவித்து சிருஷ்டி, ஸ்திதி, லய, திரோதான, அனுக்ரஹ ரூபத்தில் சோமன் என்ற ஆனந்தத்தால் பஞ்சபிராணஸ்வரூபமாக மூன்றாவது பிருத்வியில் உருவெடுக்கிறது.*

*பிராணனே சகல செயல்களுக்கு ஆதாரமாக உள்ளதால், பஞ்சப்பிராணன், பல சித்தாகாசங்களை சிருஷ்டிக்கிறது. சித்தாகாசம் என்பது சூஷ்ம உலகத்தைத் தாங்குகிறது. ஒவ்வொரு சித்தாகாசத்தையும் ஒரு இந்த்ரன் பரிபாலிக்கிறான். உதாரணமாக ஒரு சித்தாகாசத்தை எடுத்துக் கொண்டால், (இந்த்ரன்) அந்தக்கரணம் +*

பிராணன் ரூபமாகி பலவிதமான ஞானங்களாக (விஞ்ஞானம்) வேத மூலமாக, இரண்டாவது பிருதிவியில் ஒளிவெள்ளமாகவும் பின்னர் ஆபஸ்தன்மாத்ர ஸ்வரூபமாகவும் மாறுகிறது.

இந்த ஆபஸ் தன் மாத்ர தத்துவமே ஸ்தூலசிருஷ்டிக்கு ஆதாரம். ஆபஸ்தன்மாத்ரை பல ஸ்தூல ஆகாசங்களை அதனுள் சிருஷ்டிக்கிறது. உதாரணமாக ஒரு ஸ்தூல ஆகாசத்தை எடுத்துக் கொண்டால், ஸ்தூல ஆகாசத்தில் பிருதிவிதன்மாத்ரை முதல் ஸ்வர்க்கத்தில் தோன்றுகிறது. இதை வைஸ்வானரனாகிய அக்னி பரிபாலிக்கிறான். இந்த பிருதிவிதன்மாத்ரை, அந்தரிக்ஷத்தில் யமன் (அ) காலாக்னியாக, பின்னர் முதல் பிருதிவியை அடைந்து அங்கு மற்ற பூத தன்மாத்ரைகளுடன் சேர்ந்து, பஞ்சீகிருத ஸ்தூல சிருஷ்டியாக பிருதிவியில் உருவெடுக்கிறது. பஞ்சீகிருத ஸ்தூல சிருஷ்டி முழுதும் அஞ்ஞானத்தால் மூடப்பட்டு நிருருதியால் பரிபாலிக்கப்படுகிறது. அப்படி ஒரு ஸ்தூல சிருஷ்டியில் உள்ள ஒரு உலகத்தில் மனிதன் உண்டாகிறான்.

பராகாசத்தில் பல பிரம்மாண்டங்கள். அவற்றுள் ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் உள்ள சிதாகாசத்தில் (காரணலோகம்) பல சித்தாகாசங்கள் (சூஷ்மலோகம்). ஒவ்வொரு சித்தாகாசத்திலும் பல ஸ்தூலாகாசங்கள் (ஸ்தூலலோகம்). அப்படி ஒரு ஸ்தூலாகாசத்தில் பிருதிவி லோகத்தில் கட்டுப்பட்ட ஜீவனே ஒரு யஜமானன். ஆக சிருஷ்டி என்பது நம் கற்பனைக்கெட்டாத ஒன்று. அதை அறிதல் ஜீவாத்மாவுக்கு இயலாத காரியம்.

சவிதாவின் சிருஷ்டிக்ரமத்தில் மாறுதல்களை உண்டு பண்ணுவது சோமன், ஆஹவனீய அக்னி, காலம் என்ற அக்னிகளே. வேதம் ஞானஸ்வரூபமானதால் அது லோகத்திற்கு தகுந்தவாறு மாறி பராகாசம் வரை இயங்கும் சக்திவாய்ந்தது (சத்வாரிவாக் பரிமிதா பதானி - வாக்சூக்தம்). ரிஷிகள் தங்கள் தபோவ்லிமையால் வேத மந்த்ரங்களைக் கண்டறிந்து நமக்கு அளித்துள்ளனர்.

சாக்ஷி மட்டுமேயாகிய சவிதாவின் சங்கல்பத்தால் ருதம் இயங்குவதால், சவிதாவிற்கோ, ருதத்திற்கோ பாவம், புண்யம்; இன்பம், துன்பம், ஞானி, அஞ்ஞானி என்ற

வேறுபாடுகளில் விருப்போ, வெறுப்போ இல்லை. ஏனெனில், இவை அனைத்தும் வேறுபாடுகளுள்ள சிருஷ்டிக்கு அவசியம். மேலே கூறிய எதையும் அறிய வேண்டுமென்றோ அல்லது யாக யக்ஞங்கள், நல்ல கர்மங்கள், கடவுளை வேண்டுதல் என்பன செய்ய வேண்டுமென்றோ ருதத்தின் செயலில் நிர்ப்பந்தம் இல்லை.

நல்ல செயல்களையும், தீயசெயல்களையும் எண்ணியபடி செய்யும் ஜீவர்கள் இந்த சிருஷ்டியில் உயர் பிறவிகளிலும் ஜடப்பிறவிகளிலும் மேலும் கீழுமாக உழன்று கொண்டிருப்பார்கள். ஏதேனும் ஜீவனுக்கு ருதத்தின் தூண்டுதலால் உண்மை அறியவேண்டும் என உந்துதல் ஏற்பட்டால் அப்படிப்பட்ட ஸ்ரத்தை உடைய ஜீவன்களுக்கே ரிஷிகளின் வேதம், யக்ஞம், புராணங்கள் உதவியாயிருக்கும்.

யக்ஞத்தில் அக்னி குண்டமும் சமித்துகள், நெய், ஹவிஸ் போன்றவை பஞ்சாயதன பூஜையில் சிலா, ரூபங்களான பிரதீகங்கள் போன்றவை. சோஹம்பாவனை யுடன் செய்யும் பூஜையே முக்யமானதுபோல், யக்ஞத் திலும் வேதமந்திரங்களும், யஜமானனின் ஸ்ரத்தையுடன் கூடிய சங்கல்பமுமே முக்யம்.

யக்ஞத்தை செய்யும் யஜமானன் தன்னையே ஆஹவனீய அக்னியில் அர்ப்பணித்து, சூஷ்ம, காரண லோகங்களைக் கடந்து பராகாசத்தில் சத்சித் ஆனந்தத்தில் மீண்டும் சங்கமமாகி, ஒவ்வொரு நிலையிலும் புனிதப் படுத்தப்பட்டு திரும்பவும் பிருதிவிலோகத்திற்கு சிருஷ்டியில் தன் பங்கை ஆற்றவருகிறான். ஆஹவனீய அக்னியின் அருளால் ருதத்தை ஒட்டியே நல்வழி செல்லும் வகையில் செயல்களைப் புரிகிறான்.

இவ்வாறு வாழ்நாளில் பலமுறை மேலும் கீழுமாக யக்ஞத்தின் உதவியால் சென்று திரும்புவதால் அவனுடைய ஞானம் விருத்தியாகிறது. (தைத்ரீய சம்ஹிதை பிரஸ்னம் 1 அனுவாகம் 13ல் – "உத்கிராபஞ்ச நிக்ராபஞ்ச பிரஹ்ம தேவா அவீவிருதன் – மேல் செல்வதும் கீழ் வருவதும் ஆன யக்ஞ செயலால் தேவர்கள் பிரஹ்ம ஞானத்தை வளர்க்கின்றனர்). ருதத்தை ஒட்டியே வாழ்க்கையை நடத்தி தானும், வாழும் லோகமும் உய்யும்

வகையில் தேவர்கள் யஜமானனுக்கு வாழ்வை அருளுகின்றனர்.

*2) தைத்ரீய உபநிஷத்தில் கூறப்பட்ட நிர்க்குண சகுணப்பிரம்ம நிலைகளையும் சேர்த்து ஆஹவனீய குண்டத்தை பின்வருமாறு அறியலாம்.*




அதிநாகம் (எ) பரமபதம்




| | பதம் 3 | பதம் 2 | பதம் 1 |
|---|---|---|---|
| சுவ: | ஈஸ்வர ஜாக்ரத் லோகம் | தேவர்கள் ஜாக்ரத் லோகம் | மனிதர்கள் ஜாக்ரத் லோகம் |
| புவ: | ஈஸ்வர ஜாக்ரத் லோகம் | தேவர்கள் ஜாக்ரத் லோகம் | மனிதர்கள் ஜாக்ரத் லோகம் |
| பூ: | ஈஸ்வர ஜாக்ரத் லோகம்<br>தேவர்கள் ஸ்வப்ன லோகம்<br>மனிதர்கள் சுஷுப்தி லோகம் | தேவர்கள் ஜாக்ரத் லோகம்<br>மனிதர்கள் ஸ்வப்ன லோகம் | மனிதர்கள் ஜாக்ரத் லோகம் |

*3) புராண வழியில் ஆஹவனீய குண்ட தத்துவம்*

| நிர்க்குண ப்ரம்மம் |
| --- |
| பரசிவம் |

→

| சகுணப் பிரம்ம அஹம் (நான்) |
| --- |
| சிவலிங்கம் (அ)<br>அர்த்தநாரீஸ்வரர்<br>சச்சிதானந்தம் |

↓

பரமபதம்

| சவிதா – அதிதி |
| --- |
| பரமேஸ்வரன் (அ)<br>நடராஜர் – சிவகாமி<br>சத், சித், ஆனந்தம் |

↓

| | | | |
| --- | --- | --- | --- |
| சுவ: | பஞ்சபிரம்மம் ஈசானன் (அ) சதாசிவம் ஈஸ்வரன், ருத்ரன் விஷ்ணு, பிரஹ்மா (ஞானம்) (அ) சித் | தேவர்கள் விக்ஞானம் (பலவித அறிவு கொண்ட) புத்தி | மனிதர்கள் அக்ஞானம் மனது |
| புவ: | ஆனந்தம் | துன்பம் சிறிது கலந்த மிகுந்த இன்பம் | இன்பம் சிறிது கலந்த மிகுந்த துன்பம் |
| பூ: | சத் (வாயு) (அ) பிராணன் அரூபம் (அ) ரூபம் இன்மை | சத் (ஜலம்) விரூபம் (அ) இடத்துக்குத் தகுந்த பல ரூபங்கள் | சத் (பிருதிவீ) சரூபம் (அ) ரூபம் உள்ளவர் |
| | பதம் 3 | பதம் 2 | பதம் 1 |

### 4) மந்த்ர சாஸ்திரம் மூலமாக அறியப்படும் ஆஹவனீய குண்டத் தத்துவம்




பரமபதம்




| | | | |
|---|---|---|---|
| சுவ: | ஈஸ்வரன் / வேதங்கள் / பஸ்யந்தீ வாக் | தேவர்கள் / வேதங்கள் / மத்யமா வாக் | மனிதர்கள் / வேதங்கள் / வைகரீ வாக் |
| புவ: | ↓ | ↓ | ↓ |
| பூ: | ம | உ | அ |
| | பதம் 3 | பதம் 2 | பதம் 1 |

*5) தைத்ரீய உபநிஷத் ஆனந்தவல்லியில் கூறப்பட்ட சிருஷ்டி வாழும் பகுதிகளாக ஆஹவனீய குண்டம்*

| | பதம் 3 | பதம் 2 | பதம் 1 |
|---|---|---|---|
| சுவ: | பிரஹ்மா | இந்திரன் | ஆஜான ஜான தேவர்கள் |
| புவ: | பிரஜாபதி | தேவர்கள் | பிதிருக்கள் தேவகந்தர்வர் மனுஷ்ய கந்தர்வர் |
| பூ: | பிருஹஸ்பதி | கர்ம தேவர்கள் | மனிதர்கள் |

*1. வருணபாசம் மனிதர்களின் மற்ற லோகங்களின் அனுபவங்களைக் கட்டுப்படுத்துகிறது.*

*2. மனிதர்களின் எல்லைக்குட்பட்ட செயல், எண்ணங்கள் முறையே கந்தர்வர்கள், பித்ருக்கள், ஆஜானஜான தேவர்களால் தூண்டப் பெறுகின்றன.*

*3. மனிதர்களின் ஸ்வப்ன நிலையில், திறன் உடையவர் களுக்கு அறிவு, செயல், எண்ணங்கள் கர்மதேவர்கள், தேவர்கள், இந்திரனால் தூண்டப்பெற்று, இவையே அம்மனிதர்களின் விழிப்பு நிலையில், விஞ்ஞானிகள், கவிகள், சாஸ்திர விற்பன்னர்கள் செயல் அறிவாகப் பரிணமிக்கின்றன.*

*4. மனிதர்களின் சுஷுப்தி நிலையில், அறிவு, செயல், எண்ணங்கள், பக்குவம் அடைந்தவர்களுக்கு பிருஹஸ்பதி, பிரஜாபதி, பிரம்மாவால் (அந்த லோகங்களில் உள்ள தேவர்களால்) தூண்டப் பெறுகின்றன. இவையே விழிப்பு நிலையில் ஞானிகள், பக்திமான்கள் செயல், எண்ணங் களாகப் பரிணமிக்கின்றன. சுஷுப்தி நிலையில் ஞானம் ஆட்சி புரிவதால், மெய்ஞானம் அளிக்கப்படுகிறது. ஆகவேதான் உலக அறிவும், சாஸ்திர அறிவும் இல்லாதவர்*

ஆயினும் பக்குவத்தினால் பிரம்ம ஞானிகள், பக்திமான்கள் உலகில் காணப்படுகின்றனர்.

5) வேதியர்கள் இந்த அனைத்து லோகங்களில் உள்ள தேவர்களால் தூண்டப்பெறுகின்றனர்.

6) சாதாரண மனிதர்கள் இறக்கும்போது பித்ருலோகம் அல்லது முதல் சுவர்க்கம் சென்று அனுபவம் அடைந்து மீண்டும் மனித லோகத்தில் பிறக்கின்றனர். இறக்கும்போது வருண பாசத்திலிருந்து விடுபட்டு பிறக்கும் போது வருண பாசத்திற்குக் கட்டுப்படுகின்றனர்.

7) சாதாரண மனிதர்கள் ஒவ்வொரு நாளும் ஸ்வப்ன, சுஷுப்தி அவஸ்தையில் கர்ம தேவர்கள், பிருஹஸ்பதி லோகங்களுக்குச் சென்று திரும்புகின்றனர். அங்கு மிகச் சிறிய எல்லைக்குட்பட்ட அனுபவமே கிடைக்கிறது. இங்கு செல்லும்போதும், சரீர, விழிப்புணர்வு ஆகிய வருண பாசத்திலிருந்து விடுபட்டுத்தான் செல்ல முடியும்.

7) வேதமார்க்கத்தில் தான், வேத மந்த்ரங்கள், யக்ஞத்தின் உதவியால் எல்லா உலகங்களுக்கும், விழித் திருக்கும்போதே, சரீர, விழிப்புணர்வு அற்றுச் செல்ல முடியும். ஆயினும் யக்ஞ முடிவில் மனித உலகத்துக்குத் திரும்ப வேண்டும். அதுவும் யக்ஞத்தின் முறையிலேயே வகுக்கப்பட்டுள்ளது.



# பிரஸ்னம் 5 (அனுவாகம் 1-4)

## அக்ன்யாதேய ப்ராஹ்மணம்

இது கல்ப ப்ராஹ்மணத்தைச் சேர்ந்தது. கல்ப பிராஹ்மணம் பிரஜாபதி முதலியவர்களால் முன் கல்பங்களில் செய்யப்பட்டவை.

கிருஷ்ண யஜுர்வேதத்தின் முதல் பிரஸ்னம் யஜமானனுக்கு ஞானம் வளரும் தர்ச பூர்ண மாச யக்ஞ மந்த்ரங்களை அறிவிக்கிறது. இரண்டாவது முதல் நான்காவது பிரஸ்னம் வரை, அக்னிஷ்டோம யக்ஞம் யஜமானன் சரீரம், செயல், மனம் முழுமை பெற்று, புனிதமடைந்து செல்வங்களுடன் தேவ வழியில் இன்பமாக வாழ வழி அறிவிப்பவை.

இந்த 5 ஆவது பிரஸ்னம் 1-4 அனுவாகங்கள் அக்னயாதேய கல்ப பிராஹ்மண மந்த்ரங்கள் கொண்டவை. இவை ஞானத்துடன் நற்செல்வம் பெற்ற யஜமானன் பலவிதமான மனிதர்கள் கொண்ட சமூஹத்தில் எல்லோருடனும் பந்துத்துவத்துடன் நல்வாழ்க்கை வாழும் முறையை அறிவிக்கிறது. இந்த அனுவாகங்கள் மேலெழுந்தவாரியாகக் கதைகளும், கூட மந்த்ரங்களுமாகக் காணப்படுகின்றன. ஆனால், ஊன்றி ஆராய்ந்தால் எல்லா மனிதர்களுக்கும் வாழ்க்கையில் பெரும் துணையாக விளங்கும் புராண தத்துவங்களுக்கு அடிப்படையான மூலம் இதுவே என்று காணலாம்.

வெறும் மொழிபெயர்ப்பு சாரமற்ற கதைகளும் அதை ஒட்டிய விளக்கங்களுமாக தோன்றும். ஆகவே இதன் மையக் கருத்துடன் அதே கதைகளை அணுகினால், அவை தத்துவங்களுக்கு ஒரு சங்கேத மொழி என்று கண்டு இன்புறலாம். மேலும் பல கருத்துகள் நம் அறிவில் ரிஷியின் அருளினால் உதயமாகும்.

அக்னி என்பது இங்கு பிரஹ்மத்தை குறிக்கின்றது. சங்கல்ப மூலமாக அது சிருஷ்டியை செய்தபோதிலும், சிருஷ்டியில் ஓர் அங்கமாக இல்லாமல் விருப்பு வெறுப்பு

அற்ற சாக்ஷியாக மட்டும் உள்ளது. அதன் சங்கல்பப்படி ருதம் அல்லது நியதியில், செயல், வாழ்தல், அழிதல், இன்பதுன்பம், அறிவு (அ) ஞானம் என்பன ஜீவராசிகளைப் பற்றுவதால், இந்த நியதிகளை ஒட்டி தேவர்கள் முதல், ஜடசிருஷ்டி வரை மேலும் கீழுமாக இயங்கிக் கொண்டிருக்கும், இந்த நியதியில் இருந்து விடுதலை ஜீவராசிக்குக் கிடையாது.

சத்வ குணத்தின் மிகுதியால் ஞானம் உள்ள தேவர்கள் பிரம்மத்தின் சக்தி வாய்ந்த இருப்பையும், அதன் விருப்பு வெறுப்பு அற்ற சாக்ஷித்தன்மையும் உணர்கின்றனர். ஆகவே அசுரர்களுடன் யுத்தம் புரியுமுன் தங்கள் தெய்வீகமான உடைமைகளை பிரம்மத்திடம் காப்பாக வைத்துச் சென்றால் அசுரர்களிடம் தோல்வி அடைந் தாலும் தங்கள் உடைமைகளை விருப்பு வெறுப்பு அற்றவரிடமிருந்து திரும்பப் பெற்றுக்கொள்ளலாம் என நினைத்து, அக்னிப்பிரம்மனிடம் அவற்றை ஒப்புவிக் கின்றனர்.

சாக்ஷியாக இருக்கும் பிரம்மனிடம் ரக்ஷணம் என்ற பயனை நோக்கிய அளவிலேயே, தேவர்களின் அந்த சங்கல்பத்தால் அக்னிப் பிரம்மன் என்ற சாக்ஷி நிலை அவ்வர்களைப் பொறுத்தவரை மாறி அவர்களுடன் சிருஷ்டியின் உள்ளே அவர்களுக்காக செயல்புரியும் சக்தியாக மாறுகிறது. ஆனால், காப்பது ஒன்றே பிரம்மனின் சக்தியாக இல்லாததால், அதன் ஐந்து வித சக்திகளும் அதாவது படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தும் தேவர்களுக்கு பிரசன்னமாகின்றன.

உதாரணமாக அன்னத்தை எடுத்துக் கொள்வோம். அன்னம் யாரையும் போய் என்னை சாப்பிடு என்று வேண்டுவதில்லை. நியதியினால் தூண்டப்பட்டு பசி உள்ள ஒருவனோ, ஆசை உள்ள ஒருவனோ அன்னத்தை உண்டால் அது பசியை மட்டும் தீர்க்காது. ஆசையை மட்டும் திருப்திப்படுத்தாது. உண்டவன் மீது அதன் ஐந்து குணங்களும் (அ-து) உடம்பை வளர்த்தல், உடம்பைக் காத்தல், உடம்பை அழித்தல், உடம்பால் வாழுதல், உடம்பின் மூளைக்கு சக்தி அளித்து அறிவு (அ) ஞானத்தை வளர்த்தல் என்ற ஐந்தும் தங்கள் ஆட்சியைச் செலுத்தும்.

இது அன்னத்தை உண்பவனுக்கு உண்டாகும் அனுபவமே ஒழிய மற்றவனுக்கு இல்லை. இப்படிப்பட்ட அன்னத்தை ஒருவன் அறிந்து முறையாக தன்னுள்ளே கொள்வானாயின் அவன் எல்லா நலங்களும் பெற்று வாழ்வான்.

கதைக்கு மீண்டும் வருவோம். அக்னி பிரம்மன் தேவர்கள் வேண்டியபடி அவர்கள் செல்வத்தைக் காத்தது. ஆனால், அதன் அழிக்கும் தன்மையோ தேவர்களின் அக்ஞானத்தைப் போக்க, அவர்களுக்கு தங்கள் செல்வம் மேல் உள்ள பற்றை இல்லாமல் செய்து ஞானத்தை புகட்ட நினைத்தது. சர்வ வல்லமை படைத்த தன்னிடமே அவர்கள் போர் புரிய வந்தபோது அவர்கள் அறியாமையை நினைந்து கண்ணீர் விட்டது. ஆயினும் தன்னிடம் சரணம் அடைந்தவர்களாதலால் அவர்களுக்குத் திரும்ப செல்வத்தைக் கொடுக்கும்போதிலும், தன்னருளால் அவர்கள் உயர்நிலைக்கு படிப்படியே அடையவேண்டும் என்று விரும்பியது. ஆகவே அக்னி பிரம்மனின் ஈஸ்வரத் தன்மை தனக்கு செல்வத்தில் பங்கு வேண்டுமென்று தூண்டியது. இதனால் தேவர்கள் அக்ஞான வாழ்வு நீடித்தாலும் கூடவே அக்னி பிரம்மனின் அருள் சக்தி இருந்து அவர்களை ஞான நிலைக்கு கொண்டு செல்ல வாய்ப்பு உண்டாகும் அல்லவா. தேவர்கள் இதற்கு ஒப்புக் கொண்டு மறுபடி தாங்கள் தங்கள் செல்வங்களை பிரதிஷ்டை செய்து வாழும் வாழ்க்கைக்கு, அக்னி பிரம்மனையே தெய்வமாக முதற்கொண்டு வாழ்கிறோம் எனக் கூறினர். அக்னி பிரம்மனின் அருளும் தன்மை இந்த செயலால் நீங்கள் விருத்தி அடைவீர்கள் என அருளியது.

இதனுடைய தத்துவம் என்னவென்றால், சிருஷ்டி அனைத்துக்கும் சாக்ஷிபூதமான பிரம்மத்தின் சக்தியை ஒரு ஜீவராசி தேவனோ, அசுரனோ, மனிதனோ, சர்ப்பமோ துணையாகப் பயன்படுத்தவேண்டினால், தன் இதயத்தில் சாக்ஷியாக விளங்கும் பிரம்ம சக்தியை தான் வணங்கும் தெய்வமாக மனதில் பிரதிஷ்டை செய்ய வேண்டும். அம்மாதிரி சங்கல்ப ரூபமாக எந்தக் காரணத்துக்காக வணங்க ஆரம்பித்தாலும் பிரம்ம சக்திகள் ஐந்தும் அவன் வாழ்க்கையில் துணை நின்று இயற்கை நியதிக்கு மாறுபடாத வாழ்வை அளித்து ஞானத்தை நோக்கிமேல் செலுத்தும். பல

பிறவிகளின் முடிவில் நியதியிலிருந்து விடுதலை கிடைக்கும். அம்மாதிரி சங்கல்பிக்காதவன் வாழ்வு நியதிக்கேற்ப மேலும் கீழுமாக முடிவில்லாமல் உழன்று கொண்டிருக்கும்.

இந்த சங்கல்ப மூலமாக மறுபடி சாக்ஷிப்பிரம்மனை தெய்வமாகக் கொண்டு செயலை ஆரம்பித்தல் புனராதேயம் என்று கூறப்படுகிறது. ஐந்து சக்திகளின் பலவிதமான சேர்க்கையே பலவித புராண தேவதா ஸ்வரூபங்களாகவும் ஆகிறது. இதுவே பஞ்சாயதன பூஜையின் தத்துவமுமாகும்.

எந்த தேவதையானாலும் அதை தன் தெய்வமாகத் துணை கொள்பவனுக்கே அவை அருளும். இல்லை என்று நினைப்பவனுக்கு அந்த தெய்வமும் இல்லை. உதாரணமாக விஞ்ஞானத்தில் பலவகையில் ஆராய்ச்சி செய்தால், அந்தந்த ஆராய்ச்சிக்குத் தகுந்த பலன் உண்டு. விஞ்ஞானமே இல்லை என்று அறிவில்லாதவன் சும்மா இருந்தால் அவனுக்கு விஞ்ஞானத்தின் அனுபவம் இல்லை. ஆகவே இல்லை என்னும் நாஸ்தீகனுக்கு கடவுள் அனுபவமே இல்லை.

அதர்மம் மிகும் காலத்தில் சமூஹத்தில் சத்வகுணம் உடையோர் அனைவரும் பிரஹ்மனைத் தெய்வமாகப் போற்றி காத்தலை வேண்டும்போது, சகுணப் பிரம்மம் சிருஷ்டியினுள் அவர்கள் பொருட்டு அனைவருக்கும் பொதுவாகத் தோன்றும் அவதாரமாகிறது. இதுவே வேதம் மறைமுகமாகப் போதிக்கும் அவதாரத் தத்துவம். இந்த அவதாரங்கள் காத்தல் தொழிலை உடைய விஷ்ணு அம்சமாக உருவெடுத்தபோதிலும் அது பிரம்மத்தின் ஐந்து தொழில்களையும் நல்லோர்களைக் காத்தலின் பொருட்டு அருள்கிறது.

இந்த புனராதேயத்தால் தேவதாஸ்வரூபத்துடன் பந்துத்வம் உண்டாகிறது. அதனுடன் கூட அந்த தேவதாஸ்வரூபத்தை உபாசிக்கும் மற்றவர்களிடம் பந்துத்வம் உண்டாகிறது. மற்ற தேவதாஸ்வரூபங்களும் அக்னி பிரம்மமேயாதலால் உலகில் வாழும் அனைத்து உபாசகர்களிடமும் பந்துத்வம் விரிந்து பெருகுகிறது. உலகில் மதங்கள் பந்துத்வத்தை உண்டுபண்ணும் ரகசியம் இதுவே. எந்த பக்தனைக் கண்டாலும் ஒரு உபாசகனுக்கு

பந்துத்வம் உண்டாகிறது. அதிலும் உதாரணமாக ஒரு சைவனுக்கு சிவபெருமானை உபாசனை செய்யும் இன்னொருவனைக் காணும்போது நெருங்கிய பந்துத்வம் உணரப்படுகிறது. என்பது இன்றும் நாம் காணும் உண்மை. இதையே வேதம் இந்த பிராஹ்மணத்தில் அறிவிக்கிறது.

இந்த புனராதேய தத்துவத்தால் சத்வகுணம் மிகுந்த தேவர்களும், ரஜோகுணம் மிகுந்த மனிதர்களும், தமோகுணம் மிகுந்த சர்ப்பங்களும் பயனடைந்தனர் என்று வேதம் அறிவிக்கிறது.



ஓம்

ஸ்ரீ கணேசாய நம:

ஓம் ஹ்ரீம் நம: சிவாய

# "ஸ்ரீ ருத்ர ப்ரஸ்னம்"

வால்மீகி, காளிதாசன் போன்ற மஹாகவிகளின் இதிகாச, காவ்யங்களில் உள்ள ஸ்லோகங்களுக்குப் பல விதமான பொருட்செறிவு உள்ள அர்த்தங்கள் உள்ளன. அறிஞர்கள் மூலம் அவற்றை அறிந்து நாம் அனுபவிக்கிறோம். ரிஷிகளால் உலகுக்கு கண்டுரைக்கப்பட்ட தெய்வீகமான வேத மந்த்ரங்கள் இவற்றினுக்கும் மேலாகவே. இவ்வுலகிலேயே பலவித நிலைகளிலும், மற்றும் அனைத்து தேவ அசுர உலகங்களிலும், அந்தந்த நிலைகளில் உண்மையை அறிவிக்கின்றன.

இந்த நூலில் காணப்படும் ஸ்ரீருத்ரத்தின் தமிழாக்கம் பின்வரும் கருத்துகளை ஒட்டி அமைந்துள்ளது.

1) வேதம் முழுவதும் பிரம்மத்தின் நிலைப்பாடே பலவிதமாக அறிவிக்கப்படுகிறது. கிரியைகளை அடக்கிய யக்ஞமாயினும், கதைகளை உள்ளடக்கிய பிராம்மணமாயினும், தத்துவங்களை உள்ளடக்கிய உபநிஷதமாயினும் அனைத்தும் முடிவில் பிரம்மத்தையே குறிக்கோளாகக் கொண்டுள்ளன.

2. வேத மந்த்ரங்கள் அனைத்தும் பொருட்செறிவையும் கோர்வான கருத்தையும் கொண்டுள்ளன. மேலெழுந்தவாரியாக சில இடங்களில் பொருட்செறிவு அற்றது போலவோ, அல்லது கருத்தை ஒட்டி அமையாதது போன்ற மந்த்ரங்கள் காணப்படும் இடத்து ரிஷிகளிடம் சரணாகதி அடைந்து வேண்டினால் அந்த மந்த்ரங்களின் அர்த்தங்கள் நமக்குள் விளங்கும். அண்ட சராசரங்களின் உண்மைகளை நமக்கு ஆராய்ந்து வழங்கியுள்ள ரிஷிகளின் எந்த சொல்லும் வீணாக அமைக்கப்பட்டது அல்ல என்பது நம் நம்பிக்கையாகும்.

3. வேதங்கள் உள்ளுணர்வு நிலையிலும், ஆராய்ந்து காணும் அறிவு நிலையிலும் உண்மையை அறிவிக்கின்றன. இதற்கு மாறாக புராண இதிகாசங்கள் உண்மையை அறிவு, மனம், செயல், ஸ்தூல உலக நிலைகளில் அறிவிக்கின்றன ஆகவே உண்மையை அறிவிப்பதே வேத மந்த்ரங்களின் தலையாய நோக்கம். பல நிலைப்பாடுகளில் நிலைகள், செயல்பாடுகள், ரூபங்கள் பற்றிய விளக்கங்கள் உலக வழக்கத்தை ஒட்டி அமைத்து உள்ளுணர்வில் கண்ட உண்மைகளை உலக விவகாரங்களில் ஊன்றியிருக்கும் மனிதருக்கு விளங்கவேண்டுமென்பதற்கே அமைக்கப் பட்டுள்ளன. இதற்கு மாறாக புராண இதிகாசங்களில் நாம ரூபம் முக்கியமான பங்கு வகிக்கின்றன. விளக்கங்கள் மனிதர்களின் அன்றாட அறிவு, உணர்ச்சிகள், செயல்கள், பொருள்களை ஒட்டி அமைகின்றன. ஆயினும் இவையும் வேத உண்மைகளையே சாதாரண மனிதர்களும் அறியக் கூடிய வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

4. கீழ்வரும் கருத்து உரையானது அறிவு சார்ந்த விளக்கத்தை ஒட்டி அமைகிறது. ஆகவே புரர்ண, இதிகாசங்களில் காணப்படும் தெய்வரூபங்கள், செயல்கள் மூலம் விளக்கம் அளிக்கப்படவில்லை.

5. முக்யமான சொற்களின் பொருள், ஆராய்ந்த பின்னர் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இந்த பொருள்களின் மூலம் மந்த்ரங்களின் கருத்துக் கோர்வைகள் ஆராயப்பட்டு கொடுக்கப்பட்டுள்ளது. எவ்வாறு இவை கண்டறியப் பட்டன என்ற விளக்கங்கள் இந்த கருத்து உரையில் விரிவு அஞ்சி கொடுக்கப்படவில்லை.

6. ருத்ரத்தின் முதல் மந்த்ரம் ஆறு முக்யமான சொற்களை கூறுகிறது. இவற்றின் பொருள் பின்வருமாறு கொள்ளப்பட்டுள்ளது.

1. **ருத்ர** – ருத்ர பிரம்மத்தின் மங்களஸ்வரூபம்
2. **மன்யு** – ருத்ர பிரம்மத்தின் காமக்ரோத ஸ்வரூபம்
3. **இஷு** – ஜீவாத்மாவை சரீரம், செயல், மனம் இவற்றால் ஆட்டுவிக்கும் விருத்திகள்

**4.** தனு - *ஜீவாத்மாக்கள் அனுபவம் பெறும் பலவிதமான உலகங்கள் (நோக்குக - தனுர் தராயை வித்மஹே சர்வசித்யை சதீமஹி தன்னோ தரா பிரசோதயாத்)*

**5.** பாஹு - *பிரம்மத்தின் செயலை ஊக்குவிக்கும் சக்திகள் செயல்களாவன படைத்தல் காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.*

**6.** நம: - *அனைத்து சரீரங்களும், செயல்களும், மனங்களும், ருத்ரனாலேயே இயக்கப்படுகின்றன என்ற அறிவோடு அவனிடம் பூரண சரணாகதி அடைந்து வாழ்க்கையை நடத்துதல்.*

*ருத்ரப் பிரஸ்னத்தில் உள்ள மந்த்ரங்களில் இந்த "நம:" என்ற சொல்லானது மற்ற சொற்களினால் விவரிக்கப்படும் ருத்ரனை யஜமானனோடு இணைத்து ருத்ரனுக்கும் யஜமானனுக்கும் பந்துத்வத்தை உண்டாக்குகிறது. முதல் பாகம் ஐந்தாவது பிரஸ்னத்தில் கூறப்பட்ட புனராதேய தத்துவத்தின்படி அமைந்துள்ளது.*

*ருத்ரனின் தலையாய ஐந்து செயல்களின் (அனுவாகம் 5, 6, 7, 8, 9) விரிவான மந்த்ரங்கள் ஒவ்வொன்றிலும் யஜமானன் தான் சரணாகதி அடைந்துள்ளேன் என்று ருத்ரனிடம் இந்த "நம:" என்ற சொல்லால் தெரிவிக்கிறான். அனுவாகம் 2ல் - மங்களஸ்வரூப ருத்ரனிடமும், அனுவாகம் 3ல் மன்யு ஸ்வரூப ருத்ரனிடமும், அனுவாகம் 4ல் பிரம்மாண்டத்தின் சிருஷ்டிகர்த்தாரூபங்களில் உள்ள அனைத்து ருத்ரர்களிடமும் தனித்தனியாக "நம:" என்று சரணாகதி செய்கிறான்.*

*அனுவாகம் 1ல் சுருக்கமாகவும், அனுவாகம் 10ல் விரிவாகவும் தனது பிரார்த்தனைகளாக மனுவைப் போல் இகலோக, பரலோக வாழ்வு சுகமாக அமையவேண்டு மென்றும், ருத்ரன் தன் ஆயுதங்களை வைத்துவிட்டு ரூபம் தரித்து ஆசார்யனாக ஞானம் புகட்ட வேண்டும் என்றும் சமர்ப்பிக்கிறான்.*

*ருத்ரத்தைப் பாராயணம் செய்யும் யஜமானனுக்கு ருத்ர பிரம்மம் ருதத்தின் வழியாக இந்த பிரார்த்தனை களை நிறைவேற உடன் செயல்படும் சக்தியாக மாறி அவன் வாழ்க்கையில் கூடநின்று செயல்படுவான்.*

ருத்ரன் எவ்வாறு செயல்படுவான் என்பதை இவ்வாறு விளக்கலாம்.

ஒரு பயங்கரமான கானகத்தின் உள்ளே சென்ற மனிதன் அங்கு திக்குதெரியாது மனம் போன வழியெல்லாம் நடக்கிறான். சில நேரங்களில் மகிழ்ச்சி தரும் நல்ல பாதைகள் வழியாகவும், சில நேரம் மிகவும் துன்பம் தரும் முள் நிறைந்த இருள் அடைந்த பாதைகள் வழியாகவும் அலைந்து திரிந்துகொண்டேயிருக்கிறான் முடிவில்லாமல் இவ்வாறு அலைந்து திரிபவன் தூரே ஓர் ஒளியைக் காண்கிறான்.

அந்த ஒளியின் மீது பூரண நம்பிக்கையுடன் நீ காட்டும் வழியே நான் செல்வேன் எனத் தீர்மானித்து நடக்கிறான். இப்பொழுதும் பாதை சில சமயம் நல்லதாக உள்ளது, சில சமயம் கடினமாகவும், துன்பமாகவும் உள்ளது. ஆனால், எப்படி இருப்பினும் ஒளியை நோக்கியே நடக்கும் மனிதன் முடிவில் கானகத்திலிருந்து விடுபட்டு வீட்டை அடைகிறான்.

இந்த சம்சாரம்தான் கானகம். மனிதன் யஜமானன். ருத்ரன் ஒளி. வீடு முக்தி. ருத்ர பாராயணம் செய்பவன் எவ்வித வாழ்க்கை நிலையிலும் ருத்ரனின் அருள் கூடவே உள்ளது என்ற அசையா நம்பிக்கை வைத்தால் முடிவில் ஞானம் அடைவான்.

பல பிறவிகளில் செய்த தீவினைகள் ருத்ரபாராயணம் செய்த அளவிலேயே அழிந்து விடாது. ருதத்தின் நியாயப்படி அதன் விளைவுகளை அனுபவித்தே விடுதலை பெற முடியும். ஆனால், ருத்ரபாராயணம் செய்த அளவி லேயே ஒன்றன் பின் ஒன்றாக புதிய தீய சம்ஸ்காரங்கள் தோன்றாமல், செய்ததை மனஉறுதியுடன் அனுபவித்து முக்தியை நோக்கியே ருத்ரன் யஜமானனை செலுத்துவான். அகமர்ஷண சூக்தத்தில் இது பின்வருமாறு விளக்கப் பட்டுள்ளது.

"செய்யத் தகாததை செய்தவன், திருடன், கர்ப்பத்தை அழித்தவன், குருபத்னியைப் புணர்ந்தவன் இவர்கள் அனைவரையும் அகமர்ஷணனாகிய வருணன் பாவத்தி லிருந்து விடுவிக்கிறார். (மனஉறுதியும் ஞானமும் படைத்த)

தீரர்கள் கர்மபூமியில் என்னை (செய்த பாபங்களுக்காக விளைவை அனுபவித்து) அழச் செய்வாயாக என்று வேண்டுகின்றனர்.

## ருத்ரத்தின் அமைப்பு

ருத்ர பிரஸ்னத்தின் 11 அனுவாகங்கள் பின்வருமாறு அமைக்கப்பட்டுள்ளன:

1. முதல் அனுவாகம் - ருத்ர பிரஸ்னத்தின் சுருக்கம்.
2. இரண்டாவது அனுவாகம் - ருத்ர பிரம்மத்தின் மங்கள ஸ்வரூப செயல்பாடுகள்.
3. மூன்றாவது அனுவாகம் - ருத்ர பிரம்மத்தின் மன்யுஸ்வரூப காமக்ரோத செயல்பாடுகள்.
4. நான்காவது அனுவாகம் - உலகங்களின் சிருஷ்டி கர்த்தாக்களாகிய ருத்ரர்கள்.
5. ஐந்தாவது அனுவாகம் - மங்களஸ்வரூப ருத்ரனின் சிருஷ்டி செயல்பாடுகள்.
6. ஆறாவது அனுவாகம் - மங்களஸ்வரூப ருத்ரனின் காத்தல் செயல்பாடுகள்.
7. ஏழாவது அனுவாகம் - மங்களஸ்வரூப ருத்ரனின் அழித்தல் செயல்பாடுகள்.
8. எட்டாவது அனுவாகம் - மங்களஸ்வரூப ருத்ரனின் மறைத்தல் செயல்பாடுகள்.
9. ஒன்பதாவது அனுவாகம் - மங்களஸ்வரூப ருத்ரனின் அருளல் செயல்பாடுகள்.
10. பத்தாவது அனுவாகம் - ருத்ரன், மன்யு ஸ்வரூபங்களிடம் விரிவான பிரார்த்தனைகள்.
11. பதினொன்றாவது அனுவாகம் - தன்னிடமிருந்து விலகிச் சென்று அருள் புரிய வேண்டும் என மன்யுஸ்வரூப ருத்ரனிடம் யஜமானன் பிரார்த்தனை.

### அனுவாகம் 1

இந்த அனுவாகம் ருத்ர பிரஸ்னத்தின் கருத்துகளை வெகு சுருக்கமாக அளிக்கிறது. மற்ற 10 அனுவாகங்களும் இந்த மந்த்ரங்களின் விரிவான உரைகளாக அமைந்துள்ளன.

**1.1 நமஸ்தே ருத்ர மன்யவ உதோத இஷவே நம:**
**நமஸ்தே அஸ்து தன்வனே பாஹுப்யாமுததே நம:**

*மங்கள ஸ்வரூபியான ருத்ரனே. காமக்ரோத ஸ்வரூபியான மன்யுவே உன்னிடம் சரண் அடைகிறேன். மேலும் ஜீவாத்மாவை ஆட்டுவிக்கும் (அம்புகள் போன்ற உன்) விருத்திகளிடம் சரணம். (அனுபவம் தரும்) உன் பல்வேறு உலகங்களிடம் சரணம். (செயல்களை ஊக்குவிக்கும்) உன் கரங்களிடம் சரணம்.*

**1.2 யாத இஷு: சிவதமா சிவம் பபூவதே தனு:**
**சிவா சரவ்யாயா தவதயா நோ மிருடய**

*எந்த விருத்திகள் மிக்க மங்களமானவையோ, உன் உலகம் மங்களமானதாக உள்ளதோ, விருத்திகளை வழங்கும் எந்த மங்களமான அம்பறாக்கூடு உன்னுடையதோ, அதனால் எங்களை மகிழ்விப்பாயாக.*

**1.3 யாதே ருத்ர சிவா தனூரகோராஅபாபகாசினீ**
**தயா நஸ்தனுவா சந்தமயா கிரிசந்தாபிசாக சீஹி**

*எது உன்னுடைய புனிதமானதும் மங்களமானதும் மாசில்லா ஒளி வீசும் ரூபமோ, புனிதமே உருவாய் வேதஸ்துதிகளில் அமைந்துள்ளதோ, அந்த மிக்க அருள்வீசும் உடலால் எங்களை பிரகாசப்படுத்துவாயாக.*

**1.4. யாமிஷும் கிரிசந்த ஹஸ்தே பிபர்ஷ்யஸ்தவே**
**சிவாம் கிரித்ரதாம் குரு மாஹிம்சீ: புருஷம் ஜகத்**

*புனிதமே உருவாய் வேதஸ்துதிகளில் அமைந்துள்ள நீ எந்த விருத்தியை எங்களிடம் வீசுகிறாயோ, வேதத்தில் காக்கும் சக்தியாக உள்ளவனே நீ அதை மங்களமானதாகச் செய்வாயாக. ஜீவாத்மாவையும், ஜீவாத்மா அனுபவம் பெறும் உலகத்தையும் துன்புறுத்தாமலிருப்பாயாக.*

**1.5. சிவேன வசஸாத்வா கிரிசாச்சாவதாமசி**
**யதா ந: சர்வ மிஜ்ஜகதயக்ஷ்மகும் சுமனா அசத்**

*எவ்வாறு எங்களுடைய அனைத்து உலகமும் நோயில்லாமலும் நல்ல மனத்தை கொண்டதாகவும் அமையவேண்டுமோ, அதற்காக, வேதத்தின் சொற்களில் உறையும் உன்னை வேதத்தின் மங்களமான சொற்களால் துதிக்கிறோம்.*

1.6. அத்ய வோசததிவக்தா பிரதமோ தைவ்யோ பிஷக்
அஹீம்ஸ்ச்ச சர்வாஞ்ஜம்பயன் சர்வாஸ்ச்ச யாதுதான்ய:

*எல்லா தீய விருத்திகளையும், பொய்மையில் ஆழ்த்தும் எல்லா தீய சக்திகளையும் அடக்குபவர், (பவநோயை அழிக்கும்) தெய்வீக வைத்யர்களில் முதன்மை யானவர், நம் பக்கம் உள்ளவர், நமக்காகப் பரிந்து பேசுபவர்.*

1.7. அஸௌ யஸ்தாம்ரோ அருண உதபப்ரு: சுமங்கல:
யேசாமாம்ருத்ரா அபிதோ திக்ஷுஸ்ரிதா: சஹஸ்ரசோ
வைஷாம் ஹேட ஈமஹே

*இவர் ஈஸ்வரன், மங்களமானவர் (அனைத்து சிருஷ்டியையும் ஆளும் சகுணபிரம்மன்) இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தியுடன் கூடியவர், மேலும் இந்த ஆயிரக்கணக்கான கோபத்துடன் கூடிய எல்லா திக்குகளிலும் சூழ்ந்துள்ள ருத்ரகணங்களிடமிருந்து (மன்யுவின் அம்சங்கள்) விடுபட்டு செல்கிறோம்.*

1.8 அஸௌ யோ வசர்ப்பதி நீலக்ரிவோ விலோஹித:
உதைனம் கோபா அத்ருசன்னதிரு சன்னுத ஹார்ய:
உதைனம் விஸ்வா பூதானி ச திருஷ்டோ மிருடயாதி ந:

*கறுத்த கழுத்தும் (மன்யு அம்சம்) சிவந்த வர்ணமும் (ஈஸ்வர அம்சம்) கொண்ட இவர்தான் (ஜீவாத்மாவின் சரீரத்திலிருந்து) வெளியேறுபவர்.*

*மேலும் இவரைத்தான் இந்திரியங்களின் அதி தேவதைகள் இவர் வெளியேறும்போது காண்கின்றனர். வாழ்வின் ஆதாரமான (ஆபோ)தேவிகள் இவரை காண்கின்றனர். மேலும் இவரை எல்லா (பஞ்ச) பூதங்கள் (காண்கின்றன). இவர் (நம்மால்) காணப்பட்டால் நம்மை மகிழ்விக்கிறார்.*

1.9. நமோஸ்து நீலக்ரீவாய சஹஸ்ராக்ஷாய மீடுஷே
அதோஸ்ய சத்வானோஹம் தேப்யோகரன்னம:

*நீலக்ரீவனும், ஆயிரம் கண்கள் கொண்ட அழகனு மான ருத்ரனுக்கு எங்கள் சரணாகதி இருக்கட்டும். பின்பு எவர்கள் இவனுடைய பரிவார தேவதைகளோ அவர் களுக்கு எங்கள் சரணாகதியை சமர்ப்பிக்கிறோம்.*

**1.10. பிரமுஞ்ச தன்வனஸ்த்வமுபயோ ரார்த்னியோர்ஜ்யாம்**
**யாஸ்ச தேஹஸ்த இஷவ: பரா தா பகவோ வப**

*இந்த உலகத்திலிருந்து எங்களை விடுவிப்பாயாக. எந்த விருத்திகளை நீ எங்களிடம் தோற்றுவிக்க ஆயத்தமாக உள்ளாயோ, அவற்றை ஒரு புறத்தில் வைப்பாயாக.*

**1.11. அவதத்ய தனுஸ்த்வகம் சஹஸ்ராக்ஷ சதேஷுதே**
**நிசீர்ய சல்யானாம் முகா சிவோ ந: சுமனா பவ**

*எங்களை இந்த உலகத்திலிருந்து விடுவித்த பின்னர் ஆயிரம் கண்களும், நூற்றுக்கணக்கான அம்பறாக்களும் உடைய நீ, விருத்திகளின் பலனை மழுங்கச் செய்வாயாக. மங்களமான நீ எங்களிடம் அன்பு உடையவனாக இருப்பாயாக.*

**1.12. விஜ்யம் தனு: கபர்தினோ விசல்யோ பாணவாகம் உத**
**அனேசன்னஸ்யேஷவ ஆபுரஸ்ய நிஷங்கதி:**

*தீய விருத்திகள் இல்லாத உலகம் (அ-து) சுவர்க்கம், மழுங்கிய நுனியுடைய அம்புகள் நிறைந்த அம்பறாக்கூடு (ஜீவனை துன்புறுத்தாத விருத்திகளை இவை குறிக்கின்றன), அம்பறாக்கூடு தோள் மேல் கட்டப்படவில்லை. இவற்றால் ஜீவனுக்கு சுவர்க்க உலகம் அளிக்கப்படுகிறது.*

**1.13. யாதே ஹேதிர் மீடுஷ்டம ஹஸ்தே பபூவதே தனு:**
**தயாஸ்மான் விஸ்வதஸ்த்வமயக்ஷ்மயா பரிப்புஜ**

*மங்களமானவனே, எந்த துன்பமில்லாத (சுவர்க்கம் என்ற) உலகம் உன் ஆயுதமாக உள்ளதோ அதனால் சுற்றிலும் எங்களை சூழ்வாயாக.*

**1.14. நமஸ்தே அஸ்த்வாயுதாயானததாயத்ருஷ்ணவே**
**உபாப்யா முததே நமோ பாஹுப்யாம் தவதன்வனே**

*சக்தி பொருந்தியது, மங்களமானதுமான சுவர்க்கம் போன்ற உன்னுடைய உலகங்கள், அம்மாதிரியான உலக அனுபவங்களை எங்களுக்கு வழங்கும் திறமை படைத்த நீ இருவரையும் நாங்கள் சரணமடைகிறோம்.*

**1.15. பரிதே தன்வனோ ஹேதிரஸ்மான்வ்ருணக்து விஸ்வத:**
**அதோய இஷுதிஸ்தவாரே அஸ்மன்னிதேஹிதம்**

*உன்னுடைய மங்களமான உலகங்களும் எங்களை விட்டு விலகிச் செல்லட்டும். எங்களுக்கு இன்பத்தைக்*

கொடுக்கக்கூடிய விருத்திகளையும் சேர்த்து எல்லா விருத்திகளையும் எங்களிடமிருந்து தூரமாக வைப்பாயாக. அவையெல்லாம் விலகின பின்னர் நீ மட்டும் எங்களுடன் இருப்பாயாக.

*(இந்த மந்த்ரமே 10 ஆவது அனுவாகத்தில் விரிவாகக் கடைசியில் சொல்லப்படுகிறது (அ-து) ஆயுதங்களை சம்சாரவிருஷத்தில் வைத்துவிட்டு, தோலைத் தரித்தவனாக (அ-து) ரூபம் உடையவனாக, தண்டம் தரித்தவனாக (பினாகம்) ஆசார்யனாக வருவாயாக).*

**பின்குறிப்பு:** இந்த அனுவாகத்தில் ரிஷி முதலாக இவ்வுலகில் இன்பத்தையும், நல்வாழ்வையும் வேண்டு கிறார். பின்னர் இவ்வுலக அனுபவத்தை நீக்கி சுவர்க்க லோக அனுபவத்தை வேண்டுகிறார். பின்னர் சுவர்க்க லோக அனுபவத்தையும் நீக்க வேண்டுகிறார். ஆனால், மங்களஸ்வரூபியான ருத்ரனை நீங்க வேண்டுமென்று வேண்டாததால் சூசகமாக ருத்ரனும், தானும் மட்டும் இருந்து அந்த அனுபவத்தை பெறவேண்டுகிறார். பிரம்மத்துடன் ஐக்யம் ஆவது என்பதே இந்த அனுபவம்.

ருத்ர பிரம்மத்தின் ஆணையால் எங்கு இருந்தாலும் அங்கு நல்வாழ்க்கையும், புண்யலோகங்களுக்கு முன்னேற்றமும், பிரம்ம ஞானமும் அடைய வேண்டும் இந்த பிரார்த்தனை மற்ற வேதப் பகுதிகளிலும் சொல்லும் முறையை ஒத்து உள்ளது.

## அனுவாகம் 2

இந்த அனுவாகத்தில் மங்களஸ்வரூபியான ருத்ரனின் தன்மைகளுக்கும் செயல்பாடுகளுக்கும் சரணாகதி சமர்ப்பிக்கப்படுகிறது.

**2.1.1. நமோ ஹிரண்யபாஹவே சேநான்யே திசாம் ச பதயே நமோ நமோ.**

விருத்திகளை ஜீவராசிகளுக்கு அளிக்கும் ஒளி பொருந்திய சக்திகளே சரணம். அந்த சக்திகளின் தலைவனே சரணம். ஜீவராசிகள் செல்லும் பலவழிகளின் (திசைகளின்) பதியே சரணம்.

**2.1.2. விருக்ஷேப்யோ ஹரிகேசப்ய: பசூனாம் பதயே நமோ நம:**

சம்சார விருக்ஷங்கள் ஆனவனுக்கு சரணம்.

*கிரணங்களை கேசமாகக் கொண்டு வாழ்வைத் தாங்கும் சூர்யன், அக்னிகளுக்கு சரணம். சிருஷ்டியின் சகல ஜீவராசிகளை காப்பவனே சரணம்.*

**2.1.3. சஸ்பிஞ்சராய த்விஷீமதே பதீனாம் பதயே நமோ நமோ.**

*சந்திரன் (அ) தூரமமார்க்கமாக உள்ளவனுக்கு சரணம். சூர்யன் (அ) ஒளிமார்க்கமாக உள்ளவனுக்கு சரணம். இந்த மார்க்கங்களை காப்பவனே சரணம்.*

**2.1.4. பப்லுசாய வில்யாதினேன்னானாம் பதயே நமோ நமோ**

*மாம்ஸ அன்னமாக உள்ளவனுக்கு சரணம். பூமியிலிருந்து பிளந்து மேல் வளரும் பலவிதமான ஓஷதிகளாக (அன்னம்) இருப்பவனுக்கு சரணம், அன்னத்தை காப்பவனே சரணம்.*

**2.1.5. ஹரிகேசாயோபவீதினே புஷ்டானாம் பதயே நமோ நமோ**

*தலைமுழுதும் கேசம் உடைய ஞானிக்கு (அ-து) (வைதீக மார்க்கத்தை பின்பற்றாத ஞானிகள்) சரணம். வைதீக மார்க்கத்தை பின்பற்றி உபவீதம் தரித்து குடுமிவைத்த ஞானிக்கு சரணம். எல்லா ஞானிகளையும் காப்பவனே சரணம்.*

**2.1.6 பவஸ்ய ஹேறத்யை ஜகதாம் பதயே நமோ நம:**

*சிருஷ்டிக்கப்படும் உலகங்கள் என்ற ஆயுதத்தை உடையவனுக்கு சரணம். சகல சிருஷ்டியையும் காப்பவனே சரணம்.*

**2.1.7. ருத்ராயாததாவினே க்ஷேத்ரானாம் பதயே நமோ நம:**

*சம்சார துக்கங்களிலிருந்து காக்கும் ருத்ரனே சரணம். சிருஷ்டியில் உள்ள ஜீவராசிகள் அனைத்தையும் காப்பவனே சரணம்.*

**2.1.8. சூதாயா ஹன்த்யாய வனாநாம் பதயே நமோ நம:**

*அழிவில்லாத ஆனந்தங்களை சிருஷ்டிப்பவனும் காப்பவனும் ஆனவனே சரணம்.*

**2.2.1 ரோஹிதாய ஸ்தபதயே விருக்ஷாணாம் பதயோ நமோ நம:**

*சம்சார விருக்ஷங்களாகிய லோகங்களை வளர்ப்பவனும், ஸ்தபதியும், காப்பவனும், ஆனவனே சரணம்.*

**2.2.2. மந்த்ரிணே வாணி ஜாய கக்ஷாணாம் பதயே நமோ நமோ.**

*எல்லா மந்த்ரங்கள் ஆனவனும், வேத மந்த்ரங்களில் பிறப்பவனும் ஆனவனுக்கு சரணம் இவ்விதமான குழுக்களைக் காப்பவனே சரணம்.*

**2.2.3. புவந்தயே வாரிவஸ்கிருதா யௌஷதீனாம் பதயே நமோ நமோ.**

*ஆயுளை வளர்ப்பவனுக்கு, (சூர்யன்) நீரில் வசிக்கச் செய்யப்பட்டவனுக்கு (ஜாடராக்னி), ஓஷதிகளைக் காக்கும் சோமனுக்கு சரணம்.*

**2.2.4. உச்சைர் கோஷாயாக்ரந்தயதே பத்தீனாம் பதயே நமோ நம:**

*காக்கக் கோரி உரக்கக் கத்துபவனைக் காப்பவனே சரணம். துன்பமுற்று உதவி கோருபவனைக் காப்பவனே சரணம். சாஸ்திர ஞானமில்லாது சாதாரண அறிவு படைத்த பக்தனைக் காப்பவனே சரணம்.*

**2.2.5 கிருத்ஸ்னவீதாய தாவதே சத்வனாம் பதயே நம:**

*எளிதில் நெருங்கக்கூடியவனுக்கு (பக்தர்களால்), புனிதப்படுத்துபவனுக்கு, அண்டினோரைக் காப்பவனுக்கு சரணம்.*

## அனுவாகம் 3

*இந்த அனுவாகம் ருத்ர பிரம்மனை காமக்ரோத ஸ்வரூபியான மன்யுவாகவும், மன்யுவினுடைய தீய அம்சங்களையும் கூறுகிறது. நல்லதுக்கும், தீமைக்கும் ருத்ர பிரம்மனே ஆதாரம். மங்களஸ்வரூபியான ருத்ரன் ஜீவராசிகளை உண்மையான அறிவை நோக்கி செலுத்துகிறார். காமக்ரோதஸ்வரூபியான மன்யு ஜீவராசிகளை இன்னும் மயக்கும், உண்மையை மறைக்கும் அறிவின்மையை நோக்கி செலுத்துகிறார். இதனை நன்கு கண்டுணர்ந்த ரிஷிகள் மங்களஸ்வரூபியான ருத்ரனை ஆராதிக்கின்றனர். ஆனால், அதே சமயம் காமக்ரோத ஸ்வரூபியான மன்யுவின் சக்தியை உணர்ந்து அவருக்கு மரியாதை கூடிய ஆராதனையைச் செய்து, அவரிடம் "யஜமான் அறிவுப்பாதையில் சென்று கொண்டிருக்கிறான். இவனை வசப்படுத்துதல் எளிதாக இருக்காது. ஆகவே அசுர இயல்புடைய ஜீவராசிகளைப் பற்றுங்கள். அவர்கள் எளிதாக தங்கள் வசம் தங்குவர்" என சரணாகதி அடைந்து*

வேண்டிக் கொள்கின்றனர். உலக வழியிலும் நலம் பெற நல்லவனை நாடுவதும், அவனுடன் கூடவே உள்ள தீயவனை ஹிதமாக மரியாதையுடன் பேசி அவன் பிடியில் சிக்காமலிருப்பதும் தெரிந்த ஒன்றே. 11ஆவது அனுவாகத்தில் ருத்ர பிரம்மனின் மன்யு அம்சத்திற்கு விரிவான பிரார்த்தனை செய்யப்படுகிறது.

**3.1.1. நம: சஹமானாய நிவ்யாதின ஆவ்யாதினீனாம் பதயே நமோ நம:**

வெற்றி உடையவனும், கர்வம்மிக்கவனும், துன்புறுத்துபவனும், மனத்தை பிளப்பவனும், திருடர்களாகிய இந்திரியங்களைக் காப்பவனுக்கும் சரணம்.

**3.1.2. ககுபாய நிஷங்கினேஸ்தேனானாம் பதயே நமோ நம:**

ஜீவனின் இந்திரியங்களுக்கும்; மனதுக்கும், மிகச் சிறந்ததான பொருள்கள், செயல்கள், உணர்வுகள், அறிவு, ஆனந்தம் என்று தோற்றம் அளிப்பவனும், ஆனால் உண்மையில் மன அமைதியைத் திருடுபவனும், வெட்டும் கத்தி போன்ற விருத்திகளை அருளி அவற்றால் மனத்தையும் இந்திரியங்களையும் துன்புறுத்துபவன்; தீமை தரும் பொருள்கள், செயல்கள், உணர்வுகள், அறிவின்மை, துக்கம் இவற்றை எதிர்மறையான நல்லவை போன்று காட்டும் சக்திகளை காப்பவனும் ஆன உனக்கு சரணம்.

**3.1.3. நிஷங்கிண இஷுதிமதே தஸ்கராணாம் பதயே நமோ நமோ.**

ஜீவனின் இந்திரியங்கள் மனதை உடனே வெளிப் படையாகவே மற்றவர்களின் நிலம், வீடு, பணம், பெண்டிர் போன்ற செல்வங்களை கவர்வதற்கு தூண்டுபவனும், இம்மாதிரியான பல விருத்திகளை நம்முள் தோற்றுவிக்க சக்தி படைத்தவனும், இம்மாதிரியான விருத்திகளை காப்பவனுக்கும், பிறர் பொருளில் ஆசையைத் தூண்டும் சக்திகளை காப்பவனுக்கும் சரணம்.

**3.1.4. வஞ்சதே பரிவஞ்சதே ஸ்தாயூனாம் பதயே நமோ நம:**

ஏமாற்றுவதற்கு நம்மைத் தூண்டுபவனும், பித்தலாட்டம் செய்யத் தூண்டுபவனும், ஏமாற்று, பித்தலாட்டம் ஆகிய விருத்திகளையும் அவற்றைத் தோற்றுவிக்கும் சக்திகளையும் காப்பவனுக்கு சரணம்.

**3.1.5. நிசேரவே பரிசராயாரண்யானாம் பதயே நமோ நம:**

*இந்திரியங்களையும், மனதையும் தெரியாமல் புகுந்து மயக்குபவனும், இந்திரியங்கள், மனது இவற்றுக்கு உதவுபவன் போல் காண்பவனும், இம்மாதிரியான விருத்திகள், அவற்றைத் தோற்றுவிக்கும் சக்திகள் ஆகியவற்றைக் காப்பவனும் ஆன உனக்கு சரணம்.*

**3.1.6. ஸ்ருகாவிப்யோ ஜிகாகும் ஸத்ப்யோ முஷ்ணதாம் பதயே நமோ நமோ.**

*கடுமையான நெஞ்சைப் பிளக்கும் சொற்களை நம்முள் தோற்றுவிப்பவன், வெறுப்பு, பழி வாங்குதல் போன்ற விருத்திகளால் நாசம் விளைவிக்கும் தன்மைகளை நம்முள் உண்டுபண்ணுபவன், வெறுப்பு, பழிவாங்குதல் போன்ற விருத்திகளை தூண்டி மனதை குழம்பச் செய்யும் சக்திகளைக் காப்பவனும் ஆன உனக்கு சரணம்.*

**3.1.7. அசிமத்ப்யோ நக்தம் சரத்ப்ய: பிரக்ருந்தானாம் பதயே நமோ நம.**

*மற்றவர்களின் பெயர், கௌரவம், வாழ்க்கை முதலிய வற்றை நாசம் செய்யும் சக்தி, ஆயுதங்களை நம் மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் அளிப்பவனும், அறிவின்மையும் அழுக்காறும் பொருந்திய மன, இந்திரியங்களில் உலவு பவனும், மற்றவர்களின் வாழ்க்கையை அழிக்க நம்முள் இயங்கும் சக்திகளை காப்பவனும் ஆன உனக்கு சரணம்.*

**3.1.8. உஷ்ணீஷிணே கிரிசராய குலுஞ்சானாம் பதயே நமோ நம:**

*மனத்தையும், இந்திரியங்களையும் காமத்தால் சூழ்பவன், நயவஞ்சகமாக மனத்தை கவரும் வண்ணம் பேச திறமை அளிப்பவன், நம் மனது இந்திரியங்கள் மூலம் பெண்களைத் துன்புறுத்தி கற்பை அழிக்கத் தூண்டும் சக்திகளைக் காப்பவனும் ஆன உனக்கு சரணம்.*

**3.2.1. இஷுமத்ப்யோ தன்வாவிப்யஸ்ச்சவோ நமோ நம.**

*தீய விருத்திகளை உண்டாக்கும் சக்திகளுக்கும், தீய விருத்திகளை உண்டாக்கும் உலகங்களுக்கும் சரணம்.*

**3.2.2. ஆதன்வானேப்ய: பிரதித தானேப் யஸ்ச்சவோ நமோ நம.**

*ஜீவன் இப்பொழுதே அனுபவிக்க வேண்டிய உலகங் களை சிருஷ்டி செய்யும் சக்திகளுக்கு; ஜீவனின் கோசங்*

களில் உடனே அனுபவிக்க வேண்டியவற்றுக்காக எந்த குறிப்பிட்ட விருத்திகளை செலுத்தும் சக்திகளுக்கு சரணம்.

**3.2.3. ஆயச் சத்ப்யோ விசிருஜ த்ப்யஸ்ச்சவோ நமோ நமோ**

*தீய விருத்திகளை உண்டுபண்ணும் சக்தியை அனுப்ப ஆரம்பிப்பவர்களுக்கு, அம்மாதிரியான சக்தியை ஏற்கெனவே ஜீவனிடம் அனுப்பித்தவர்களுக்கு (இந்த விருத்திகள் முன் கூறிய மந்த்ரங்களில் விவரிக்கப்பட்டவை) சரணம்.*

**3.2.4. அஸ்யத்ப்யோ வித்யத்ப்யஸ்ச்சவோ நமோ நம:**

*ஜீவனை நோக்கி விருத்திகளை உண்டுபண்ணும் சக்திகளை குறிவைத்து இருப்பவர்களுக்கு, அந்த சக்திகளால் ஜீவனை ஊடுருபவர்களுக்கு சரணம்.*

**3.2.5. ஆஸீனேப்ய: சயானேப்யஸ்ச்சவோ நமோ நம:**

*ஓய்வாக இப்பொழுது இருக்கும் சக்திகளுக்கு (ஜீவனின் மன, இந்திரியங்கள் மேல் செயல் புரிந்தபின்), ஜீவனின் மனத்தின் ஆழத்தில் செயல் புரியுமுன் அமர்ந்திருக்கும் சக்திகளுக்கு சரணம்.*

**3.2.6. ஸ்வபத்ப்யோ ஜாக்ரத்ப்யஸ்ச்சவோ நமோ நம:**

*மன ஆழத்திலிருந்து வெளிவந்து மனதின் மேல் செயல்புரியத் தொடங்கும் சக்திகளுக்கு, ஜீவனின் ஜாக்ரத் நிலையில் வெளிவரும் சக்திகளுக்கு சரணம்.*

**3.2.7. திஷ்டத்ப்யோ தாவத்ப்யஸ்ச்சவோ நமோ நம:**

*ஜீவனின் ஜாக்ரத் நிலையில் முழுவதுமாக வெளி வந்துள்ள சக்திகளுக்கு, ஜீவனின் விழிப்பு மன, இந்திரியங் களில் விரைவாக நுழையும் சக்திகளுக்கு சரணம்.*

**3.2.8. சபாப்ய: சபாபதிப்யஸ்ச்சவோ நமோ நம:**

*மனது, இந்திரியங்கள், விருத்திகள் இவற்றை ஒன்று சேர்ந்த சக்திகளுக்கு, மன்யுவினால் கொடுக்கப்பட்ட விருத்திகளை காக்கும் மன, இந்திரியங்களின் அதிபதிகள் இவர்களுக்கு சரணம்.*

**3.2.9. அஸ்வேப்யோ அஸ்வபதிப்ஸ்ச்சவோ நம:**

*விருத்திகளில் ஈடுபட்டிருக்கும் ஜீவனின் சக்தி வாய்ந்த இந்திரியங்களுக்கு, இந்திரியங்களின் அதி தேவதைகளுக்கு சரணம்.*

*(மன்யு ஸ்வரூப ருத்ரனே உன்னுடைய சக்திகள் அனைத்தையும் அறிந்து உன்னை துதித்து சரண் அடைகிறோம். ஆகவே எங்களைப் பற்றினால் உங்களுக்கு பூரண திருப்தி கிடைக்காது. நாங்கள் வெறுக்கும் அசுர இயல்புகளுடன், அறியாமையில் ஆழ்ந்திருக்கும் ஜீவராசி களிடம் செல்வீராக.)*

## அனுவாகம் 4

இந்த அனுவாகம் லோகங்களின் சிருஷ்டியையும், சிருஷ்டிகர்த்தாக்களையும் ஜீவாத்மா சரணம் அடைந்து உய்யும் வகையில் அறிவிக்கிறது. நாண் பூட்டப்பட்ட ருத்ரனின் தனுஸ் (வில்) உலகங்களின் மங்கள கோர ரூபங்கள் இரண்டையும் குறிக்கிறது.

உலகம் என்பது குறிப்பிட்ட ஜீவகணங்களின் அனுபவத்திற்காக ஏற்பட்ட சிருஷ்டி. உலகம் என்பது ஒரு பூமியைக் குறித்தோ, பல பூமிகளைக் குறித்தோ, அல்லது ஒரு பூமியில் குறிப்பிட்ட பிரதேசத்தையோ குறிக்கலாம். இதில் ஜீவாத்மா தன் அனுபவங்களைப் பெறுகிறது.

ஜீவர்களின் இந்திரியங்களால் உலகம் அறியப் படுகிறது. இந்த உலகங்களின் சிருஷ்டிகர்த்தாக்கள் ருத்ரன்-மன்யுவின் சக்திகளே. இந்த அனுவாகத்தில் சிருஷ்டி என்பது முக்கியத்துவம் பெறுகிறது. இந்த சிருஷ்டி கர்த்தாக்கள் தேவர்கள், தேவியர். பிரகிருதியைக் குறிப்பிடும் இந்த அனுவாகம் தேவியர்களின் ஆராதனை யுடன் தொடங்குகிறது.

**4.1.1. நம ஆவ்யாதினீப்யோ விவித்யந்தீப்யஸ்ச்சவோ நமோ நம**

புதிதாக உலகங்களை சிருஷ்டிக்கும் தேவியருக்கும், பலவித உலகங்களை எப்பொழுதும் சிருஷ்டித்துக் கொண்டிருக்கும் தேவியர்களுக்கும் சரணம்.

**4.1.2. உகணாப்யஸ் த்ருகும் ஹதீப்யஸ்ச்சவோ நமோ நம:**

புனிதமானதும், ஆனந்தமயமானதுமான பிரம்ம லோகம் போன்ற லோகங்களை சிருஷ்டிப்பவர்களுக்கும், துன்பமயமான பூலோகம், நரகலோகம் போன்ற லோகங்களை சிருஷ்டிப்பவர்களுக்கும் சரணம்.

**4.1.3. கிருத்சேப்யோ கிருத்சபதிப்யஸ்ச்சவோ நமோ நம:**

*திறமைசாலிகளான அறிஞர்களுக்கு சரணம். திறமை சாலிகளான அறிஞர்களை (சிருஷ்டிகர்த்தாக்கள்) காப்பவர் களுக்கு சரணம்.*

**4.1.4. விராதேப்யோ விராத பதிப்யஸ்ச்சவோ நமோ நமோ**

*(சிருஷ்டியின்) விதிகளை அனுசரிப்போருக்கு சரணம். விதிகளை அனுசரிப்போரை பாதுகாப்போருக்கு சரணம்.*

**4.1.5. கணேப்யோ கணபதிப்யஸ்ச்சவோ நமோ நமோ.**

*(லோகம் அல்லது அதன் பகுதிகளை சிருஷ்டிக்கும்) ஒரே குறிக்கோள் படைத்த கணங்களுக்கும், கணங்களை காப்பவர்களுக்கும் சரணம்.*

**4.1.6. விரூபேப்யோ விஸ்வரூபேப்யஸ்ச்சவோ நமோ நமோ.**

*ரூபமில்லாதவர்களுக்கும், எல்லாவிதமான ரூபம் உடையவர்களுக்கும் சரணம்.*

**4.1.7. மஹத்ப்ய: க்ஷுல்லகேப்யஸ்சவோ நமோ நமோ.**

*மிகப் பெரியோர்களுக்கும் மிகச் சிறியோர்களுக்கும் சரணம்.*

**4.1.8. ரதிப்யோ ரதேப்யஸ்ச்சவோ நமோ நமோ.**

*சரீரம் உடையவர்களுக்கும், சரீரம் இல்லாதவர் களுக்கும் சரணம்.*

**4.2.1. ரதேப்யோ ரதபதிப் யஸ்ச்சவோ நமோ நமோ.**

*உலகங்களில் சரீரமாக அமைபவர்களுக்கும், சரீரங்களைக் காப்பவர்களுக்கும் சரணம்.*

**4.2.2. சேனாப்ய: சேனானிப்யஸ்சவோ நமோ நம:**

*உலக சிருஷ்டியில் ஈடுபட்டிருக்கும் சேனைகளுக்கும், சேனைத் தலைவர்களுக்கும் சரணம்.*

**4.2.3. க்ஷத்ருப்ய: சங்கிரஹீத்ருப்யஸ்ச்சவோ நமோ நமோ:**

*இந்திரியங்களுக்கு சக்தியைப் பகிர்ந்து அளிப்பவர் களுக்கும், இந்திரியங்களின் அதிபதிகளாக ஆள்பவர் களுக்கும் சரணம்.*

**4.2.4. தக்ஷப்யோ ரத காரேப்யஸ்சவோ நமோ நம:**

*ஜீவராசிகளின் சரீர பகுதிகளை சிருஷ்டிப்பவர் களுக்கும், அந்த பகுதிகளை இணைத்து முழுமையான சரீரமாக படைப்பவர்களுக்கும் சரணம்.*

**4.2.5. குலோலேப்ய: கர்மாரேப்யஸ்சவோ நமோ நம:**

*ஸ்தூல உலகங்களை சிருஷ்டிப்பவர்களுக்கும், ஸ்தூல உலகங்களின் மூலப் பொருள்களைக் கொண்டு பொருள் களை சிருஷ்டிப்பவர்களுக்கும் சரணம்.*

**4.2.6. புஞ்ஜிஷ்டேப்யோ நிஷாதேப்யஸ்சவோ நமோ நம:**

*அந்தந்த உலகங்களுக்கு தகுந்த ஜீவன்களை திரட்டுபவர்களுக்கும், அப்படி திரட்டப்பட்ட ஜீவன்கள் அந்த உலகங்களில் கூடி வாழ வகை செய்பவர்களுக்கும் சரணம்.*

**4.2.7. இஷு கிருத்ப்யோ தன்வகிருத் ப்யஸ்சவோ நமோ நமோ**

*விருத்தி(அம்பு)களை உண்டுபண்ணுபவர்களுக்கும் அந்த லோகங்களை (தனு) சிருஷ்டிப்பவர்களுக்கும் சரணம்.*

**4.2.8. மிருகயுப்ய: ஸ்வனிப்யஸ்சவோ நமோ நம:**

*ஜீவர்களில் மறைந்துள்ள பூர்வ ஜன்ம கர்ம வாசனைகள் தேடி வெளிக்கொண்டு வருபவரும், அவர்களுக்கு உதவியாக (வேடனுக்கு நாய் உதவுதல் போல) இருக்கும் சக்திகளுக்கும் சரணம்.*

**4.2.9. ஸ்வப்ய: ஸ்வபதிப்யஸ்சவோ நம:**

*ஜீவனின் அந்தப் பிறவியில் அனுபவிக்க வேண்டிய பிராரப்த கர்மாக்களை ஆராய்ந்து காட்டுபவர்களுக்கும் அவ்வாறு காட்டும் சக்திகளை (வேட்டை நாயை அதன் யஜமான் போல) காப்பவர்களுக்கும் சரணம்.*

## அனுவாகம் 5

**சத்யோ ஜாதம் பிரபத்யாமி சத்யோ ஜாதாய வை நமோ நம:**
**பவே பவே நாதிபவே பவஸ்வமாம் பவோத்பவாய நம:**

*இந்த அனுவாகத்தில் மங்கள ஸ்வரூபியான ருத்ரனை சத்யோ ஜாதம் (அ) சிருஷ்டியைப் புரிபவராக துதிக்கிறார்.*

**5.1.1. நமோ பவாய சருத்ராய ச**

*சிருஷ்டியே ஸ்வரூபமாக உள்ளவருக்கும், சிருஷ்டி காலத்தில் சிருஷ்டிகர்த்தாவுக்கு வேத ஞானத்தை புகட்டு பவருக்கும் சரணம்.*

**5.1.2. நம: சர்வாய ச பசுபதயே ச**

*ஜீவராசிகளை காமக்ரோத அம்புகளால் அடிப்ப வருக்கும், சகல ஜீவராசிகளைக் காப்பவருக்கும் சரணம்.*

**5.1.3. நமோ நீலக்ரிவாய ச சிதிகண்டாய ச**

*தீமையை உள்ளடக்கியவருக்கும், நன்மை உள்ளடக்கியவருக்கும் சரணம்*

**5.1.4. நம: கபர்தினே ச வ்யுப்தகேசாய ச**

*ஸ்தாவர ஜங்கம சிருஷ்டியால் நிறைந்த உலகமாக உள்ளவருக்கும், ஸ்தாவர ஜங்கம சிருஷ்டி இல்லாத வெற்றுலகமாக உள்ளவருக்கும் சரணம்.*

**5.1.5. நம: சஹஸ்ராக்ஷாய ச சத தன்வனே ச**

*அனைத்தும் காண்பவராய் உள்ளவருக்கும், நூற்றுக் கணக்கான பல உலகங்களை சிருஷ்டித்தவருக்கும் சரணம்.*

**5.1.6. நமோ கிரிசாய ச சிபிவிஷ்டாய ச**

*வேதச் சொற்களில் உறைபவருக்கும், ஞானத்தினால் முழுதும் நிறைந்திருப்பவருக்கும் சரணம்.*

**5.1.7. நமோ மீடுஷ்டமாய சேஷுமதே ச**

*கொடைவள்ளலாக உள்ளவருக்கும், விருத்திகளை உண்டுபண்ணும் சக்திகளைக் கொண்டவருக்கும் சரணம்.*

**5.1.8. நமோ ஹ்ரஸ்வாய ச வாமனாய ச.**

*மெலிந்தவராய் இருப்பவருக்கும், சிறியவனாய் (அ) இளையவனாய் உள்ளவருக்கும் சரணம்.*

**5.1.9. நமோ ப்ருஹதே சவர்ஷீயசே ச**

*பருத்தவனாய் உள்ளவருக்கும், வயதானவராக உள்ளவருக்கும் சரணம்.*

**5.1.10. நமோ விருத்தாய ச சம்விருத்த்வனே ச**

*முழுதும் வளர்ந்தவனாய் உள்ளவருக்கும், நன்கு வளர்ந்துகொண்டிருப்பவருக்கும் சரணம்.*

**5.2.1. நமோ அக்ரியாய ச பிரதமாய ச**

*பரமாத்மாவாக உள்ளவருக்கும் ஜீவாத்மாவாக உள்ளவருக்கும் சரணம்.*

**5.2.2. நம ஆசவே சாஜிராய ச**

*பிராணனாக இருப்பவருக்கும், சரீரமாக இருப்ப வருக்கும் சரணம்.*

**5.2.3. நம: சீக்ரியாய ச சீப்யாய ச**

*புத்தியாக இருப்பவருக்கும், மனதாக இருப்பவருக்கும் சரணம்.*

**5.2.4. நம ஊர்ம்யாய சாவஸ்வன்யாய ச**

*இரத்த ஓட்டத்தில் அலை போன்றவரும், இரத்த ஓட்டம் (அ) வாழ்க்கை ஓட்டத்தில் கர்ஜிக்கும் சப்தத்தை உண்டுபண்ணுபவரும் ஆன உனக்கு சரணம்.*

**5.2.5. நம: ஸ்ரோதஸ்யாய ச த்வீப்யாய ச**

*இரத்த (அ) வாழ்க்கை ஓட்டத்தில் உறைபவரும், இரத்த ஓட்டத்தால் சூழப்பட்ட ஹ்ருதயம் என்னும் தீவில் உறைபவரும் ஆன உனக்கு சரணம்.*

## அனுவாகம் 6

**வாமதேவாய நமோ ஜ்யேஷ்டாய நம: ஸ்ரேஷ் டாய**
**நமோ ருத்ராய நம: காலாய நம: கலவிகரணாய நமோ**
**பலவிகரணாய நமோ பலாய நமோ பல ப்ரமதனாய நம:**
**சர்வபூத தமனாய நமோ மனோன்மனாய நம:**

*இந்த அனுவாகத்தில் மங்கள ஸ்வரூபியான ருத்ரனை வாம தேவம் (அ) காத்தல் தொழில் புரிபவராக ரிஷி துதிக்கிறார். இந்த அனுவாகத்தில் உள்ள சொற்கள் துல்லியமாக உலகங்கள், சிருஷ்டி, ருத்ரனின் ஆட்சி, வேதக் கோட்பாடுகள் மூலம் நடைபெறுவதை அறிவிக்கின்றன. ஆகவே இந்த அனுவாகத்தில் கவசம், அம்பு, தேர் முதலியன சாதாரண அர்த்தத்திலேயே எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன. காத்தல் புரியும் ஒரு வீர அரசனுக்கு அமைவது போல் இவை ருத்ரனுக்கு அமைகின்றன.*

**6.1.1. நமோ ஜ்யேஷ்டாய ச கனிஷ்டாய ச**

*மிகச் சிறந்த முதல்வனுக்கும், இளையோனுக்கும் சரணம்.*

**6.1.2. நம: பூர்வ ஜாய சாபர ஜாய ச**

*முன் பிறந்தவனுக்கும் பின் பிறந்தவனுக்கும் சரணம் (பிரம்மா, ஜீவாத்மா)*

**6.1.3. நமோ மத்யமாய சாபகல்பாய ச**

*நடுவில் தேவ அசுரர்களாகப் பிறந்தவனுக்கும், கலங்கின புத்தியும், தைர்யமின்மையும் உடைய மனிதர் களாக பிறந்தவனுக்கும் சரணம்.*

**61.4. நமோ ஜகன்யாய ச புத்னியாய ச**

*மிருகங்களாகப் பிறந்தவனுக்கும், செடி கொடி, மரங்களாகப் பிறந்தவனுக்கும் சரணம்.*

**6.1.5. நம: ஸோப்யாய ச பிரதிஸர்யாய ச**

*வானத்தில் இருக்கும் பறவை மற்ற ஜீவராசிகளாக பிறந்தவனுக்கும், தண்ணீரில் வாழும் மீன்கள் முதலில் ஜீவராசிகளாகப் பிறந்தவனுக்கும் சரணம்.*

**6.1.6. நமோ யாம்யாய ச க்ஷேம்யாய ச.**

*இந்த்ரிய நிக்ரஹத்திலும், பொறுமையிலும் உறைபவ னுக்கும், சமாதானம், அமைதியில், உறைபவனுக்கும் சரணம்.*

**6.1.7. நம உர்வர்யாய ச கல்யாய ச**

*செழிப்பான பூமியில் உறைபவனுக்கும், தயாராக உள்ள தான்யக் கதிர்களில் உறைபவனுக்கும் சரணம்.*

**6.1.8. நம: ஸ்லோக்யாய சாவசான்யா ச**

*வேதமந்த்ரங்களில் உறைபவனுக்கும், வேதாந்தங் களில் உறைபவனுக்கும் சரணம்.*

**6.1.9. நமோ வன்யாய ச கக்ஷ்யாய ச**

*சம்சார உலகங்களில் உள்ளவனுக்கும், தேவ, அசுர, ரிஷி, பித்ரு, மனுஷ்ய கணங்களில் உள்ளவனுக்கும் சரணம்.*

**6.1.10. நமஸ்ரவாய ச பிரதிஸ்ரவாய ச**

*வேதஸ்துதியில் உறைபவனும் எதிர் வரிசையில் பதிலாகக் கூறப்படும் வேதஸ்துதியில் உறைபவனும் ஆன உனக்கு சரணம்.*

**6.2.1. நம ஆசுஷேணாய சாசுரதாய ச**

*விரைவான அம்புகளை உடையவனுக்கும், விரைவாகச் செல்லும் தேரை உடையவனுக்கும் சரணம்.*

**6.2.2. நம: சூராய சாவ பிந்ததே ச**

*வீரம் மிக்கவனுக்கும், தீமையை அழிப்பவனுக்கும் சரணம்.*

**6.2.3. நமோ வர்மிணே ச வரூதினே ச**

*கவசம் அணிந்திருப்பவனுக்கும், இடம் அளித்து காப்பவனுக்கும் சரணம்.*

**6.2.4. நமோ பில்மினே ச கவசினே ச**

*தலைக்கவசம் அணிந்திருப்பவனுக்கும், கவசங்கள் உடையவனுக்கும் சரணம்.*

**6.2.5. நம: ஸ்ருதாய சஸ்ருத சேநாய ச**

*வேதமாக உள்ளவனுக்கும், வேதத்தில் கூறப்படும் தேவதைகளை சேனையாகக் கொண்டவனுக்கும் சரணம்.*

## அனுவாகம் 7

**அகோரேப்யோ த கோரேப்யோ கோரகோரதரேப்ய:**
**சர்வேப்ய: சர்வ சர்வேப்யோ நமஸ்தே அஸ்து ருத்ரரூபேப்ய:**

*இந்த அனுவாகத்தில் மங்கள ஸ்வரூபியான ருத்ரனை கோரம் (அ) அழித்தல் தொழில் புரிபவராக ரிஷி துதிக்கிறார். வெளிப்படையாக ருத்ரன் க்ரூரமாகச் செயல்படுவதாகத் தோன்றினாலும், உண்மையில் அவர் அளிக்கும் துன்பம், துயரம், சரீர நோய்கள் எல்லாம் கர்மவினைகளை ஒழிக்கும் வண்ணம் செயல்படுகின்றன. ஜீவர்களை பிதிருயானம், தேவயானம் என்ற வழிகளில் புண்ய லோகங்களுக்கு ருத்ரன் அழைத்துச் செல்கிறார். வில், அம்புகளை அவர் கையாண்டாலும் அவை முடிவில் மங்களத்தையே அருளுகின்றன. மன்யுவின் ஆயுதங்கள் போன்று அவை ஜீவனை இந்த உலகுக்கும், நரகத்துக்கும் மட்டுமே ஒதுக்கிவிடுவதில்லை.*

**7.1.1. நமோ துந்துப்யாய சாஹனன்யாய ச**

*சரீர ரூபத்தில் இருப்பவனுக்கும், சரீரத்தை துன்பத்தால், பீடிப்பவனுக்கும் சரணம்.*

**௭.௧.௨. நமோ த்ருஷ்ணவே ச பிரமிருசாய ச**

*பயங்கரனாயும், ஜீவர்களைப் பிடிப்பவனாயும் உள்ள உனக்கு சரணம்.*

**7.1.3. நமோ தூதாய ச பிரஹிதாய ச**

*தூதனுக்கும் (ஜீவன் அந்திம காலத்தில் வருபவன்) ஜீவாத்மாவின் மேல் பார்வை வைத்துள்ளவனுக்கும் சரணம்.*

**7.1.4. நமோ நிஷங்கிணே சேஷுதிமதே ச**

*வில்வீரனுக்கும், அம்பறாக்கூடு உடையவனுக்கும் சரணம்.*

**7.1.5. நமஸ் தீக்ஷ்ணேஷவே சாயுதினே ச**

*கூர்மையான அம்புகளை உடையவனும், ஆயுதங்கள் உடையவனும் ஆன உனக்கு சரணம்.*

**7.1.6. நமஸ் வாயுதாய ச சுதன்வனே ச**

*மங்களமான ஆயுதம் உடையவனுக்கும், மங்களமான வில் உடையவனுக்கும்.*

**7.1.7. நமஸ்ருத்யாய ச பத்யாய ச**

*பித்ருயானமாக இருப்பவனுக்கும், தேவயானமாக இருப்பவனுக்கும் சரணம்.*

**7.1.8 நம: காட்யாய ச நீப்யாய ச**

*ஜீவாத்மாவின் சரீரத்தில் ரக்தசோகையாக உள்ளவனுக்கும் குறைந்த ரத்த அழுத்தமாக உள்ளவனுக்கும் சரணம்.*

**7.1.9. நம: சூத்யாய ச சரஸ்யாய ச**

*சரீரத்தை ஜ்வரரூபமாக பீடிப்பவனுக்கும், பேதி ரூபமாக பீடிப்பவனுக்கும் சரணம்.*

**7.1.10. நமோ நாத்யாய ச வைசந்தாய ச**

*ஹ்ருதயப் படபடப்பாக உள்ளவனுக்கும், அதிக ரத்த அழுத்தமாக உள்ளவனுக்கும் சரணம்.*

**7.2.1. நம: கூப்யாய சாவட் யாய ச**

*மூத்திரக் குழாய் சம்பந்தமான வியாதிகளாக உள்ளவனுக்கும், கப சம்பந்தமான வியாதிகளாக உள்ளவனுக்கும் சரணம்.*

**7.2.2. நமோ வர்ஷ்யாய சாவர்ஷ்யாய ச**

*மழையினால் சரீரத்தை பீடிப்பவனுக்கும், மழை யின்றி வெயிலினால் சரீரத்தை பீடிப்பவனுக்கும் சரணம்.*

**7.2.3. நமோ மேக்யாய சாவித்யுத்யாய ச**

*மேக மூட்டத்தினால் சரீரத்தை பீடிப்பவனுக்கும், மின்னல் ரூபத்தால் சரீரத்தை பீடிப்பவனுக்கும் சரணம்.*

**7.2.4. நம ஈத்ரியாய சாதப்யாய ச**

*நிர்மலமான வானினால் சரீரத்தை பீடிப்பவனுக்கும், சுட்டெரிக்கும் சூரிய ஒளியால் சரீரத்தை பீடிப்பவனுக்கும் சரணம்.*

**7.2.5. நமோ வாத்யாய ச ரேஷ்மியாய ச**

*காற்றாக சரீரத்தை பீடிப்பவனுக்கும், புயலாக சரீரத்தை பீடிப்பவனுக்கும் சரணம்.*

**7.2.6. நமோ வாஸ்தவ்யாய ச வாஸ்துபாய ச**

*சரீரத்தில் உள்ள தாதுப் பொருள்களாக உள்ள வனுக்கும் ஜீவன் பிரிந்த சரீரத்தின் தாதுப் பொருள்களை ஸ்வீகரித்துக் கொள்பவனுக்கும் சரணம்.*

*(இந்த அனுவாகத்தில் 7-1-8 முதல் தமிழில் வலிந்து பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது என எண்ணம் எழலாம். கூறப்பட்டுள்ள நோய்களுடன் தொடர்புள்ள சரீர அவயவங்களும் அவற்றுடன் சம்பந்தம் உள்ள ருத்ர ஸ்வரூபங்களும் பற்றி பிரஸ்னம் 4 அனுவாகம் 36 (பக்கம் 76) என்ற மந்திரத்தின் தமிழாக்கத்தில் காணலாம்.)*

## அனுவாகம் 8

**தத்புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி**
**தன்னோருத்ர: பிரசோதயாத்**

*இந்த அனுவாகம் மஹா தேவர் (அ) ஈஸ்வரன் பற்றியதாகும். ருத்ரபிரம்மன் ஈஸ்வரனாக சகல சிருஷ்டியையும் ஆள்கிறார். அவரே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று செயல்களைப் புரிந்து, மூன்றையும் ஒன்றோடொன்று சரிவரப் பிணைத்து ஜீவனுக்கு ஓர் காலவரையில் அனுபவங்களை அருளுகிறார். உலகங் களின் நடப்பை காலத்தால் நிலைநாட்டி, ஜீவனை கர்மவினைகளை அனுபவிக்கச் செய்கிறார்.*

*காலம் ஈஸ்வரனின் நியதியாக ஜீவர்களை நான் தனித் தன்மையுள்ளவன் (அஹங்காரம்) என்ற மாயையில் மறைத்துள்ளார். காலம் கனிந்து வரும் பொழுது அவர்களுக்கு ஞானத்தை அருளுகிறார்.*

*இந்த அனுவாகத்தில் காலத்தை ஓர் நதிக்கு ஒப்பிடப் பட்டுள்ளது. இந்த ஓடும் நதியில் ஜீவன் ருத்ரன் என்னும் படியின் மூலம் இறங்கி, ருத்ரனால் அக்கரை சேர்க்கப் படுகிறது.*

*காலம் என்ற ஒன்று இல்லையேல் மாறுதல் இல்லை, நாம் காணும் செயல் மிகுந்த உலகம் இல்லை. காலத்தின் போக்கால்தான் இருகணங்களில் ஏற்படும் மாறுதல்களை நாம் காண்கிறோம். காலமே சிருஷ்டியை நடத்துவிக்கிறது.*

**8.1.1. நம: சோமாய சருத்ராய ச**

*ஓஷதிபதியான சோமனாக இருந்து எல்லா ஜீவராசிகளையும் போஷிப்பவருக்கும், சம்சார துன்பத்தை போக்கும் ருத்ரனுக்கும் சரணம்.*

**8.1.2. நம: தாம்ராய சாருணாய ச**

*ஆவரண சக்தியாயுள்ளவனுக்கும், கிரியா சக்தியாய் உள்ளவனுக்கும் சரணம்.*

**8.1.3. நம: சங்காய ச பசுபதயே ச**

*கால்நடைகளைக் காப்பவருக்கும், எல்லா ஜீவராசிகளை காப்பவருக்கும் சரணம்.*

**8.1.4. நம உக்ராய ச பீமாய ச**

*க்ரூரமானவருக்கும், எதிர்கொள்ள முடியாதவருக்கும் சரணம்.*

**8.1.5. நமோ அக்ரே வதாய ச தூரேவதாய ச**

*இக்கணமே துன்புறுத்துபவருக்கும், பின்னே தூரமான இடத்தில் (மறுபிறவியில்) துன்புறுத்துபவருக்கும் சரணம்.*

**8.1.6. நமோ ஹந்த்ரே ச ஹனீயசே ச**

*ஜீவர்களை எப்பொழுதும் கொல்பவரும், பிரளயத்தின்போது அழிப்பவருக்கும் சரணம்.*

**8.1.7. நமோ விருக்ஷேப்யோ ஹரிகேசேப்யோ**

*சம்சார விருக்ஷமாக உள்ளவருக்கும், சூர்யன், அக்னியாக ஜீவர்களைக் காப்பவருக்கும் சரணம்.*

**8.1.8. நமஸ்தாராய.**

*ஜீவர்களை அக்கரைக்குக் கொண்டு செல்பவரும் (சம்சாரத்திலிருந்து).*

**8.1.9. நம: சம்பவே ச மயோ பவே ச**

*அழியா இன்பத்தை கொடுப்பவருக்கும், இவ்வுலக இன்பத்தைக் கொடுப்பவருக்கும் சரணம்.*

**8.1.10. நம: சங்கராய ச மயஸ்கராய ச**

*மங்களமான செல்வத்தை அளிப்பவருக்கும் இவ்வுலகில் இன்பத்தை அருளுபவருக்கும் சரணம்.*

**8.1.11. நம: சிவாய ச சிவதராய ச**

*மங்களமே உருவானவருக்கும், சிறந்த மங்களம் பொருந்தியவருக்கும் சரணம்.*

**8.2.1. நமஸ் தீர்த்யாய ச கூல்யாய ச**

*காலம் என்ற நதியில் இறங்குவதற்கு வழியாக உள்ளவருக்கும் உண்மை ஞானத்தை ஜீவர்களிடமிருந்து மறைத்து வைத்திருப்பவருக்கும் சரணம்.*

**8.2.2. நம: பார்யாய சாவார்யாய ச**

*அக்கரையில் அழியா இன்பமாக உள்ளவருக்கும், யாராலும் அவருடைய சங்கல்பத்தை மீற முடியாத வருக்கும் சரணம்.*

**8.2.3. நம: பிரதரணாய சோத்தரணாய ச**

*காலச் சுழலில் ஜீவர்களை அழைத்துச் செல்ப வருக்கும், அக்கரை(முக்தி)க்கு ஜீவர்கள் செல்வதற்கு அருள்புரிபவருக்கும் சரணம்.*

**8.2.4. நம ஆதார் யாய சாலாத்யாய ச**

*முக்தி என்ற கரையை அடைய உதவுபவருக்கும், கால சக்ரத்தின் ஆரம்பத்தில் சிறந்த முதல்வராக இருப்ப வருக்கும் சரணம்.*

**8.2.5. நம: சஷ்ப்யாய ச பேன்யாய ச**

*இரு பிறவிகளுக்கு இடையே அஹங்காரமில்லாத நிலையில் ஜீவாத்மாவை தாங்குபவருக்கும், ஒவ்வொரு இடத்திலும் ஜீவாத்மாவின் செயல்களில் உள்ளவருக்கும் சரணம்.*

**8.2.6. நம: சிகத்யாய ச பிரவாஹ்யாய ச**

*ஜீவர்கள் ரூபத்தில் இருப்பவருக்கும், கால ஓட்டத்தின் ரூபமாக இருப்பவருக்கும் சரணம்.*

## அனுவாகம் – 9

**ஈசானஸ் சர்வ வித்யானாம் ஈஸ்வரஸ் சர்வ பூதானாம்**
**பிரஹ்மாதி பதிர் பிரஹ்மணோதி பதிர் பிரம்ஹா சிவோமே**
**அஸ்து சதாசிவோம்**

*இந்த அனுவாகத்தில் ரிஷி மங்கள ஸ்வரூபியான ருத்ரனின் ஈசானம் (அ) அருளல் செயல்பாடுகளைத் துதிக்கிறார். முதல் அனுவாகத்தில் ரிஷி இவ்வுலகில் நல்வாழ்க்கையை(சிவதமாதனு)யும், பின்னர் சுவர்க்கம் சத்யலோகம் போன்ற புண்ணிய லோக வாழ்க்கையும் (விஜ்யம்தனு) கடைசியாக எல்லா உலக அனுபவங் களையும் தூரே வைக்கும்படியும் வேண்டுகிறார். அப்பொழுது ருத்ரன் ஒருவரே ஜீவனால் அனுபவிக்கப் படுகிறார். இந்த நிலையில் ஜீவனின் அனுபவம் என்பது கீழ் நிலையில் உள்ள நமக்கு புரியும்படி விளக்க முடியாது. இந்த மாதிரி ஜீவன் ருத்ரனை வேண்டுவது நமக்கு எவ்வாறு தோன்றுகிறது என்றால், இந்த நிலை இன்பம் மிகுந்த பலவித அனுபவங்கள் கொண்ட பூலோகம், சுவர்க்கம், சத்யலோகங்களுக்கு ஒப்பிடும்போது, நமக்கு ஒரு வறண்ட பாலைவனம் போல் காட்சியளிக்கிறது.*

*சாஸ்திரங்களும், இந்த நிலையைப் பற்றி இது இல்லை, இது இல்லை (நேதி, நேதி) என்றும் விளக்க முடியாதது (அநிர்வசனீயம்) என்றும்தான் அறிவிக்க முடிகிறது. ஆனால், ரிஷி இந்த நிலையை அனுபவித்து இந்த அனுவாகத்தில் இந்த நிலையை ஒவ்வொரு மந்த்ரத்திலும் இரு எதிர்மறையான பொருள் கொண்ட சொற்களால் துதிக்கிறார். முதல் சொல் ஜீவன் இந்த நிலையை எவ்வாறு கொள்கிறான் என்றும், இரண்டாவது சொல் இந்நிலை*

உண்மையில் ரிஷி எப்படி காண்கிறார் என்பதையும் விளக்குகிறது.

**9.1.1. நம இரிண்யாய ச பிரபத்யாய ச**

செழிப்பில்லாத பாலைவனம் போல் தோன்றுபவருக்கு, ஆனால் உண்மையில் சிறந்த முக்தி என்னும் பயனை அடையும் வழியாக இருப்பவருக்கு சரணம்.

**9.1.2. நம: கிகும்சிலாய ச க்ஷயணாய ச**

சுகம் இல்லா இடம் போல உள்ளவருக்கு, ஆனால் உண்மையில் மகிழ்வான இடமாக (முக்தி) உள்ளவருக்கு சரணம்.

**9.1.3. நம: கபர்தினே ச புலஸ்தயே ச**

அழுக்குப் படிந்த பரட்டைத் தலையன் போல். தோன்றுபவருக்கு, ஆனால் உண்மையில் நன்கு அமைந்த ஞானக் கதிர்களாகிய கேசம் கொண்டவருக்கு சரணம்.

**9.1.4. நமோ கோஷ்ட்யாய ச கிருஹ்யாய ச**

மாட்டுத் தொழுவத்தில் வசிப்பவர் போல் தோன்றுபவருக்கு (தெய்வீக மாளிகைகளை ஒப்பிடும் போது), ஆனால் உண்மையில் சிறந்த ஞானமாகிய வீட்டில் வசிப்பவருக்கு சரணம்.

**9.1.5. நமஸ்தல்ப்யாய ச கேஹ்யாய ச**

வயதாகித் தளர்ந்து படுக்கையில் கிடக்கும் நிலையிலுள்ளவர் போல தோன்றுபவருக்கு (தெய்வீக உலகங்களில் லீலைகள் புரியும் தேவர்களை ஒப்பிடும் போது), ஆனால் உண்மையில் முக்தி வீட்டில் சிறப்பாக வாழ்பவருக்கு சரணம்.

**9.1.6. நம: காட்யாய ச கஹ்வரேஷ்டாய ச**

ஒரு பொந்து அல்லது துளையில் இருப்பவர் போல தோன்றுபவருக்கு, ஆனால் உண்மையில் சிருஷ்டியின் ஹிருதய ஆழத்தில் உள்ளவருக்கு சரணம்.

**9.1.7. நமோ ஹ்ரதய்யா ச நிவேஷ்ப்யாய ச**

அசையாது உள்ள நீரின் ஆழத்தில் இருப்பது போல் காணப்படுபவருக்கு, ஆனால் உண்மையில் பனித்துளிகள் போன்று உள்ளவருக்கு சரணம் (பனித்துளிகள் அசையாது இருப்பினும் அவை உயிருக்கு ஊட்டம் அளிப்பவை).

**9.1.8. நம: பாகும் சவ்யாய ச ரஜஸ்யாய ச**

*மணல் போன்று தோற்றமளிப்பவருக்கு, ஆனால் உண்மையில் வாழ்வின் ஆதாரமான மேகக் கூட்டம் போன்றவருக்கு சரணம்.*

**9.1.9. நம: சுஷ்க்யாய ச ஹரித்யாய ச**

*காய்ந்த கட்டை போன்றவருக்கு, ஆனால் உண்மையில் மரங்களிலேயே பசுமை மிக்கவருக்கு சரணம்.*

**9.1.10. நமோ லோப்யாய சாலப்யாய ச**

*அடைய முடியாத இடத்தில் இருப்பவரை போன்று உள்ளவருக்கு, ஆனால் உண்மையில், சுலபமாக அடையக் கூடிய உலபம் என்ற மிருதுவான பசும் புல்தரை போன்றவருக்கு சரணம்.*

**9.2.1. நம ஊர்வ்யாய ச சூர்ம்யாய ச.**

*ஆழ்கடல் ஊழித்தீ போன்று தோற்றமளிப்பவருக்கு, ஆனால் உண்மையில் பாசனத்து பாயும் நீர் போன்று மங்களமானவருக்கு சரணம்.*

**9.2.2. நம: பர்ண்யாய ச பர்ண சத்யாய ச**

*சம்சார விருக்ஷத்திலுள்ளவர் போல் தோற்றமளிப்ப வருக்கு, ஆனால் உண்மையில் இலைகள் இல்லா மரம் போல் சம்சாரத்திற்கு அப்பாற்பட்டவருக்கு சரணம்.*

**9.2.3. நமோ பகுரமாணாய சாபிக் னதே ச**

*அழகுமிக்க திவ்ய லோகங்களை ஒதுக்கியவர் போல் தோற்றமளிப்பவருக்கு, ஆனால் உண்மையில் சம்சாரத்தில் மறுபிறப்பை இல்லாமல் செய்பவருக்கு சரணம்.*

**9.2.4. நம ஆக்கிதசே ச பிரக்கிதசே ச**

*ஜீவனை தன்பால் இழுப்பவர் போல் தோன்று பவருக்கு, ஆனால் உண்மையில் சம்சாரத்தில் மறுபிறப்பை வெளியே தள்ளுபவருக்கு சரணம்.*

**9.2.5. நமோ வ: கிரிகேப்யோ தேவனாகும் ஹ்ருதயேப்ய:**

*மின்னல் கீற்றுகள் போல் ஒளி வீசுபவர்களுக்கு (வித்யுல்லேகேவ பாஸ்வரா) தேவர்களின் ஹ்ருதயங்களில் உள்ளவர்களாகிய உங்களுக்கு சரணம்.*

**9.2.6. நமோ விக்ஷீணகேப்ய:**

*தீமை அல்லது மறுபிறப்பை அழிப்பவர்களுக்கு சரணம்.*

**9.2.6. நமோ விசின்வத்கேப்ய:**

*பொய்யிலிருந்து உண்மையைப் பிரித்தெடுப்பவர் களுக்கு (அல்லது) உண்மை எது பொய் எது என்று அறிந்தவர்களுக்கு சரணம்.*

**9.2.7. நம ஆநிர்ஹதேப்யோ**

*அழிக்க முடியாத தன்மை உள்ளவர்களுக்கு சரணம்.*

**9.2.7. நம ஆமீவத்கேப்ய:**

*ஜீவர்களுக்கு, அஹங்காரம் என்ற திரையைக் கிழித்து மெய்ஞானம் அளிப்பவர்களுக்கு சரணம்.*

## அனுவாகம் 10

*இந்த அனுவாகத்தில் ருத்ரனுக்கும், மன்யுவிற்கும் விரிவான பிரார்த்தனைகளை ரிஷி செய்கிறார். சூசகமாக முதல் அனுவாகத்தில் ருத்ரனும் தானும் மட்டும் இருந்து அனுபவம் பெறவேண்டும் என்று சொன்னதை இந்த அனுவாகத்தில் கடைசியில் ரிஷி ருத்ரனை "சம்சார விருக்ஷத்தில் ஆயுதங்களை வைத்துவிட்டு தோல் போர்த்தி, அதாவது ரூபம் தரித்து பிநாகம் (அ-து) தண்டத்தை தரித்து ஆசார்யனாக வர அழைக்கிறார்.*

**10.1. த்ராபே அந்தஸஸ்பதே தரித்ரன் நீலலோஹித**
**ஏஷாம் புருஷாணாமேஷாம் பசூனாம் மாபேர்மாரோ மோ**
**ஏஷாம் கிஞ்சனாம மத்**

*மக்களைப் பயத்தினால் இங்கும் அங்கும் ஓட்டி அலைக்கழிப்பவரே, மறைப்புக்கும் சாவுக்கும் அதிபதியான (மன்யுவே) நீ இந்த மக்கள் பசுக்கள் பற்றி கவலை கொள்ள வேண்டாம். அவர்களைப் பீடிக்காதே. அவர்கள் வாழ்வை எதுவும் அழிக்க வேண்டாம்*

**10.2. யாதேருத்ர சிவா தனூ: சிவா விஸ்வாஹபேஷஜீ**
**சிவாருத்ரஸ்ய பேஷஜீ தயாநோ மிருட ஜீவஸே**

*ருத்ரனே எது உன்னுடைய மங்களமான ரூபமோ எங்கும் எப்பொழுதும் காக்கும் தன்மையுடையதோ, அந்த*

*மங்களமான ரக்ஷிக்கும் தன்மையால் எங்கள் வாழ்க்கையை மகிழ்ச்சிகரமாக ஆக்குவாயாக.*

**10.3. இமாகும் ருத்ராய தவஸேகபர்தினே க்ஷயத்வீராய பிரபராமஹே மதிம்**
**யதா ந: சமஸத்த்விபதே சதுஷ்பதே விஸ்வம் புஷ்டம்க்ராமே அஸ்மின்னனாதுரம்**

*மக்களை ஆளும், சடையுடன் கூடிய ருத்ரனுக்கு எங்கள் ஸ்துதியை இவ்வாறு சமர்ப்பிக்கிறோம். இந்த கிராமத்தில் இரண்டு கால், நாலு கால் ஜீவர்களுக்கு நன்கு அமைந்த, துன்பத்திலிருந்து விடுபட்ட, மங்களச் செல்வம் என்றும் அமைவதாக.*

**10.4. மிருடா நோருத்ரோதனோ மயஸ்கிருதி க்ஷயத்வீராய நமஸா விதேம தே**
**யச்சம் ச யோஸ்ச மனுராயஜே பிதா ததஸ்யாம தவருத்ர பிரணீ தெள**

*தாய் போல் எங்களிடம் அன்புடைய ருத்ரனே, மேலும் எங்களுக்கு இந்த உலகில் மகிழ்ச்சியை அருள்வாயாக. மக்களை ஆளும் ருத்ரனை சரணம் என்று துதிக்கிறோம். எந்த மகிழ்ச்சியையும், சௌக்யத்தையும் மனித குலத்தின் தந்தையான மனு உன்னைத் துதித்துப் பெற்றாரோ, ருத்ரனே அதை அடைய நாங்கள் உன்னுடைய வழிகாட்டுதலை அடைவோமாக.*

**10.5. மாநோ மஹாந்த முத மானோ அர்பகம் மாந உக்ஷந்த முதமான உக்ஷிதம்**
**மாநோ வதீ: பிதரம் மோத மாதரம் பிரியா மானஸ்தனுவோ ருத்ரரீரிஷ:**

*எங்கள் பெரியோர்களையோ மேலும் எங்கள் சிறியோர்களையோ, இளமையும், வீர்யமும் உள்ளவர் களை, மேலும் கர்ப்பத்தில் உள்ளவர்களை வதைக்க வேண்டாம். எங்கள் தந்தை மேலும் தாய், பிரியமான மனைவி மக்களை வதைக்க வேண்டாம்.*

**10.6. மாநஸ் தோகே தநயே மாந ஆயுஷி மா நோ கோஷு மாநோ அஸ்வேஷு ரீரிஷ:**
**வீரான் மானோ ருத்ர பாமிதோ வதீர்ஹவிஷ்மன் தோ நமஸாவிதேம தே**

எங்கள் புத்ரர்களையோ, பௌத்ரர்களையோ துன்புறுத்த வேண்டாம். எங்கள் ஆயுளை அழிக்க வேண்டாம். எங்கள் பசுக்கள் (அ) அறிவுகளையோ, எங்கள் குதிரைகள் (அ) சக்திகளையோ துன்புறுத்த வேண்டாம். ருத்ரனே எங்கள் வீரர்களை கோபம் கொண்டு அழிக்க வேண்டாம். படையல்களுடனும் நமஸ்காரங்களுடனும் உன்னைத் துதிக்கிறோம்.

**10.7. ஆராத்தே கோக்ன உதபூருஷக்னே க்ஷயத்வீராய**
**சும்னமஸ்மே தே அஸ்து**
**ரக்ஷாச நோ அதிச தேவ ப்ரூஹ் யதா ந:**
**சர்ம யச்சத்விபர்ஹா:**

பசுக்களை(அறிவை)க் கொல்வது, மேலும் வீரர்களைக் கொல்வது என்ற உன் நோக்கம் எங்களிடமிருந்து வெகு தொலைவில் இருக்கட்டும். தேவனே, உன்னுடைய அருள் எங்களிடம் இருக்கட்டும். ரக்ஷணத்திற்காக எங்களுக்காக நீ பரிந்து பேசு. அதனால் இரு உலகங்களிலும் எங்களுக்கு இன்பத்தையும், ரக்ஷையும் அருள்வாயாக.

**10.8. ஸ்துஹிஸ்ருதம் கர்தசதம் யுவானம்**
**மிருகன்ன பீமமுப ஹத்னு முக்ரம்**
**ம்ருடா ஜரித்ரே ருத்ரஸ்தவானோ அன்யன்தே**
**அஸ்மன்னிவபந்து சேனா:**

அனைவரும் அறிந்துள்ளவன், ஹ்ருதயத்தில் அமர்ந்துள்ளவன், இளையோன், சிம்ஹம் போன்றவன், எதிரிகளை அழிப்பவன், உக்ரமானவன் ஆகிய இவரை துதிப்பாயாக ருத்ரனே, துதிப்பவர்க்கு தாய் போன்ற கருணை காட்டுபவனே, இம்மாதிரி துதிக்கப்பட்ட உன் சேனைகள் எங்களை விடுத்து எதிரிகளை அழிப்பதாக. (எதிரிகள் - தீய சக்திகள், எண்ணங்கள்)

**10.9 பரிணோருத்ரஸ்ய ஹேதிர் விருணக்து பரித்வேஷ**
**ஸ்யதுர்மதி ரகாயோ:**
**அவஸ்திராமகவத்ப்யஸ்தனுவ மீட்வஸ் தோகாய**
**தனயாய மிருடய**

பயத்தை உண்டாக்கும் ருத்ரனுடைய ஆயுதங்கள், கெட்ட மனநிலைகளை உண்டாக்கும், அழிக்கும் எண்ணத்துடன் உள்ள ஆயுதங்கள் எங்களை விட்டு

விலகிச் செல்லட்டும். இந்த பூமி இன்பம் தரும் செல்வங்களால் சூழப்பட்டு, வள்ளல் பெருமானே, எங்கள் புத்ரன், பௌத்ரர்களை சந்தோஷப்படுத்தட்டும்.

**10.10. மீடுஷ்டம சிவதம சிவோ ந: சுமனா பவ**
**பரமே விருக்ஷ ஆயுதந்நிதாய கிருத்திம்வசான**
**ஆசர பினாகம் பிப்ரதாகஹி**

*கொடுப்பவர்களில் சிறந்தவனே, சிறந்த மங்கள மானவனே, மங்களமே, எங்களிடம் நல்ல மனதுடைய வனாக இருப்பாயாக. உன்னுடைய விருத்திகளான ஆயுதங்களை சம்சார விருக்ஷத்தில் தூரமாக வைத்து விட்டு, தோல் உடுத்தி (அ–து) மனித ரூபமோ, தேவரூபமோ தரித்து (கண்ணுக்குத் தெரியுமாறு) துன்பம் இல்லா ஞானம் என்னும் தண்டத்தைத் தரித்து ஆசார்யனாக வழி நடத்த இங்கு வருவாயாக.*

*(கிருத்திம்வசான, பினாகம் (புராணத்தில் கூறப்படும் வில் அல்ல), ஆசர என்ற வார்த்தைகளை ஊன்றிக் கவனிக்கவும்)*

**10.11. விகிரித விலோஹித நமஸ்தே அஸ்து பகவ:**
**யாஸ்தே சஹஸ்ரகும் ஹேதாயோன்ய மஸ்மன்னிவபந்து தா:**

*ஞானத்தைக் கொடுப்பவனே, சத்வகுணமுடை யோனே, பகவானே, உனக்கு எங்கள் சரணாகதி இருக்கட்டும். அந்த ஆயிரக்கணக்கான ஆயுதங்கள் எங்களிடமிருந்து விலகிச் செல்லட்டும்.*

**10.12. சஸ்ராணி சஹஸ்ரதா பாஹுவோஸ்தவ ஹேதய:**
**தாசாமீசானோ பகவ: பராசீனா முகா கிருதி.**

*ஆயிரம், ஆயிரமான பலவிதமான ஆயுதங்கள் உன் கையில். வித்யைகளுக்கு அதிபதியே அவற்றை எல்லாம் எங்களிடமிருந்து வேறு நோக்குள்ளவையாகச் செய்வா யாக.*

## அனுவாகம் 11

*10ஆவது அனுவாகத்தின் கடைசியில் ஆயுதங்களை தூரே வைத்துவிட்டு தன் முன்னே ஆசார்யனாக வரவேண்டும் என்று ரிஷி பிரார்த்திக்கிறார். ருத்ரன் ஆசார்யனாக வந்து அருள் செய்தபின் ஜீவாத்மா ஞானத்தை அடைகிறான். தைத்ரியோபநிஷத் சீக்ஷா*

வல்லியில் கூறிய "அஹமஸ்மி பிரதமஜா ருதஸ்ய ... விஸ்வம் புவனமப்யபவாம்" என்ற ஞான நிலையை அடைகிறான்.

ஞானமடைந்த ஜீவாத்மாக்கள் இப்பொழுது மன்யுவை ருத்ர பிரம்மனாகவே காண்கின்றனர். மேலும் மன்யுவின் செயல்களை தூரமாக வைக்கவும் சக்தியுள்ளவர்களாக இருக்கின்றனர். மன்யுவிற்கு அசுர வழியில் செல்லும் ஜீவர்களை சுட்டிக் காட்டி, ஞானத்திற்கு எதிரிகளான இவர்களை உன் ஆஹாரமாக அளிக்கிறேன் என்று மன்யுவைப் பிரார்த்திக்கின்றனர்.

**11.1 சஹஸ்ராணி சஹஸ்ரசோ யே ருத்ரா அதிபூம்யாம்**
**தேஷாகும் சஹஸ்ர யோஜனேவ தன்வானி தன்மசி**

ஆயிரம், ஆயிரக்கணக்கான பலவிதமான ருத்ரர்கள் பூமியை ஆட்சி செலுத்துகின்றனர். அவர்கள் வில்களை (உலகங்களை) ஆயிரம் யோஜனைக்கப்பால் வைக்கிறோம்.

**11.2. அஸ்மின் மஹத்யர்ணவே ன்தரிக்ஷே பவா அதி**

இந்த பரந்த அந்தரிக்ஷம் என்ற சமுத்திரத்தில் ஆட்சி புரிபவர்கள்.

**11.3. நீலக்கிரீவா: சிதிகண்டா: சர்வா அத: க்ஷமா சரா:**

கறுத்த கழுத்துடையவர்கள் (மன்யு) வெளுத்த கழுத்துடையவர்கள் (ருத்ரன்) ஆகிய அழிக்கும் தன்மை பொருந்தி (அந்தரிக்ஷத்தின்) உள்ளே சஞ்சரிப்பவர்கள்.

**11.4 நீலக்ரீவா: சிதிகண்டா: திவகும் ருத்ரா உபாஸ்ரிதா:**

கறுத்த கழுத்துடையவர்கள் (மன்யு) வெளுத்த கழுத்துடையவர்கள் (ருத்ரன்) வானுலகத்தை அடைந்துள்ளவர்கள்.

**11.5 யே விருக்ஷேஷு சஸ்பிஞ்சரா நீலக்ரீவா விலோஹி தா:**

எவர்கள் சம்சார விருக்ஷங்களில் சிவந்த கழுத்துடையவர்கள் (ருத்ரன்), கறுத்த கழுத்துடையவர்கள் (மன்யு) தூமமார்க்கத்தை ஆட்சிபுரிபவர்களோ (மறுபிறவியை உண்டுபண்ணும் வழி).

**11.6. யே பூதானா மதிபதயோ விசிகாச: கபர்தின:**

பூதங்களின் அதிபதிகளான, மயிரில்லா தலையை உடையவர்கள் (ஆகாசம், வாயு), சடைமுடியுடன் கூடிய

*தலையுடையவர்கள் (அக்னி-ஜ்வாலை; தண்ணீர் நுரை, பூமி-புற்கள், செடிகள்)*

**11.7 யே அன்னேஷு விவித்யன் தி பாத்ரேஷு பிபதோ ஜனான்**

*எவர்கள் அன்னங்களிலும், பாத்ரங்களின் மூலம் குடிப்பவைகளாகிய பானங்களிலும் பலவிதமாகத் தோன்றுகின்றனர்.*

**11.8. யே பதாம் பதிரக்ஷய ஐலபிருதா யவ்யுத:**

*செல்லும் வழிகளான தேவயானம், பித்ருயானம் என்பவற்றை பலவிதமான போக்யங்களை (இவ்வுலக இன்பங்கள்) காட்டி வழி மறிப்பவர்கள், போரிட விருப்பம் உள்ளவர்கள்.*

**11.9. யே தீர்த்தானி பிரசரந்தி சிருகாவந்தோ நிஷங்கிண:**

*காலம் என்ற நதியைக் கடக்க அதை அடையும் வழிகளில் கத்தி, வில் அம்புகளுடன் அலைந்து திரிபவர்கள்.*

**11.10. ய ஏதாவந்தஸ்ச பூயாகும் சஸ்ச தி சோ ருத்ரா விதஸ்திரே தேஷாகும் சஹஸ்ர யோஜனேவ தன்வானி தன்மசி**

*மேலே சொன்ன மாதிரியானவர்களும், மற்றும் மேலும் பலவித கணக்கற்ற ருத்ரர்கள் எல்லா திசைகளிலும் வசிப்பவர்கள். இவர்கள் அனைவரின் விற்களையும் நாணைக் கழற்றி ஆயிரக்கணக்கான யோஜனைகளுக்கு அப்பால் வைக்கிறோம்.*

**11.11 நமோ ருத்ரேப்யோ யே பிருதிவ்யாம் யே அந்தரிக்ஷே யேதிவி யேஷாமன்னம் வாதோ வர்ஷமிஷவ: தேப்யோ தசபிராசீர் தச தக்ஷிணா தச பிரதீசிர் தசோதீசீர் தசோர்த்வாஸ் தேப்யோ நமஸ்தே நோ மிருடயந்து தேயம் திவிஷ்மோ யஸ்ச நோத்வேஷ்டி தம்வோ ஜம்பே ததாமி.**

*பூமியிலுள்ள, அந்தரிக்ஷத்திலுள்ள, வானத்திலுள்ள ருத்ரர்கள் அனைவருக்கு நமஸ்காரம் (சரணாகதி). எவர்களுடைய அம்புகள் அன்னம், காற்று, மழை ரூபங்களில் உள்ளனவோ அவர்களுக்கு பத்து தடவை (பலமுறை) கிழக்கில் உள்ளவர்களுக்கு, பத்து தடவை தெற்கில் உள்ளவர்களுக்கு, பத்து தடவை மேற்கில் உள்ளவர்களுக்கு பத்து தடவை வடக்கில் உள்ளவர்களுக்கு*

பத்து தடவை மேலே உள்ளவர்களுக்கு நமஸ்காரங்கள் (சரணாகதி). எங்களை அவர்கள் மகிழ்வுடன் இருக்க அனுமதிக்கட்டும். எவரையாயினும் (தீயது) நாங்கள் வெறுக்கிறோமோ, எவன் எங்களை வெறுக்கிறானோ; நான் அவ்னை உங்கள் திறந்த வாயில். (ஆஹாரமாக) கொடுக்கிறேன்.

**ஓம் தத்சத் பிரஹ்மார்ப்பணமஸ்து.**



# புருஷ சூக்தம்

ரிக் 1 – 4

சஹஸ்ர சீர்ஷா புருஷ: சஹஸ்ராக்ஷ: சஹஸ்ரபாத்; ச பூமிம் விஸ்வதோ விருத்வா; அத்யதிஷ்டத் த சாங்குலம், புருஷ ஏவேதகும் சர்வம் யத் பூதம் யச்ச பவ்யம். உதாமிருத த் வஸ்யேசான:, யதன்னேனாதி ரோஹதி, ஏதாவானஸ்ய மஹிமா, அதோ ஜ்யாயாம்ஸ்ச பூருஷ: பாதோஸ்ய விஸ் வா பூதானி; திரிபாதஸ்யாமிருதம் திவி; திரி பாதூர்த்வ உதைத் புருஷ: பாதோஸ்யேஹபவாத்புன: ததோ விஸ்வம் வ்யக்ராமத் சாசனாசனே அபி

*ஆயிரம் தலைகள் உள்ளவர் புருஷன், ஆயிரம் கண்கள், ஆயிரம் பாதம். அவர் பூமியை எங்கு சூழ்ந்து பத்து அங்கணம் (அந்தரிக்ஷத்தில்) மேலேயும் நின்றார். புருஷனே இவை எல்லாம், எது உண்டானதோ, எது உண்டாகப் போகிறதோ. மேலும் அம்ருதத்தை ஆள்பவன். எது அன்னத்தால் வளர்கிறது. இவ்வாறு இவனுடைய புகழ். இவை அனைத்துக்கும் மேலும் புருஷன். எல்லா சிருஷ்டியும் இவனுடைய பாகம். மூன்று பாதங்களின் மேல் இருப்பவர் புருஷன். இவருடைய பாகம் (சிருஷ்டி) மறுபடி உண்டாயிற்று. அப்பொழுது அவர் அன்னத்தை உண்பவை களையும், உண்ணாதவற்றையும் அனைத்தையும் வியாபித்தார்.*

*1) இது புருஷ சூக்தத்தின் சுருக்கமான கருத்து அனைத்தையும் அடக்கியுள்ளது.*

*2) ஒவ்வொரு பாதமும் வானம், அந்தரிக்ஷம், பூமி என்று மூன்று பகுதிகளாக பின்னால் விவரித்திருப்பது இங்கு சுருக்கமாகக் கூறப்பட்டது.*

*3) மூன்று பாதங்களுக்கு மேல் புருஷன் இருப்பது பரமபதம்.*

*4) சிருஷ்டி ருதுக்கள் போன்று தோன்றி மறையும் தன்மையுடையவை. அப்படிப் பட்டதில் ஒரு சிருஷ்டிக் கிரமம் பின் விவரிக்கப்படுகிறது.*

*5) எல்லாக் காலங்களிலும், எல்லா உயிர்களிலும், ஜடப்பொருள்களிலும் சர்வமும் புருஷனே.*

**ரிக் 5**

**தஸ்மாத் விராட ஜாயத விராஜோ அதிபூருஷ:**
**சஜாதோ அத்யரிச்யத பஸ்சாத் பூமி மதோ புர:**

*புருஷனிடமிருந்து விராட் தோன்றியது.*

*விராஜன் சிருஷ்டியை உண்டாக்கும் பரமபுருஷன். அவர் தோன்றி பெருகி வளர்ந்தார். பின் பூமி, அதன்பின் சரீரம்.*

*1. எல்லாவற்றுக்கும் மேலான நிலையில் புருஷன் நிர்க்குணப் பிரம்ம நிலையே. சிருஷ்டியின் பாகமான நாம் இதை அறியவே முடியாது. புராண தத்துவத்தில் இது பரசிவம் எனப்படுகிறது.*

*2. நிர்க்குணப் பிரம்மத்தில் சகுணப்பிரம்மம் கலந்து நின்று, அதன் சங்கல்பத்திலேயே நான் என்று தோன்று கிறது. இதுவே அதிபுருஷன் என்ற விராட். இது நான் என்று அறியும் சச்சிதாநந்த ஸ்வரூபம் புராண தத்துவத்தில் இது லிங்கம் (அ) அர்த்தநாரீஸ்வர ஸ்வரூபமாக சொல்லப் படுகிறது.*

*3. சகுணப் பிரம்மம் விரிந்து பெருகி அதன் பின்னரே சிருஷ்டி தொடங்குகிறது. வேத மொழியில் இந்த நிலை பரமபதம், அதிநாகம். சவிதா, அதிதி சிருஷ்டி கர்த்தாக் களாக அறியப்படுகின்றனர். புராண தத்துவத்தில் இது சோமாஸ்கந்த பரமேஸ்வர ஸ்வரூபம். சத், சித், ஆனந்தம் வேறுபட்டு, ஆனால் இணைந்து காணப்படுகிறது.*

*4. நிர்க்குணப் பிரம்மமே சகலத்துக்கும் ஆதாரமாக இருந்தபோதிலும், அதனிலிருந்து நான் என்று அறியும் நிலைகள் தோன்றிய பின்னரே சிருஷ்டி ஆரம்பிக்க இயலும்.*

*5. பரமபத நிலையிலிருந்து லோக சிருஷ்டி கல்பிக்கப் படுகிறது. ஔபாசனம் என்ற சிறந்த கர்மாவில் சிருஷ்டி சவிதாவினால் அதிதி (கிரியாசக்தி), அனுமதி (இச்சாசக்தி), சரஸ்வதி (ஞானச் சக்திகளுடன்) கல்பிக்கப்படுகின்றதை காணலாம்.*

**ரிக் 6:**

யத்புருஷேண ஹவிஷா தேவா யக்ஞமதன்வத
வசந்தோ அஸ்யாசீதாஜ்யம் கிரீஷ்ம இத்ம: சரத் ஹவி:

*எந்த புருஷன் என்ற ஹவியால் தேவர்கள் யக்ஞம் அனுஷ்டித்தனர். வசந்தம் அல்லது தோற்றம். இதற்கு ஆஜ்யம் (அ) நெய். கிரீஷ்மம் அல்லது எரித்தல் (அ) அழித்தல். இதற்கு சராய். சரத் (அ) அன்னம் ஹவி:*

*1. இந்த யக்ஞம் புருஷனின், சங்கல்பரூபமானது இதில் ஸ்தூல சிருஷ்டியான பொருட்களோ, ருதுக்களோ கிடையாது.*

*2. அதிபுருஷனின் சக்திகளே தேவர்கள். அதிபுருஷனே ஹவிஸ். இது எவ்வாறு எனில் ஒரு மரத்தின் விதைக்குள் உள்ள சக்திகள் அதன் தேவர்கள். விதையே ஹவிஸ். யக்ஞம் மர வளர்ச்சி. அதுபோல்.*

*3. வசந்தம், கிரீஷ்மம், சரத் என்பது ருதுக்களின் பெயரானாலும் இங்கு அவை சிருஷ்டி, லயம், ஸ்திதி என்ற புருஷனின் சங்கல்ப ரூபமான மூன்று செயல்களைக் குறிக்கின்றன.*

**ரிக் 7, 8**

சப்தாஸ்யாசன் பரிதய: திரிஸ்ஸப்தஸமித:
கிருதா: தேவா யத்யக்ஞம் தன்வானா: அபத்னன்
புருஷம் பசும், தம் யக்ஞம் பர்ஹிஷி ப்ரௌ க்ஷன்
புருஷம் ஜாதமக்ரத: தேன தேவா அயஜன் த சாத்யா
ரிஷயஸ்சயே

*நாற்புறமும் வேலியாக அமைக்கப்பட்ட யக்ஞ குண்டங்கள் ஏழு இருந்தன. மூன்று ஏழு (அதாவது) 21 சமித்துகள் செய்யப்பட்டன. தேவர்கள் எந்த யக்ஞத்தை செய்தார்களோ அதில் புருஷனை பசுவாகக் கட்டினர். அந்த யக்ஞமாகிய புருஷனை தர்ப்பைகளால் புனிதநீர் தெளித்தனர். அதனால் (புருஷனால்) தேவர்கள், சாத்யர்கள், ரிஷிகள் யக்ஞமியற்றினர்.*

1. பரமபதநிலையிலிருந்து ஏழுவிதமான உலகங்கள் சிருஷ்டிக்கப்படுகின்றன. இவையே ஏழு பரிதிகள் அல்லது வேலிகள் என்று கூறப்படுகின்றன.

இந்த ஏழு உலகங்களாவன:

1. பிரஹ்மலோகம் - இது மூன்றாவது பதத்தின் சுவர்க்கலோகம். இதில் புருஷன் சதாசிவன், ஈஸ்வரன், ருத்ரன், விஷ்ணு, பிரஹ்மா என்ற அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல் என்ற சக்திகளோடு உள்ளார். இந்த லோகமும் காலவரைக்குட்பட்டதே. (நோக்குக பகவத்கீதை ஆப்ரஹ்ம புவனாலோகா: புனராவர்த்தினோ அர்ஜுன)

2. தபோ லோகம் - இது மூன்றாவது பதத்தின் புவர்லோகம். இந்த லோகத்தில் பிரஜாபதிகள் சிருஷ்டியைக் குறித்து சங்கல்ப ரூபமாக தவமியற்றி சிருஷ்டித் தத்துவங்களை அமைக்கின்றனர்.

3. ஜனோ லோகம் - இது மூன்றாவது பதத்தின் பூலோகம். பிருஹஸ்பதி தலைமையில் இந்திரியங்களுடன் கூடிய அந்தக்கரண சிருஷ்டி கல்பிக்கப்படுகிறது.

4. மஹர் லோகம் - இது இரண்டாவது, முதல் பதங்களின் பூலோகங்கள், புவர் லோகங்கள், சுவர் லோகங்கள் மூன்றும் சேர்ந்த உலகம். இதை இந்த்ரன் தலைமையில் தேவர்கள் ஆள்கின்றனர்

5. சுவர்லோகம் - இது இரண்டாவது, முதல் பதங்களின் சுவர்லோகங்கள் இது புத்தி, மனஸ் ஆகியவற்றின் உலகங்கள்.

6. புவர் லோகம் - இது இரண்டாவது, முதல் பதங்களின் புவர்லோகங்கள். இவை செயல் உலகங்கள்.

7. பூலோகம் - இது இரண்டாவது, முதல் பதங்களின் பூலோகங்கள். இவை ஸ்தூல உலகங்கள்.

மனிதர்கள் பதம் 1. பூலோகத்தில் உள்ளனர். அவர்களுக்கு பொதுவாக பதம் 1 பூ, புவ:, சுவ: (அ-து) சரீரம், செயல், மனம் இவற்றில் வரையறுக்கப்பட்ட அனுபவம் உள்ளது. மனிதர்களில் சிலருக்கு பதம் 2ல் உள்ள லோகங்களின் அனுபவமும் கிடைக்கிறது. இவர்கள்

விஞ்ஞானிகள், சாஸ்திரிகள், கலைஞர்கள் முதலானோர் ஆவர்.

பக்குவம் அடைந்த மனிதர் சிலருக்கு பதம் 3ல் உள்ள தேவர்கள் அருளால், மெய்ஞானம், பக்தி அனுபவம் (சாஸ்திர அறிவோ லோக அறிவோ இல்லாவிடினும்) கிடைக்கிறது.

2. திரிஸ்ஸப்த சமித: இந்த ஏழு உலகங்களிலும் மூன்று சமித்துகள் செய்யப்பட்டன. அவையாவன: சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள்.

3. ரிக் 6, 7, 8ல் புருஷன் மூன்று விதமாகக் கூறப் படுகிறார்.

ரிக் 6 - புருஷேணஹவிஷா ஹவிஸ் - இது ஸ்தூல சிருஷ்டியை - குறிக்கிறது

ரிக் 7 - புருஷம்பசும் - பசு - இது இந்திரிய சிருஷ்டியைக் குறிக்கிறது.

ரிக் 8 - தேன (அ-து) அவனால் (புருஷனால்) யக்ஞத்தை இயற்றினர் மனம் - இது அந்தக்கரண சிருஷ்டியைக் குறிக்கிறது. (அ-து) சித்தம், அஹங்காரம், புத்தி மனஸ்.

**ரிக் 9**

தஸ்மாத் யக்ஞாத் சர்வ ஹுத: சம்பிருதம்
பிருஷதாஜ்யம். பசூம் ஸ்தாகுஸ்சக்ரே வாயவ்யான்
ஆரண்யான் கிராம்யாஸ்சயே.

சர்வமும் சமர்ப்பிக்கப்பட்ட அந்த யக்ஞத்திலிருந்து, அனைத்துக்கும் ஆதாரமான விதைக்குளம் சேகரிக்கப் பட்டது. காற்றிலும், காட்டிலும், கிராமத்திலும் வாழும் மிருகங்கள் சிருஷ்டிக்கப்பட்டன.

1) இதில் முக்யமான பதம் "சர்வஹுத:" என்பது. இதன் பொருள் என்னவென்றால் விராட் புருஷனின் சரீரம், செயல், அந்தக்கரணம் என்ற சங்கல்பரூபமானவை முழுதும் யக்ஞத்தில் பயன்படுத்தப்பட்டு அதனால் உலகங்கள் சிருஷ்டி இவற்றின் பலவிதமான சேர்க்கையால் உண்டாக்கப்பட்டது. ஆகவே யக்ஞத்தின் முடிவில் உலக

சிருஷ்டியைக் கண்டால் விராட் புருஷனைக் காண இயலாது.

இதை அறிந்து கொள்ள ஓர் உவமையாக, பிரபஞ்சம் எங்கும் ஊடுருவி நிற்கும் சக்தியே, ஸ்தூலமான பொருட்கள், எல்லா செயல்களின் ஆதாரம் என்று ஐன்ஸ்டைன் என்ற விஞ்ஞானி கண்டு அறிந்தார். ஆகவே சக்தியைக் கண்டால் சிருஷ்டியில்லை. சிருஷ்டியைக் கண்டால் சக்தியில்லை. இதுவே இன்னும் உயர்நிலையிலிருந்து வேதம் அறிவையும் இணைத்துக் கூறுகிறது.

*2) "பிருஷதாஜ்யம்" விஞ்ஞான பாஷையில் இது "ஜீன் பூல்" அல்லது விதைக்குளம் - எல்லா அசையும் அசையாப் பொருள்களின் ஆதாரம் எனக் கூறலாம்.*

*3) ஆகாயம், பூமி இவற்றில் உள்ள எல்லா பசுக்களையும், காடு, கிராமம் என்ற சொல்லால் சமூஹங்களையும் குறிக்கப்படுகிறது. இதில் நீர்வாழ் பிராணிகளைத் தனியே கூறாவிடினும், நீர் தரையையோ, வானத்தையோ சார்ந்துதான் இருப்பதால் அவற்றையும் குறிப்பிட்டதாகவே கொள்ளலாம். இந்த சிருஷ்டி ஆறறிவு சிருஷ்டி அல்ல.*

## ரிக் 10, 11

> தஸ்மாத் யக்ஞாத் சர்வஹுத: ரிச:, சாமானி ஜக்ஜிரே. சந்தாகும்சி ஜக்ஜிரேதஸ்மாத், யஜுஸ் தஸ்மாத ஜாயத. தஸ்மாதஸ்வா அஜாயந்த, யேகே சோபயாதத: காவோ ஹ ஜக்ஜிரே தஸ்மாத்; தஸ்மாத்ஜாதா அஜாவய:

*சர்வமும் சமர்ப்பிக்கப்பட்ட அந்த யக்ஞத்திலிருந்து ரிக் சாமன்களை அடைந்தனர். சந்தங்களை அதிலிருந்து அடைந்தனர். யஜுஸ் அதிலிருந்து உண்டானது. அதிலிருந்து சக்திகள் (அஸ்வங்கள்) உண்டாயின. எவை இருவிதமாக செயல்படுபவை.*

*அறிவுகள் (ஞானம்) அதிலிருந்து அடைந்தனர். அதிலிருந்து பிறவாப் புருஷனை அறிவாக அடைந்தவர்கள் உண்டாயினர்.*

1. அசையாப் பொருள்கள், ஆறாவது அறிவாகிய அஹங்காரம் (அ) நான் என்ற அறிவு இல்லாத உயிர்களையும் படைத்தபின், பலவித அறிவுகளுக்கு அடித்தளமான வேதங்கள் படைக்கப்பட்டன.

2. ஆறறிவு படைத்த உயிர்கள் (அ-து) மனிதர்கள், தேவர்கள் முதலோர் படைக்க அடித்தளம் அமைத்தபின், அடுத்த தேவை இவ்வுயிர்கள் செயல்புரிய சக்தி. அஸ்வம் சக்தியைக் குறிக்கிறது. "உபயாத த:" என்ற சொல் இருவிதமாக பிடித்துக் கொண்டிருப்பதைக் குறிக்கிறது. இது இருவிதமான சக்திகள் (அ-து) கிரியாசக்தி - நாம ரூபங்களை உண்டாக்கும் சக்தி, இச்சாசக்தி - ஆசை என்னும் நாம ரூபங்களின் ஒரே பொருளை மறைக்கும் சக்தி. இந்த இரண்டு சக்திகளும்தான் ஆறறிவு உள்ள உயிர்களை சிருஷ்டியில், தான் ஒரு தனி வியக்தி என்ற அறிவோடு செயல்பட வைப்பவை. இம்மாதிரி பலவித மாகச் செயல்படுவதற்கு அறிவு தேவை. இதுவே "காவ:" என்ற பதத்தின் மூலம் குறிப்பிடப்படுகிறது. "காவ:" என்றால் பலவிதமான லோகங்களில் வாழவேண்டுதற்கு பலவிதமான அறிவுகள் என்று பொருள். இதன் பின்னர் பிறப்பு இல்லாத ஆத்மாக்கள் வெவ்வேறு விதமான கூட்டங்களாக லோகங்களில் உண்டாயினர். (அஜா+ஆவய:) இவர்கள் இச்சாசக்தியால் தூண்டப்பட்ட மாயையால் பிறப்பு என்ற எண்ணத்தை அடைகின்றனர்.

மேற்கூறிய கருத்துகள் மிகவும் பொருத்தமானவை என்பதற்கு கீழ்வரும் காரணங்கள் நோக்குக.

1) ரிக் 9ல் எல்லா பசுக்களையும் பொதுவாகச் சொல்லியாகி விட்டது. திரும்பவும் குதிரை, பசு, ஆடு என்று பொருள் ஆயின் அவை வீணே திரும்பச் சொல்லப் படுகின்றன. ரிஷிகள் வார்த்தைகளை அளந்து உபயோகிப் பவர்கள் ஆதலால் இது சரியாக இருக்கமுடியாது.

2) பிறவா ஆத்மாக்கள் எப்படி பிறக்க முடியும் என்று கேள்வி எழுந்தால், இந்த பிறவி மாயையில் தோன்றுவது. உத்தர நாராயணத்தில் வரும், "அஜாயமானோ பஹுதா விஜாயதே" - பிறப்பில்லாதவர் பலவிதமாக பிறக்கிறார் என்பதை கவனிக்கவும்.

3) வேதங்களின் தோற்றத்தைப் பற்றி பேசிய பின்னர் அது அறுதியிட்டு கூறும் சிருஷ்டியின் தத்துவங்களாகிய, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்திகளையும் அதன் மூலம் செயல்படும் ஆற்றிவுடைய உயிர்களைப் பற்றிப் பேசுவதுமே சரியாக இருக்கமுடியும்.

ரிக் 12

யத் புருஷம் வ்யததுः கதிதாவ்யகல்பயன்
முகம்கி மஸ்ய கௌ பாஹூ காவூருபாதா உச்யேதே

எந்த புருஷனை பலவிதமாகத் தாங்கினர் எவ்வாறு பலவிதமாக சங்கற்பித்தனர். இவருடைய முகம் எது, எது கை, எது தொடை, பாதம் என்று சொல்லப்படுகிறது.

1. புருஷனை மூன்று விதமாகத் தாங்கினர். அதாவது ரூபம், செயல், அந்தக்கரணம் என்று-

2. ரூபத்தின் மூலமாகவே செயல், அந்தக்கரணங்கள் அறியப்படவேண்டியுள்ளதால் எவ்வாறு சரீரத்தின் பாகங்கள் இவற்றை வெளிப்படுத்துகின்றன என்பது கேள்வி.

3. மேலும் எல்லா உலகங்களும் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களால் சூழப்பட்டிருப்பதால் இந்த குணங்களுடன் கூடிய ரூபம் செயல் அந்தக்கரணங்களின் வேறுபாடுகளும் ஆதார நிலையில் வெளிப்படுவன.

4. தேவர்கள் சத்வ குணம் மிகுந்தவர்கள். மனிதர்கள் ரஜோகுணம் மிகுந்தவர்கள். உலகங்கள் தமோ குணம் மிகுந்தவை. ஆகவே இவை மூன்றையும் உதாரணமாக எடுத்துக் கொண்டு சூக்தம் புருஷனின் வெவ்வேறு தோற்றங்களை விவரிக்கின்றன.

5. இந்த ரிக் ஒரு சூக்ஷ்மமான கருத்தை வெளிப் படுத்துகிறது. மேலெழுந்த வாரியாக புருஷனின் மாறுபட்ட தோற்றங்கள் என்ன என்று விவரித்திருந்தால் அந்த மாறுபட்ட தோற்றங்களில் ஏற்றத்தாழ்வு இருக்கலாம். என்ற கூற்றுக்கு மறுப்பு கூற இயலாது. ஆனால், இங்கு புருஷனை சிருஷ்டிக்கு முன்னரே ஒரு சரீரமாக உருவகப்படுத்தி முகம், கைகள், துடை, பாதம் இவையே வேறுபட்ட தோற்றங்களாக கூறப்படுவதால், இவை

அனைத்தும், ஒரு சரீரத்தின் உறுப்புகள். அனைத்தும் சரீரம் நன்கு இயங்க எவ்வாறு அவசியமோ, அதே மாதிரி தோற்றங்களுள் அனைத்துக்கும் இணைந்து வாழும் அவசியம் சுட்டிக்காட்டப்படுகிறது.

*7. ரிக் 13, 14, 15, விவரிக்கப்படும் தோற்றங்களை ஒரு பட்டியலிட்டு இவ்வாறு காணலாம்.*

## சிருஷ்டி வேறுபாடுகள்

| | விராட்புருஷன் + சத்வ/ரஜஸ்/ தமஸ் | தேவர்கள் (சத்வம் மிகுந்தவர்) | மனிதர்கள் (ரஜஸ் மிகுந்தவர்) | உலகங்கள் (தமஸ் மிகுந்தவை) |
|---|---|---|---|---|
| 1. | மனஸ் + சத்வம் | சந்த்ரமா | | |
| 2. | சக்ஷுஸ் (கண்கள்) + சத்வம் | சூர்யன் | | |
| 3. | முகம் (வாய்) + சத்வம் | அக்னி இந்திரன் | பிராஹ்மணன் | |
| 4. | ஸ்ரோத்ரம் (காது) + சத்வம் | | | திசைகள் |
| 5. | சிரஸ் + சத்வம் | | | த்யௌ (சுவர்க்கம்) |
| 6. | பிராணன் + சத்வம் + ரஜஸ் | வாயு | | |
| 7. | பாஹு (கை) + சத்வம் + ரஜஸ் | | க்ஷத்ரியன் | |
| 8. | நாபி + ரஜஸ் | | | அந்தரிக்ஷம் |
| 9. | ஊரு (தொடை) + ரஜஸ் + தமஸ் | | வைஸ்யன் | |
| 10. | பாதம் + தமஸ் | | சூத்ரன் | பூமி |

**ரிக் 13:**

பிராஹ்மணோ அஸ்ய முகம் ஆசீத், பாஹு ராஜன்ய: கிருத:; ஊருத தஸ்ய வைஸ்ய: பத்ப் யாகும் சூத்ரோ அஜாயத.

*பிராஹ்மணன் இவர் முகமாக இருந்தார். கைகள் க்ஷத்ரியனாகச் செய்யப்பட்டது; அவருடைய தொடைகள் வைஸ்யன். பாதங்களில் இருந்து சூத்ரன் உண்டானான்.*

*1. இவர்கள் அனைவரும் விராட் புருஷனின் செயலின் தோற்றங்கள். இவை மட்டும்தான் விராட் புருஷனின் செயல் வேறுபாடுகள் அல்ல. உதாரணத்துக் காக இவை சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.*

**ரிக் 14**

சந்த்ரமா மனசோ ஜாத: சக்ஷோ: சூர்யோ
அஜயாத; முகாதிந்ரஸ்சா க்னிஸ்ச, பிராணாத்
வாயுரஜாயத.

*சந்த்ரன் மனசிலிருந்து உண்டானான். கண்களி லிருந்து சூர்யன் உண்டானான். வாயிலிருந்து இந்த்ரனும், அக்னியும், பிராணனிலிருந்து வாயு உண்டானான்.*

*1. விராட் புருஷனின் அந்தக்கரண பகுதிகள் தேவர்களாக ஆயின. மனிதர்களுக்கும், தேவர்களுக்கு முள்ள ஒரு முக்கியமான வேறுபாடு, தேவர்கள் அனைத்து மற்ற கீழ் சிருஷ்டிகளான மனிதர்கள், பசுக்கள் முதலிய வற்றின் மனம், இந்திரியங்கள், பிராணன் முதலிய அனைத்தையும் ஆள்கின்றனர். மனிதன் முதலிய சிருஷ்டிகள் அதனதன் சக்திகளை மட்டும்தான் இயக்க முடியும்.*

*2. இங்கு எல்லா தேவ சிருஷ்டியும் சொல்லப்பட வில்லை. சில முக்ய செயல்கள் மட்டும் குறிப்பிடப் பட்டுள்ளது.*

**ரிக் 15**

நாப்யா ஆசீதந்தரிக்ஷம் சீர்ஷ்ணோ த்யௌ:
சமவர்த்தத. பத்ப்யாம் பூமிர் திச: ஸ்ரோ த்ராத். ததா
லோகாகும் அகல்பயன்.

*நாபியினால் அந்தரிக்ஷம் இருந்தது. சிரஸ்ஸினால் வானம் (அ) சுவர்க்கம் நன்கு அமைந்தது. பாதங்களிலிருந்து பூமியும், காதிலிருந்து திசைகளும் அவ்வாறு லோகங்களை சங்கல்பித்தனர்.*

*விராட் புருஷனின் ரூப அல்லது சரீரம் பகுதி ஸ்தூல உலகங்களை சிருஷ்டி செய்ய சாத்யர்கள் உபயோகப் படுத்துகின்றனர்.*

**ரிக் 16**

**வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம். ஆதித்ய வர்ணம் தமஸ ஸ்துபாரே. சர்வாணி ரூபாணி விசித்ய தீர:. நாமாணி கிருத்வா அபிவதன்ய தாஸ்தே.**

*இந்த மஹாபுருஷனை நான் அறிவேன். சூர்ய ஒளி போன்றவனும் இருளுக்கு அப்பாற்பட்ட இடத்தில் எல்லா ரூபங்களையும் சிந்தித்து, நாமங்களை அளித்து, அதை சொல்லிக் கொண்டு எவர் இருக்கிறாரோ (அவரை அறிவேன்)*

*1. முன் கூறிய ரிக்குகளில் புருஷனின் மஹிமையை அறிந்தோம். மனிதன் மிக அல்பமான ஒரு சிருஷ்டி யாதலால் மனத்தே ஒரு கேள்வி எழுகிறது. இப்படியானால் மனிதன் புருஷனை அறிந்து கொள்வது என்பது இயலாத க்காரியம். ஆகவே நான் என் வாழ்க்கையை எப்படி அமைகிறதோ அப்படி வாழ்கிறேன். துன்பமும், இன்பமும் அனுபவித்து அறியாமையுடனே உயிர் நீக்கிறேன். இதுதான் சரி அல்லவா? அதற்கு பதில் மேலே*

*2. ரிஷி இந்த ரிக்கில் மிகுந்த நிச்சயத்துடன் இவ்வாறு கூறுகிறார்.*

*"நான் இந்த புருஷனை அறிவேன்"*

*பின்னர் வரும் ரிக்குகள் நாம் அடையும் வழி என்ன என்பதை விளக்குகின்றன*

*3. இந்த ரிக்கில் வரும் சொற்கள் மிகுந்த அர்த்த புஷ்டியுள்ளவை.*

*அ) "மஹாந்தம்" (ஏதாவானஸ்ய மஹிமா; அதோஜ்யாயக்ம்ஸ்ச பூருஷ:)*

*அறியக்கூடிய மஹிமைகள் அனைத்துக்கும் இன்னும் மேற்பட்டவன் என்ற சொல் சூக்த ஆரம்பத்தில் கூறிய புருஷனைக் குறிக்கிறது.*

*ஆ) ஆதித்ய வர்ணம் தமஸஸ்த்து பாரே-*

இது ஸ்தூல சூர்ய ஒளியும், இருட்டும் அல்ல. அக்ஞான இருளுக்கு அப்பாற்பட்ட ஞான ஒளி

இ) சர்வாணி ரூபாணி விசித்ய தீர: நாமானி

கிருத்வா அபிவதன் யதாஸ்தே

(i) சர்வாணி என்ற சொல் எல்லா ரூபங்களையும் குறிக்கிறது. பிரம்மாண்டங்கள் கோடிக்கணக்கில் உள்ளதால் இது எல்லா அண்டங்களையும் குறிக்கிறது.

(ii) யத் ஆஸ்தே - எதில் இருக்கிறாரோ இந்த புருஷன் எங்கே இருக்கிறார்? விராட்புருஷன் சரீரத்திலா? அல்ல. "புருஷ ஏவேதம் சர்வம்". ஆரம்பத்தினால் புருஷனே இவை அனைத்தும் என்று கூறியிருப்பதால் ஒவ்வொரு நாமரூபம் கொண்ட சரீரம்/பொருளில் இந்த புருஷன் இருந்தாக வேண்டும் என்ற நியாயத்தை முடிவாகக் கொள்ள வேண்டும். இது எவ்வாறு சாத்தியப்பட்டது?

விராட் புருஷனை யக்ஞ ஹவிஸாக தேவர்கள் கொண்ட போது விராட் புருஷனின் சரீரம், பிராணன், அந்தக்கரணம் (அ-து) சித்தம், அஹங்காரம், புத்தி, மனஸ் இவையே யக்ஞத்தில் ஹவிஸாக பயன்படுத்தப்பட்டன. விராட் புருஷனின் முக்கிய பாகமான, விராட் புருஷனின் இதயத்தில் குடிகொண்டுள்ள சாக்ஷியான "அஹம்" என்ற புருஷன் மாறுதலுக்குட்படாதவனாகையால், யக்ஞத்தி னால் பலவித நாம ரூபங்களாக விராட் புருஷன் மாறிய போது அனைத்து சிருஷ்டியிலும் புருஷன் "அஹம்" என்று அவற்றினுள் உள்ளான்.

உதாரணமாக பூமியைப் பொறுத்தவரை அதன் உணர்வில் அதனில் வாழும் அனைத்து சிருஷ்டியும் பூமியே. ஆனால், பூமியில் உள்ள மனிதன் தன்னை பூமியிலிருந்து வேறாக நினைக்கிறான். அதே மாதிரி நான் என்ற உணர்வு கொண்ட பிரம்மம் ஒன்றே. ஆனால், அதனுள் இயங்கும் மனிதன் "நான்" என்ற பிரம்மத்தை தன் சரீரத்தின் பகுதி என்று நினைக்கிறான்.

(iii) புருஷன் விராட் புருஷனிலிருந்து தொடங்கி சிருஷ்டியில் முழுமையிலும் அதன் பகுதிகளிலும் நான்கு செயல்கள் புரிகிறான்.

*(அ) விசித்ய : நினைவு கொள்ளல் – இது சமஷ்டியின் "சித்தம்" என்பதைக் குறிக்கிறது.*

*(ஆ) தீர: அறிஞன், புத்திமான் – இது "சமஷ்டியின்" புத்தி என்பதைக் குறிக்கிறது.*

*(இ) "நாமானி கிருத்வா அபிவதன்" – மொழிந்து கொண்டு – இது சமஷ்டியின் "மனஸ்" என்பதைக் குறிக்கிறது.*

*(ஈ) "யத் ஆஸ்தே" – எது இருக்கிறது*

*– இது "சமஷ்டி" நான் என்பதைக் குறிக்கிறது.*

**ரிக் 17**

தாதா புரஸ்தாத் யமுதா ஜஹார. சக்ர: ப்ரவித்வான் ப்ரதிசஸ்சதஸ்ர: தமேவம் வித்வான் அம்ருத இஹபவதி நான்ய: பந்தா அயனாய வித்யதே.

*அனைத்து சக்தியும் வாய்ந்த ஞானியான வழியைக் காட்டும் தாதா (பிரஹ்மா) நான்கு வேதங்களால் எவரை வெளிப்படுத்திக் காண்பித்தாரோ அவரை இவ்வாறு அறிந்தவன் இங்கேயே (இவ்வுலகிலேயே) இறவாத் தன்மை அடைகிறான். இந்த வீடு பேறைப் பெறுவதற்கு வேறு ஒரு வழியும் காணப்படவில்லை.*

*அ) பிரஹ்மா நான்கு வேதங்களையும் நான்கு திசைகளிலிருந்து அறிந்து அதை வெளிப்படுத்தி புருஷனைப் பற்றி அறிவிக்கிறார்.*

*ஆ) "சக்ர" என்னும் சொல் சாதாரணமாக இந்திரனைக் குறித்தாலும், இங்கு வீர்யவான் என்ற பொருளில் பிரஹ்மாவைக் குறிக்கிறது.*

*இ) "ஏவம்" என்ற சொல் எதைக் குறிக்கிறது. முன் கூறியவாறு எல்லா சிருஷ்டியிலும் புருஷன் வீற்றிருக்கிறான் என்று அறிவதைக் குறிக்கிறது.*

*ஈ) இவ்வாறு அறிபவன் கிரம முக்தி அல்லாது இவ்வுலகிலேயே இறவாத் தன்மை அடைந்து புருஷனுடன் லயிக்கிறான்.*

**ரிக் 18**

**யக்ஞேன யக்ஞம் அயஜந்த தேவா: தானி**
**தர்மாணி பிரதமான் யாசன். தே ஹ நாகம் மஹிமான:**
**சசந்தே. யத்ர பூர்வே சாத்யா: சந்திதேவா:**

*யக்ஞத்தினால் யக்ஞத்தை தேவர்கள் ஆற்றினர். அந்த யக்ஞ தர்மங்களே முதன்மையான தர்மங்களாக உள்ளன. அந்த தர்மங்களைப் போற்றுபவர்கள் முன்பு எங்கே சாத்யர்கள் என்ற தேவர்கள் இருக்கின்றனரோ. (அதாவது புருஷனின் ஸ்தானம்), அந்த சுவர்க்கத்தை அடைகின்றனர்.*

*அ) யக்ஞ தர்மத்தைப் பின்பற்றுபவர்கள் புருஷனின் ஸ்தானமாகிய சுவர்க்கத்தை அடைகின்றனர். அதாவது பிரஹ்ம ஞானியாகின்றனர்.*

*ஆ) யக்ஞ தர்மம் என்பது ஒரு சங்கல்பத்தை அடைய தன்னையே தியாகம் செய்வது. இது ஒரு சாதாரண சங்கல்பம் முதல் பிரஹ்ம ஞானம் அடைய வேண்டிய சங்கல்பம் வரை எல்லா சங்கல்பங்களுக்கும் பொருந்தும்.*

*இ) எந்த குறிக்கோளை அடைய வேண்டினும் நாம் நமது சரீர வாங், மனஸ் கூடிய அஹங்காரத்தை தியாகம் அல்லது யக்ஞமாக பிரஹ்மாக்னியில் செய்தே அந்த குறிக்கோளை அடைகிறோம். நம் சரீரம், செயல், அந்தக் கரணம், காலம், செல்வம் இவற்றை தியாகம் செய்தே ஒரு தலைசிறந்த விளையாட்டு வீரனாகவோ, தலைவனாகவோ, விஞ்ஞானியாகவோ, சங்கீதம் முதலிய கலைகளில் சிறந்தவனாகவோ ஆக முடியும்.*

*ஈ) தன்னுடைய எல்லாவற்றையும் பிரஹ்ம ஞானத்தைக் குறித்து தியாகம் (யக்ஞம்) செய்யும் ஒருவன் யோகி, பக்தன் அல்லது ஞானியாக மாறுகிறான். இங்கு "சர்வஹுத:" அவனை திரும்பவும் விராட் புருஷனுடன் ஒன்று கலந்து ஞானியாக மாற்றுகிறது. விராட் புருஷனின் தெய்வீக சிருஷ்டி சங்கல்பம் முடிவுக்கு வரும்போது புருஷனில் சங்கமமாகிறான்.*

**புருஷ சூக்தத்தின் அறிவிப்பு**

*1. புருஷனே எல்லாம்.*

*2. ஒரு குறிக்கோளை அடைய யக்ஞமே வழி.*

3. புருஷனே எல்லாம் என்று அறிபவன் இவ்வுலகிலேயே இறவாமையை அடைகிறான்.

4. பிரஹ்ம ஞானம் என்ற குறிக்கோளுடன் தன்னையே யக்ஞம் செய்பவன் (அ-து) அனவரதமும் சரீரம் செயல், மனதை இந்த சங்கல்ப அக்னியில் மானஸீகமாக யக்ஞம் செய்பவன், மறுபடி விராட் புருஷ லோகத்தை அடைந்து கிரமப்படி அவருடன் புருஷனில் கலக்கிறான்.

**உத்தர நாராயணம்**

சம்பிரதாயத்தில் புருஷ சூக்தத்துடன் உத்தர நாராயணம் ஓதப்படுகிறது. கீழே வரும் கருத்துரைகள் இவை இரண்டும் ஒரே கருத்தை வெவ்வேறு விதமாக அணுகுகின்றன என்பதை தெளிவாக்குகிறது.

**ரிக் 1**

**அத்ப்ய: சம்பூத: ப்ருதிவ்யை ரசாச்ச**
**விஸ்வகர்மண: சமவர்த்தாதி**
**தஸ்யத்வஷ்டா விதத்ருபமேதி தத்புருஷஷ்ய**
**விஸ்வமாஜானம் அக்ரே.**

நீர்களிலிருந்து, பிருதிவியின் ரசங்களிலிருந்தும் விஸ்வகர்மா(பிரஜாபதி)வினுடைய சிருஷ்டி உண்டானது. பிரஜாபதியினுடைய சிருஷ்டி த்வஷ்டாவினால் கல்பிக்கப் பட்ட பலவித ரூபங்களை அடைகிறது. அந்த பிரஜாபதியினுடைய அனைத்து சிருஷ்டியை முன்னரே அறிபவரை.

**ரிக் 2**

**வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்**
**ஆதித்ய வர்ணம் தமஸ; பரஸ்தாத்**
**தமேவம் வித்வானமிருத இஹபவதி**
**நான்ய: பன்தா வித்ய தேயனாய.**

இந்த மஹா புருஷனை நான் அறிவேன். சூர்ய ஒளி போன்றவனும் இருளுக்கு அப்பாற்பட்டவனும் ஆனவனை. அவரை இவ்வாறு அறிந்தவன் இங்கேயே (இவ்வுலகிலேயே) இறவாத் தன்மை அடைகிறான். இந்த வீடு பேற்றைப் பெறுவதற்கு வேறு ஒரு வழியும் காணப் படவில்லை.

ரிக் 3

**பிரஜாபதிஸ் சரதி கர்ப்பே அந்த:**
**அஜாயமானோ பகுதா விஜாயதே**
**தஸ்யதீரா: பரிஜானந்தி யோனிம்**
**மரீசீனாம் பதமிச் சந்தி வேதஸ:**

*பிரஜாபதி இந்த மஹா புருஷனின் கர்ப்பத்தில் வசிக்கிறார், பிறப்பில்லாதவன் பலவாறு வேறுபட்டு தோன்றுகிறார். அந்த பிரஜாபதியின் மூலத்தை ஞானிகள் முற்றும் அறிகின்றனர். சிருஷ்டியை உண்டாக்கும் மரீசிகளின் பதத்தை வேண்டுகின்றனர்.*

ரிக் 4

**யோ தேவேப்ய ஆதபதி**
**யோதேவானாம் புரோஹித:**
**பூர்வோ யோ தேவேப்யோ ஜாத:**
**நமோ ருசாய பிராஹ்மயே**

*யார் தேவர்களுக்குள் பிரஹ்ம (வேத) அக்னியாக விளங்குகிறார்.*

*யார் தேவர்களை ஞான மார்க்கத்தில் முன் நடத்துகிறார். முன்னர் தேவர்களுக்காக அவதரித்தவர். ஒளிவிடும் வேத புருஷனிடம் சரணடைகிறேன்.*

ரிக் 5

**ருசம் பிராஹ்மம் ஜனயந்த:**
**தேவா அக்ரேததப்ருவன்**
**யஸ்த்வைவம் பிராஹ்மணோ வித்யாத்**
**தஸ்ய தேவா அசன் வசே.**

*ஞான ஒளி வீசும் வேதத்தை வெளிப்படுத்தியவர் களாக தேவர்கள் முன்னே அதைப் பற்றி கூறினர். எந்த வேதமார்க்கத்தை பின்பற்றுபவன் ஒருவன் பின்வருமாறு அறிவானோ, அவன் வசம் தேவர்கள் இருப்பார்கள் என்று.*

ரிக் 6

**ஹரீஸ்ச தேலக்ஷ்மீஸ்ச் சபத்நியௌ!**
**அஹோராத்ரே பார்ச்வே**
**நக்ஷத்ராணி ரூபம் அஸ்விநௌ வியாத்தம்**

*இச்சாசக்தியும் கிரியாசக்தியும் உன் சக்திகள். பகலும் இரவும் பக்கலில் உள்ளனர். நக்ஷத்ரங்கள் உன் ரூபம். த்யாவா பிருதிவிக்கள் உனது திறந்தவாய்.*

**ரிக் 7**

**இஷ்டம் மணிஷாண அமும் மணிஷாண**
**சர்வம் மணிஷாண.**

*யக்ஞத்தை அறிபவனே*
*இந்த சிருஷ்டியை அறிபவனே*
*அனைத்தும் அறிபவனே*

*ரிக் 1ல் கூறப்பட்ட "விஸ்வம் ஆஜானம் அக்ரே" என்பதன் விரிவு இது. என்பதை நோக்கவும்.*

**ஓம் தத்சத் பிரஹ்மார்ப்பணமஸ்து.**



# உதக சாந்தி மந்த்ரங்கள்

யஜுர் வேத மந்த்ரங்களின் சிலவற்றின் தொகுப்பாக உதக சாந்தி பாடம் போதாயன மஹரிஷியால் வகுக்கப் பட்டுள்ளது.

மனிதன் இந்த உலகில் மூன்று விதமான சூழ்நிலை களில் வாழ்கிறான். அவையாவன:

1. அதிபூதம்: இயற்கை சூழ்நிலை. இது வாழும் இடம், அதன் தட்பவெப்பகால நிலைகள், மண் செழிப்பு, நீர் செழிப்பு முதலிய இயற்கை சூழ்நிலைகள் இன்பம் பயப்பதும், துன்பம் பயப்பதும் சேர்ந்தவை.

2. அதி தைவம்: உயிர் வாழ் சூழ்நிலை. பேரறிவு படைத்த தேவ அசுரர்கள் முதலிய உயர் பிறவிகள், அறிவு படைத்த மனிதர்கள், சிற்றறிவு படைத்த மிருகங்கள், புழு, பூச்சிகள் ஆகிய அனைத்தும் தேவ அசுர சக்திகளால் இயக்கப்பட்டு மனிதனுக்கு வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் பயப்பவை.

3. அத்யாத்மம்: மனிதனின் தனிப்பட்ட சூழ்நிலை. மனிதன் தன் சரீரம், செயல், மனம் இவற்றின் மூலம் அடையும் இன்ப துன்ப அனுபவங்கள், ஞான அனுபவ்ங்கள்.

அர்த்தம் அறிந்து ஒரு முகமான மனத்துடன் ஜபிக்கப்படும் உதக சாந்தி மந்த்ரங்கள் இந்த மூன்று சூழ்நிலைகளிலும் ஏற்படும் துன்பங்களை அகற்றி, இன்பத்தையும், ஞானத்தையும் பெருக்க அருள் புரிகின்றன.

(1) "க்ருணுஷ்வபாஜ" என்ற மந்த்ரம் தொடங்கி "சம்சமே மயஸ்சமே" என்னும் மந்த்ரம் வரை அதிபூதம் (அ) இயற்கை சூழ்நிலையை மாற்றி அமைக்கும் மந்த்ரங்கள்.

(2) "மமாக்னே வர்சோ" என்ற மந்த்ரம் தொடங்கி "சக்ஷுஷேஷோஹேதே" என்ற மந்த்ரங்கள் வரை உயிர் வாழ் சூழ்நிலையை மாற்றி அமைக்கும் மந்த்ரங்கள்.

(3) "ஸ்ரோத்ரேண" என்ற மந்திரம் தொடங்கி முடிவுவரை மனிதனின் தனிப்பட்ட சூழ்நிலையை மாற்றி அமைக்கும் மந்திரங்கள்.

ஒரு மனிதனின் சங்கல்பமே யக்ஞத்தின் அடிப்படைத் தளமாதலால் ஸ்ரத்தையுடன் கூடிய யஜமானன் வேத அறிவு இல்லாதவன் ஆயினும், வேத பண்டிதர்களைக் கொண்டு அவர்கள் ஒருமுகப்பட்டு அர்த்தம் அறிந்து செய்யும் ஜபத்தின் பயனை உரிய தக்ஷிணைகள் அளித்து கௌரவிப்பதன் மூலம், சங்கல்ப பயனை அடையலாம். உலக வழக்கில் ஒரு வீடுகட்ட உதவும் அனைவருக்கும் உரிய தனத்தை அளித்து வீட்டின் பயனை அனுபவிப்பது போல் இதுவாகும்.

**ராக்ஷோக்னம்**

**"க்ருணுஷ்வபாஜ: ... ஹந்தவா"**

இந்த மந்த்ரங்களின் பொழிப்புரையை பக்கம் 41-ல்" காணவும்.

**"இந்த்ரம் வோ விஸ்வதஸ்பரி ஹவாமஹே**
**.... அனஸ்வாசோ யே பவயோ ரதா**
**இந்த்ரேஷிதா அப்யவர்த்தந்த தஸ்யூன்.**

ஜனங்களாகிய உங்கள் அனைவரின் நடுவில் இந்த்ரனைக் குறித்து வேள்வி செய்கிறோம். நம் அனைவருக்கும் இன்பம் ஒன்றே ஆனநிலை இருப்பதாக. இந்த்ரனைக் குறித்து மனித இனம் பிரத்யேகமாக வேள்வி செய்கின்றனர். அந்த வேள்வி அவர்களின் புத்திகளை அக்கரையில் உள்ள ஞானங்களுடன் சேர்த்து வைக்கிறது. தீரன் ஜனங்களுக்கு வரம் அருள்பவன், பராக்கிரமத்தில் பிரகாசிப்பவன் ஆன நீ எங்களை கால்நடைகளை கொண்ட கோஷ்டத்தில், சக்தி மிகுந்த இந்திரியங்கள் கொண்ட தேஹத்தில், பூமிகள் கொண்ட ராஜ்யத்தில், வேதங்கள் கூறும் உத்தம ஞான மார்க்கத்தில் சேர்ப்பாயாக.

நூறு யாகங்கள் புரிந்தவனே. ஐந்து அறிவுகளில் உள்ள இந்திரியங்கள் உன்னுடையவை எவையோ அவற்றை விரும்புகிறேன். பிரமை உண்டுபண்ணும் சக்திகளை அழிப்பதில் வல்லவையான உன் மஹத்தான இந்திரிய சக்திகளை கூட வேண்டுகிறேன். பூஜைக்குரிய இந்திரனே

தேவர்களுடன் கூட வெற்றிகொள்ளும் உன் க்ஷத்ரிய பலம், எதிரிகளை முறியடிக்கும் உன் பலத்துடன் (அருள்வாயாக).

நிலைத்த வேருடையவை போன்று எவன் உள் ஏழு செல்வத்தின் அதிபதிகள் நிற்கின்றனர். (இந்திரியங்கள் 5 + மனம் + புத்தி = 7 செல்வங்கள்). தீர்க்க ஸ்ருத்தமர் என்றவர் இந்திரனின் பக்குவப்பட்ட அதிதி. பண்படாத பச்சை தானியங்கள் போன்ற எங்களுக்கு சூரியனை வானத்தில் ஏற்றி (புத்தி) முதிர்ச்சியைக் கொடுத்தாய். துதிகளில் பிரியமுள்ள இந்திரனுக்கு நல்ல துதிகளால் அமைந்த வார்த்தைகள் கொண்ட வெப்பம் உடையது போன்ற சாமன் ருக்கால் தபஸ் செய்யுங்கள்.

இந்திரனைக் குறித்து கானம் செய்பவர்கள், துதிகளால் துதிப்பவர்கள், குரல்களை சப்தித்தனர். காயத்ரி சந்தஸில் தேர்ச்சி பெற்றவர் உன்னைப் பாடுகின்றனர். பிரகாசமான ஒளியைத் துதிக்கின்றனர். பிரம்ம ஞானிகள் நூறு யாகம் புரிந்த உன்னை உன்னதமான சந்ததி போன்று தாங்கினர்.

துன்பங்களிலிருந்து விடுவிப்பவனை போற்றுபவர்களுக்கு ஞானத்துடன் கூடிய நல் மதியை விருப்பத்துடன் உடனே கொடுப்பவனை போற்றி வளர்க்கிறோம்.

இந்திரனே உன்னைத் துதிக்கும் ஒவ்வொரு கிருஹத்திலும் உள்ள யஜமானனுடைய விருப்பங்கள் நிறைவேறட்டும்.

முன் மேல் உலகிலிருந்து எந்த ஒளி என்னைச் சூழ்ந்தது. என்னுள் ஞானத்தை உண்டாக்கியது அந்த (வேத மந்த்ரங்களால்) இந்திரனை துதிக்கிறேன். துன்பத்திலிருந்து எங்கு காக்கப்பட்டது. எவ்வாறு எங்களைப் படகு போல இரு உலகிலும் அழைத்துச் செல்பவனை, (ஜனங்கள்) துதிக்கின்றனர்.

சிறந்த நல் அரசனை, முதல்வனை, வேதம் அறிந்தவர்களுடைய முதல்வனை, யக்ஞம் செய்பவர்களுடைய துன்பங்களை அழிப்பவனை, காளையை, புனித நீர்களுடைய புதல்வனை, சக்தி (என்ற) குதிரையில் செல்பவனை (ஆகிய இந்திரனான) இவனுள் மனித

குலத்துடைய இந்திரியம் வைக்கப்பட்டது. உடல் பலம் வைக்கப்பட்டது.

இந்திரனே எங்களுடைய எதிரிகளை அழிப்பாயாக. அவர்களை கீழான நிலையில் இருக்கச் செய்வாயாக. எங்களை யார் எதிரியாகக் கருதுகிறானோ அவனை எங்கள் காலடிக் கீழ் இருக்குமாறு இப்போதே செய்வாயாக.

இந்திரனே, முயற்சி செய்பவர்களுடைய மனத்துக் குகந்த போர் புரியும் சக்தியை அருளுகிறாய். நண்பர் களல்லாத ஜனங்களை விரட்டி அடிக்கும் நீர் தேவர் களுடைய பரந்த உலகத்தை ஸ்தாபித்தீர். மிருகம் போன்ற பெரிய ரூபம் உடையவனாய், உயர்ந்த மலையில் இருப்பவனும் எங்கும் செல்பவனாக அப்பால் பரலோகத்திலிருந்து வந்து அடைந்தார்.

இந்திரனே கூர்மையான சிறந்த வஜ்ராயுத்தை தயார் படுத்திக் கொண்டு சத்துருக்களை அடித்து அகற்றிவிடு. பலவிதமான போர்புரியும் சத்ருக்களை அகற்று. விருத்ரனுடைய இரு தாடைகளையும் உடைத்துப் பொடியாக்கு. இந்திரனே, எதிரியினுடைய, எதிரியாக எண்ணுபவனுடைய, கோப வெறி கொண்டவனுடைய கொடிய கோபத்தை அழி.

காப்பவனை, அனுகூலமானவனை, ஆஹுதியில் நன்கு கூப்பிடப்பட்டவனை, சூரனை, சக்திபொருந்திய வனை, பலராலும் அழைக்கப்படுபவனை, இந்திரனை இப்பொழுது அழைக்கிறேன். நல்வாழ்க்கை எங்களுக்கு அனுக்ரஹிக்கட்டும். தாங்கிக் காக்கட்டும்.

வீர்யமுள்ள உன்னை வணங்கும் செயலை, செய்யாமல் விட்டு நாங்கள் பாவத்திற்கு ஆளாக வேண்டாம். நம்பகமான பாதுகாப்புகளால் எங்களைக் காப்பாற்று. வேண்டுவனவற்றைத் தரும் உன்னுடைய வழிகளில் இருப்போமாக.

போற்றப்பட்ட இந்திரனே, சக்திமான் ஆன உனக்கு த்வஷ்டா உறுதியான ஒளி வீசும் மனுஷ்ய சரீரத்தை ரதமாக (அமைத்தார்). வேதம் ஓதுபவர்கள், விருத்ரனின் அழிவுக்காக துதிகளால் துதிப்பவர்கள் இந்திரனை மகிழ்வித்தனர்.

சக்திமானே, எது உன்னுடைய பலமுடைய, ஒளியால் பிரகாசித்துக் கொண்டிருக்கிற, சப்தம் செய்பவை, அளவில்லாதவை, ஒன்றுகூடிச் செயல்புரிபவை, செல்வதற்கு குதிரையும், ரதமும் வேண்டாதவையான அந்த வஜ்ராயுதங்கள் இந்திரனால் ஏவப்பட்டு சத்ருக்களை வெற்றிகொண்டன.

**"யத இந்த்ர பயாமஹே ... கிருணுஹி விஸ்வதோ நः**

இந்திரனே, எதற்கு பயப்படுகிறோமோ அதற்கு அபயம் செய். ஈகையில் சிறந்தவனே, காத்தலை செய்யும் சக்தி உள்ளவனாக இரு. எங்கள் சத்ருக்களை அழிப்பாயாக.

நன்மையைக் கொடுப்பவன், வீட்டுக்கு அதிபதி, விருத்ரனைக் கொல்பவன், சத்ருக்களை வசத்தில் வைத்திருப்பவன், காளை, அபயம் அளிப்பவன், நன்மையைக் கொடுப்பவன் முன்னே வரட்டும்.

பெருமை படைத்த இந்திரன், வஜ்ராயுதத்தைக் கையில் உடையவன். பதினாறு வித நலங்களும் கொடுக்கட்டும். பகவான் எங்களுக்கு நன்மை செய்யட்டும். எங்களை வெறுக்கும் பாவியைக் கொல்லட்டும்.

இந்திரனே, மருத்கணங்களுடன் கூட மகிழ்ச்சியுடன் சோமபானம் செய்வாயாக. விருத்ரனை வதம் செய்பவனே, சூரனே, வித்வானே, எதிரிகளை அகற்றி விடு. எங்களுக்கு எங்கும் அபயம் அளிப்பாயாக.

**"யே தேவா: புரஸ்ஸதோ – பிருஹஸ்பதயே**
**துவஸ்பதே ரக்ஷோக்னே ஸ்வாஹா"**

ராக்ஷசர்களை அழிப்பவர்களும், கிழக்கு நோக்கி அமர்ந்திருப்பவர்களும் (1) அக்னியால் வழிநடத்தப் படுபவர்களும் ஆன தேவர்கள் எவரோ அவர்கள் எங்களைக் காக்கட்டும். எங்களைத் தூண்டட்டும். அவர்களிடம் சரணாகதி அடைகிறோம். அவர்களுக்கு (துதிகளை) அர்ப்பணிக்கிறோம்.

ராக்ஷசர்களை அழிப்பவர்களும்,

2) தெற்கு நோக்கி அமர்ந்திருப்பவர்களும் யமனால் வழிநடத்தப்படுபவர்களும், ஆன தேவர்கள் ...

3) மேற்குநோக்கி அமர்ந்திருப்பவர்களும் சவிதாவால் வழிநடத்தப்படுபவர்களும் ஆன தேவர்கள்.

4) வடக்கு நோக்கி அமர்ந்திருப்பவர்களும் வருணனால் வழிநடத்தப்படுபவர்களும் ஆன தேவர்கள்.

5) மேல்நோக்கி அமர்ந்திருப்பவர்களும் பிருஹஸ்பதியால் வழிநடத்தப்படுபவர்களும் ஆன தேவர்கள்

எவரோ அவர்கள் எங்களைக் காக்கட்டும். எங்களைத் தூண்டட்டும். அவர்களிடம் சரணாகதி அடைகிறோம். அவர்களுக்கு (துதிகளை) அர்ப்பணிக்கிறோம்.

ராக்ஷசர்களை அழிக்கும் அக்னிக்கு அர்ப்பணம், யமனுக்கு அர்ப்பணம், சவிதாவுக்கு அர்ப்பணம், வருணனுக்கு அர்ப்பணம், வேதங்களின் பதியான பிருஹஸ்பதிக்கு அர்ப்பணம்.

**"அக்னி ராயுஷ்மான் ... ஆயுஷ்மந்தம் கரோமி"**

அக்னி ஆயுள் நிறைந்தவன். அவன் விருக்ஷங்களால் ஆயுள் நிறைந்தவன்.

சோமன் ஆயுள் நிறைந்தவன். அவன் ஓஷதிகளால் ஆயுள் நிறைந்தவன்.

யக்ஞம் ஆயுள் நிறைந்தது. அது தக்ஷிணைகளால் ஆயுள் நிறைந்தது.

வேதம் ஆயுள் நிறைந்தது. அது வேதியர்களால் ஆயுள் நிறைந்தது

தேவர்கள் ஆயுள் நிறைந்தவர்கள். அவர்கள் அமிருதத்தினால் (பிரம்மத்தினால்) ஆயுள் நிறைந்தவர்கள்.

அவரால் / அதனால் / அவர்களால் உன்னை ஆயுள் நிறைந்தவனாக ஆக்குகிறேன்.

**"யாவாமிந்த்ரா வருணா ... ஸ்ராமஸ்**
**தம் வாமேதேனாவய ஜே"**

இந்த்ராவருணர்களே, எவை உங்களுடைய சக்தி மிகுந்த சரீரங்களோ, பலம் மிகுந்த சரீரங்களோ, ரக்ஷிக்கும் சரீரங்களோ, ஒளிவீசும் சரீரங்களோ அதனால் இந்த துன்பத்திலிருந்து விடுவியுங்கள்.

இந்த்ராவருணர்களே, அக்னியில், இரண்டு கால் ஜீவன்களில், நான்கு கால் ஜீவன்களில், கால்நடைக் கொட்டகைகளில், வீடுகளில், நீர்களில், ஓஷதிகளில், விருக்ஷங்களில், உங்களுடைய (சக்தி) எது குறைவோ அந்த

குறைவை இந்த துதியை அர்ப்பணிப்பதால் முற்றிலும் விலக்குகிறேன்.

"அக்னே யசஸ்வின் ... பஸ்சாதனு ஜீவாத சர்வே"

கீர்த்தி வாய்ந்த அக்னியே, உன் கீர்த்தியை என்னுள்ளும் வைப்பாயாக. இந்திரனுடையது போன்ற புகழை இங்கு கொண்டுவருவாயாக.

இது முதன்மையானவன், பரமேஷ்டி (எ) பிரம்மா, ஒளிவாய்ந்த அக்னி போன்றவருடைய உத்தமமான துதியாக இருக்கட்டும். சுவர்க்கத்தை அறிந்தவர்களான ரிஷிகள் முன்னர் தபஸ், தீக்ஷை (அ) விரதம் இரண்டினுடன் வாழ்ந்து மங்களத்தைக் கண்டனர். பின்னர் க்ஷத்ரிய பலமும், சக்தியும் உண்டானது. அதை தேவர்கள் (ஜனங்களுக்குத் தகுந்தபடி) சீரமைக்கட்டும். சிருஷ்டியை தாங்குபவர், பல விதமாக சிருஷ்டியை அமைப்பவர், நல்லதைக் காண்பவர், பிரஜாபதி, ப்ரஹ்மா ஒளிவீசும் தேவன் இவரை பற்றி ஸ்தோமங்களும் சந்தஸ்களும் உதவிடும் மந்த்ரங்கள் கூறுகின்றன. தேசத்தை (ஜனசமூஹத்தை) அவரைத் தொழுபவர்களாக, அவர் அருளுக்காக மாற்றி அமைப்போமாக. ஒன்றுகூடி எல்லோரும் இவர் அருகில் வருவீராக. உங்களுக்கு இவர் ஆணையிடுபவராகவும், அதிபதியாகவும் இருப்பாராக. இவருடைய விக்ஞானத்தை அனைவரும் அறிந்து கடைப்பிடிப்பீராக. பின்னர் இவரை பின்பற்றி அனைவரும் வாழ்வீர்களாக.

## ராஷ்ட்ர பிருதம்

1) ஈஸ்வர நியதியை பரிபாலிப்பவன், ஈஸ்வர நியதியைத் தன் வாசஸ்தலமாகக் கொண்டவன். அக்னி என்ற கந்தர்வன் அவனுடைய சக்திகள் ஊர்ஜா (ரசம்) என்ற பெயர் கொண்ட ஓஷதிகளாகிய அப்சரஸ்கள்.

2) வேதங்களின் இருப்பிடமான சூர்யன் என்ற கந்தர்வன் அவனுடைய சக்திகள் ஆயுவ: (ஜீவராசிகள்) என்ற பெயர் கொண்ட மரீசிகள் (அறிவுத்துளிகள்) ஆகிய அப்சரஸ்கள்.

3) உத்தமசுகத்தை அருளுபவன், சூர்ய கிரணங்களின் பிரதிபலிப்பானவன் சந்த்ரமா என்ற கந்தர்வன்

*அவனுடைய சக்திகள் பேகுரய: (வீணா நாதம் செய்பவர்) என்ற பெயர் கொண்ட நக்ஷத்ரங்களாகிய அப்சரஸ்கள்.*

*4) ஸ்வீகரிக்கும் புருஷன், ஒளிவீசும் இறக்கைகள் போன்ற ஜ்வாலை உடையவன், யக்ஞம் என்ற கந்தர்வன் அவனுடைய சக்திகள், வேதத்துதிகள் என்ற நாமம் கொண்ட தக்ஷிணா ஆகிய அப்சரஸ்கள்.*

*5) பிரஜாபதி, அனைத்து செயலையும் ஆற்றுபவர், மனஸ் என்ற கந்தர்வன், அவனுடைய சக்திகள் வைஸ்வானர அக்னிகள் என்ற நாமம் கொண்ட ரிக் சாமங்கள் ஆகிய அப்சரஸ்கள்*

*6) புத்துணர்ச்சியூட்டுபவர், அனைத்தையும் வியாபிப்பவர் காற்றுகள் என்ற கந்தர்வன் அவனுடைய சக்திகள் முதா (மகிழ்ச்சி) என்ற நாமம் கொண்ட, ஆபஸ் (நீர்கள்) ஆகிய அப்சரஸ்கள்.*

*கந்தர்வராகிய அவர் இந்த பிரஹ்மம், க்ஷத்ரம் ஆகிய பண்புகளைக் காக்கட்டும் சக்திகளாகிய அவர்கள் இந்த பிரஹ்மம், க்ஷத்ரம் ஆகிய பண்புகளைக் காப்பார்களாக. அவருக்கு அர்ப்பணம், அவர்களுக்கு அர்ப்பணம்.*

*புவனத்தின் பதியே, உன்னுடைய மற்றும் மேலே உள்ள, இங்கு உள்ள ஜீவர்களின் வாசஸ்தலங்கள் எவையோ, அவர்கள் மூலம் எங்கள் ஆஜ்யங்களையும், தனம் சிறந்த வாழ்க்கையையும், மங்களமான வீர்யத்தையும், நீண்ட பல வருடங்களில் மங்களத்தையும் அருள்வாயாக.*

*(நோக்குக. மேற்கூறியவை ஜீவனின் வாசஸ்தலமாகிய*

| | | |
|---|---|---|
| அக்னி | – | சங்கல்ப சக்தி |
| சூர்யன் | – | புத்தி, ஆயுள் |
| சந்திரன் | – | ஆனந்தம் |
| யக்ஞம் | – | ஞானமளிக்கும் புண்யகர்மம் |
| பிரஜாபதி | – | மனஸ் |
| வாதா: | – | பலவகைப்பட்ட செயல்கள் |

*இவற்றை பரிபாலிக்கின்றன.)*

*7) சிருஷ்டி யக்ஞம் புரிபவரும், அனைத்தையும் காப்பவரும், அழிப்பவரும் ஆன பரமாத்மா என்ற கந்தர்வர்*

*அவருக்கு சக்திகள் அனைத்தும் சிருஷ்டியாகிற விஸ்வம் என்ற அப்ஸரஸ்கள்.*

*8) நல்வாசஸ்தலமாகிய புவர் லோகத்தில் மங்களமாக உள்ளவரும், மங்களத்தை அருளும் ஒளிமிகுந்தவனும் ஆன பர்ஜன்யன் (மழை) என்ற கந்தர்வன் அவருடைய சக்திகள் ருச: என்ற (பிரகாசம்) நாமம் கொண்ட மின்னல்கள் ஆகிய அப்சரஸ்கள்*

*9) தொலைவிலிருந்து இயங்கும் ஆயுதமும் தயை இல்லாதவரும், சாவை அருளுபவரும் ஆன மிருத்யு என்ற கந்தர்வன், அவருடைய சக்திகள் பயந்தவர்கள் என்ற நாமம் கொண்ட பிரஜைகள் ஆகிய அப்சரஸ்கள்.*

*10) மிகவும் விரும்பப்படுபவரும், விருப்பத்தை ஊக்குவிக்கும் வடிவுள்ளவரும் ஆகிய காமன் என்ற கந்தர்வன் அவருடைய சக்திகள் சோசயந்தீ (துக்கம் தருபவை) என்ற நாமம் கொண்ட ஆதி (ஏங்குதல்) என்ற அப்சரஸ்கள்.*

*கந்தர்வராகிய அவர் இந்த பிரஹ்மம், க்ஷத்ரம் ஆகிய பண்புகளைக் காக்கட்டும். அப்சரஸ்கள் இந்த பிரஹ்மம், க்ஷத்ரம் ஆகிய பண்புகளை காப்பார்களாக. கந்தர்வருக்கு அர்ப்பணம், அப்சரஸ்களுக்கு அர்ப்பணம்.*

*எங்களுடைய புவனத்தின் பதியே, உன்னுடைய மற்றும் எந்த வாசஸ்தலங்கள் மேலேயும், இங்கேயும் உள்ளதோ, அவற்றால் இந்த பிராஹ்மணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும் மஹத்தான பாதுகாப்பைக் கொடுப்பாயாக*

*(நோக்குக 7, 8, 9, 10 வெளி உலக சிருஷ்டியில் வாசஸ்தலமாக உள்ளவை.*

| | | |
|---|---|---|
| **பரமாத்மா** | **–** | **அனைத்து சிருஷ்டி** |
| **பர்ஜன்யன்** | **–** | **புவர்லோகம்** |
| **மிருத்யு** | **–** | **புவர்லோகம்** |
| **காமன்** | **–** | **பிரஜைகள்** |

*பரமாத்மா இவற்றால் ஜீவராசிகளைப் பரிபாலிக்கின்றார்)*

**"நமோ அஸ்து ஸர்பேப்யோ ... தேப்ய:
சர்பேப்யோ நம:"**

ஊர்ந்து செல்பவற்றுக்கு நமஸ்காரம் இருக்கட்டும். எவை பூமியில் வசிக்கின்றனவோ, எவை ஆகாசத்தில் எவை சுவர்க்கத்தில் வசிக்கின்றனவோ அந்த சர்ப்பங்களுக்கு நமஸ்காரம்.

எந்த ஊர்ந்து செல்பவை பிரகாசிக்கின்ற சுவர்க்கத்தின் மேலுள்ள நிலையிலும், எவை சூரியனின் கிரணங்களிலும், எவற்றிற்கு ஜலத்தில் ஸ்தானமானது ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ அந்த சர்ப்பங்களுக்கு நமஸ்காரம்.

எந்த ஊர்ந்து செல்பவை ராக்ஷசர்களுக்கு பாணங் களாகின்றனவோ, எந்த பாம்புகள் மரங்களை அடைந் திருக்கின்றனவோ, எந்த பாம்புகள் பொந்துகளில் படுத்திருக்கின்றனவோ அந்த பாம்புகளுக்கு நமஸ்காரம்

**பஞ்ச சோடா:** ஐந்து சூரிய கிரணங்கள்.

**"அயம்புரோஹரிகேச ... ஜம்பேததாமி"**

1. இந்த கிழக்கில் ஹரிகேசன் என்ற சூரியகிரணம், அவனுடைய திறமை வாய்ந்த சாரதியும், ரதம் ஓட்டுவதில் வல்லமையைக் காட்டுபவனும், ஆன சேனைக் கூட்டத்தின் தலைவர்கள், புஞ்ஜிகஸ்தலா, க்ருதஸ்தலா என்ற அப்சரஸ்கள் அவர்களுடைய கொடிய பூதங்கள் ஆன ஆயுதங்கள், ராக்ஷசர்கள் ஆன ஆயுதங்கள் ஆகிய அனைவர்.

2. இந்த தெற்கில் விஸ்வகர்மா என்ற சூரிய கிரணம், அவனுடைய சப்தம் செய்யும் ரதம், ரதத்தில் சிற்பங்கள், ஆன சேனைக் கூட்டத்தின் தலைவர்கள், தலைவிகளான மேனகாவும், சஹஜன்யாவும் அவர்களுடைய கடிக்கும் மிருகங்களாகிய ஆயுதங்கள், புருஷத்வத்தை அழிக்கும் ஆயுதங்கள் ஆகிய அனைவர்.

3. இந்த மேற்கில் விஸ்வவ்யசா: என்ற சூரியகிரணம், அவனுடைய ரதத்தில் பொருத்தப்பட்ட சிற்பமும், சமானமில்லாத ரதமும் சேனைக் கூட்டங்களின் தலைவர்கள். பிரம்லோசந்தீயும் அனும்லோசந்தீயும்

அப்சரஸ்கள், அவர்களுடைய ஆயுதங்கள் சர்ப்பங்கள்; புலிகள் ஆகிய அனைவர்.

4. இந்த வடக்கில் சம்யத்வசு: என்ற சூரிய கிரணம், அவனுடைய சேன ஜித்தும், சுஷேணனும் சேனைக் கூட்டத் தலைவர்கள். விஸ்வாசீயும் கிருதாசீயும் அப்சரஸ்கள் அவர்களுடைய ஆயுதங்கள் ஆபஸ், காற்று ஆகிய அனைவர்.

5. இந்த மேல்நோக்கிய திக்கில் அர்வாக் வசு என்ற சூரியகிரணம், அவனுடைய தார்க்ஷ்யன், அரிஷ்டநேமி என்ற சேனைக் கூட்டத் தலைவர்கள். ஊர்வசீயும் பூர்வசித்தியும் அப்சரஸ்கள். மின்னல், தொடர்ந்து இடிக்கும் இடி ஆயுதங்கள் ஆகிய அனைவர்.

அவர்களுக்கு நமஸ்காரம். அவர்கள் எங்களை மகிழ்விக்கட்டும். யாரை நாங்கள் வெறுக்கிறோமோ, யார் எங்களை வெறுக்கிறாரோ அவனை உங்களுடைய திறந்த வாயில் போடுகிறேன்.

## அப்பிரதிரதம்

**"ஆசு: சிசானோ விருஷபோ ந ... சர்ம யச்சது**

விரைவாகச் செயல்புரிபவன், கூர்மையான புத்தியுடையவன், காளை போன்றவன், யுத்தத்தில் வல்லவன், சத்ருக்களை அழிப்பவன், முயற்சி செய்பவர்களுக்கு வலிமை அளிப்பவன், கர்ஜனை புரிபவன், கண் கொட்டாது விழிப்புடன் உள்ளவன், நூற்றுக்கணக்கான சேனைகளை ஒருவனாகவே ஜயித்தவன் இந்த்ரன் கர்ஜனை புரிபவனால், விழிப்புடன் இருப்பவனால், வெற்றி உள்ளவனால், போர்புரிபவனால், அசைக்க முடியாததை அசைப்பவனால், தைரியம் உள்ளவனால், கையில் அம்பு உள்ளவனால், புருஷத்வம் உடையவனால், போரில் மனித சமூஹமே, அந்த இந்திரனால் (தீய சக்திகளை) வெற்றி கொள்வீராக. தீயசக்திகளை அடக்குவீர் களாக.

பாணத்துடன் கூடிய கைகளால் நன்கு அவிழ்க்கப் பட்ட அம்பறாக் கூட்டுடன், போரிடும் கணங்களுடனும் கூட எல்லோரையும் வசப்படுத்தும் இந்த்ரன், நல்ல வெற்றியை அடைந்தவன், சோமரசத்தைப் பருகுபவன்,

நூறு புஜங்கள் உடையவன், மேலே தூக்கிய வில்லை யுடையவன், நாணில் பூட்டப்பட்ட அம்பை எறிபவன்.

பிருஹஸ்பதியே (இந்த்ரன்) சுழன்று பறக்கும் ரதத்தினால் ராக்ஷசர்களைக் கொல்பவன், எதிரிகளை அழிப்பவன், சேனைகளை நசுக்குபவன், எதிரிகளை யுத்தத்தில் அழிப்பவன், வெற்றி உள்ளவன் எங்களுடைய தூண்டப்பட்ட சரீரங்களாகிய ரதங்களில் அமர்வாயாக.

ஞானமேகங்களைப் பிளந்து ஞான மழை பொழி பவனும், ஞானியும், வஜ்ரபாஹுவும், வெற்றிவாகை சூடுபவனும், எதிரிகளின் நாசத்தை உண்டாக்கி முன்னேறுபவனும், வீரத்துடன் கூட உண்டானவனும் இந்த இந்த்ரனை பின்பற்றி வீரர்களாகுங்கள், நண்பர்களே இந்திரனை இறுகப் பற்றிக் கொள்ளுங்கள்.

பலங்களை அறிந்தவன், ஸ்திரமானவன், உத்தமவீரன், வெற்றிவாகை சூடியவன், போரிடும் சக்தி மிகுந்தவன், வெல்பவன், உக்ரமானவன், வீரர்களால் சூழப்பட்டவன் புனிதத்தால் சூழப்பட்டவன், பலத்துடன் கூடியவன், வெற்றி வீரன் வேதங்களை அறிந்தவன் ஆகிய இந்த்ரனே, சரீரமாகிய ரதத்தில் உள் அமர்வாயாக.

ஞானக்கடலால் சூழப்பட்டவன், தன் திறமையால் அதன் ஆழத்தை அளப்பவன், கொடையாளி, வீரன், நூறு மடங்கு கோபம் உள்ளவன், அசைக்க முடியாதவரை அசைப்பவன், யுத்தத்தை பரிபாலிப்பவன், எதிர்த்து எவரும் போரிட முடியாதவன், மற்றவர்களுடன் சந்திக்கும்போது எங்கள் இந்த்ரிய சேனைகளைக் காக்கட்டும்.

இந்த்ரன் தேவ சமூஹத்தின் வழிகாட்டும் தலைவன். பிருஹஸ்பதி, தக்ஷிணா, யக்ஞம், சோமன் முன் செல்லட்டும். மஹா மனது படைத்தவர்களும், புவனங் களை நடத்துவிப்பவர்களும், வெற்றி உடையவர்களும் ஆன தேவர்களுடைய கோஷம் பெரிதாக ஒலி எழுப்பட்டும்.

எல்லோரும் ஒன்றுகூடும் இடத்தில், (கொடிகளுடன் போரிடும் இடத்தில்) இந்த்ரன் நம்முடன் (இருக்கட்டும்). நமது சொற்கள் (அம்புகள்) எவையோ அவை வெற்றி கொள்ளட்டும். நம்முடைய வீரர்கள் எல்லோரினும்

மேம்பட்டவராக ஆகட்டும். தேவர்கள் யக்ஞங்களில் நம்மை தூண்டட்டும்.

உன்னுடைய சக்திகளால், கொடையாளியே, (இந்த்ரனே) என்னைச் சேர்ந்தவர்களுக்கு உயர் நிலைக்குக் கொண்டு செல்லும் செயல்களில் ஈடுபட தைர்யத்தை அருள்வாயாக.

விருத்ரனை வதம் செய்தவனே, சக்திமான்களின் சக்திகளை சக்தியால் எழச் செய்வாயாக. சக்தியுடன் எழுந்தவர்களின் சரீரங்களிலிருந்து ஜய கோஷங்கள் எழும்பட்டும்.

(இந்த்ரனுக்கு) அருகில் வருவீர்களாக, வெற்றி வாகை சூடும் ஜன சமூஹமே. உங்களுடைய புஜங்கள் ஸ்திரமாக இருப்பதாக. இந்த்ரன் உங்களுக்கு பாதுகாப்பை அருளட்டும். தோற்கடிக்கப்பட முடியாதவாறு எவ்வாறோ அவ்வாறு இருப்பீர்களாக.

வேத மந்த்ரங்களால் கூர்மைபடுத்தப்பட்ட அம்புக் கூட்டங்கள் பறந்து செல்லட்டும். செல்லுங்கள் நண்பரல்லாதவருள் ஊடுருவுங்கள். இவர்களில் எவர் ஒருவரும் விடுபட்டுப் போக வேண்டாம்.

உன் உயிர் நிலைப் பாகங்களில் நான் கவசத்தை சாத்துகிறேன். சோமராஜன் உன்னை அமிருதத்தால் போர்த்தட்டும். பரந்த மார்புடைய உனக்கு ஆனந்தம் உண்டாகட்டும். வெற்றி வீரனான உன்னைத் தொடர்ந்து தேவர்கள் மகிழட்டும்.

சிகை இல்லாத குமாரர்கள் தலை போன்று கும்பலாக எங்கு பாணங்கள் விழுகின்றனவோ, அங்கு எங்களுக்கு விருத்ரனை வதம் செய்பவனான இந்த்ரன் எப்பொழுதும் பாதுகாப்பை அருளட்டும்.

**"சம்சமே ... சுதினம் சமே"**

இவ்வுலக இன்பமும், மேலுலக இன்பமும், பிரியமும், அதனால் ஏற்படும் ஆசையும், அவ்வாசையின் அனுபவமும், மனதிற்கினிய உற்றாரும், மங்களமும், உயர் நலமும், நல்ல வாசஸ்தானமும், புகழும், சௌபாக்யமும் செல்வமும், வழிகாட்டும் ஆசார்யனும், தந்தை போன்று தாங்குபவனும், உடைமையின் ரக்ஷணமும், தைர்யமும்,

எல்லோருடைய அனுகூலமும், வெகுமானமும், வேத சாஸ்திர ஞானமும், போதனா சக்தியும், மக்களை ஏவும் திறமையும், பணியாட்களை நடத்தும் திறமையும், மேழிச் செல்வமும், இடையூறுகளின் ஒழிவும், யாகம் முதலிய நற்கருமமும், அதன் புண்ய பலனும், நீடித்த க்ஷயம் முதலிய நோயின்மையும், குறுகிய ஜ்வரம் முதலிய நோயின்மையும், நோயற்ற வாழ்வுக்கு உரிய மருந்தும், நீண்ட ஆயுளும், நண்பர்களும், பயமின்மையும், சுகமும், நல்ல சயனமும், பகவத் ஸ்மரணையுடன் கூடிய விடியற்காலையும், பாவனமான காரியங்களுடன் கூடிய பகற்பொழுதும் (இந்த யக்ஞத்தால் என்னிடம் கல்பிக்கப்படட்டும்)

விஹவ்யம்

**"மமாக்னே ... ஹரிவோ மேதினம்த்வா"**

அக்னியே, வேதமந்த்ரங்களை ஓதுவதில் என்னுடைய அறிவு ஒளி பலதேவதைகளை அழைக்கும் வேதத்துதிகளில் இருப்பதாக. நாங்களும் அக்னியின் ஜ்வாலையாக உடலைப் போஷிப்போமாக. சிறந்த நான்கு திக்குகளில் உள்ளவர் என்னை சரணாகதி அடையட்டும். உன்னுடைய ஆதிபத்யத்தால் போர்களில் வெல்வோமாக. இந்த்ராதிகள், மருத் கணங்கள், விஷ்ணு (ஆதித்யன்), அக்னி முதலிய அனைத்து தேவர்களும் என்னுடைய துதியில் இருக்கட்டும். பரந்த அந்தரிக்ஷம் எனக்கு பாதுகாப்பாக இருக்கட்டும். இந்த என் முன் கூறிய விருப்பத்தில் வாயு (பிராணன்) செயலைத் தரட்டும்.

என்னிடம் தேவர்கள் நற்செல்வத்தை அருளட்டும். என்னிடத்தில் தேவர்களின் ஆசி இருக்கட்டும். என்னிடத் தில் தேவர்களை அழைக்கும் துதிகள் (இருக்கட்டும்). தேவர்களின் அருள் பெற்ற யாகம் செய்தவர்கள் முன்னே ஆசிகள் அருளினர். குறைகள் இல்லா உடல்களுடன், வீரமுள்ள பிரஜைகளுடன் வாழ்வோமாக.

பாபத்தில் நான் சேராதிருப்பேனாக. எந்தவித நிலையிலும் வேண்டாம். விஸ்வே தேவர்கள் எங்களுக்கு பரிந்து பேசட்டும். பரந்து உள்ள ஆறுதேவிகளே, பரந்த சக்திகளை எங்களுக்கு அருளவேண்டும். எல்லா தேவர்களும் இங்கு வீர்யத்துடன் இருப்பீர்களாக.

பிரஜைகளிடமிருந்து பிரியமாலிருப்போமாக. பிரியமானவர்களிடமிருந்து பிரியாமலிருப்போமாக. சோமராஜனே, உன்னுடைய வெறுப்பினால் கீழ் கதி அடையாமலிருப்போமாக.

அக்னியே, முன்னே காமக்ரோதங்களை அகற்றி, ஏமாற்றப்பட்டமுடியாத அறிவைக் காப்பவன் நீ. எங்களை பாதுகாப்பாயாக. அசுர சக்திகள் எனக்கு எதிர்புறமாக செல்லட்டும். மறுபடி உன்னுடைய இந்த அறிவு பெற்ற சித்தத்தை அவர்கள் அழிக்கவேண்டாம்.

(சிருஷ்டியை) தாங்குபவர்களைத் தாங்குபவன், புவனத்தின் பதியாகிற எவர் (அந்த) சத்ருக்களை அழிப்பதில் வல்ல சவித்ரு தேவனைக் குறித்த இந்த யக்ஞத்தை அஸ்வினீ தேவர்கள் இருவர், பிருஹஸ்பதி, தேவர்கள் காக்கட்டும். யஜமானனை பலனில்லாத செயலிலிருந்து (காக்கட்டும்).

பரந்த வான வெளியை வியாபிப்பவனும், விருஷபம் போன்றவனும், பாதுகாப்பவனும் ஆன எந்த சத்யரூபி (இந்திரன்) இந்த யக்ஞத்தில் பன்முறை துதிக்கப்பட்டவன், அன்னத்தை அருள்பவன், அந்த ஒளிவீசும் குதிரை (சக்தி) களுடைய இந்திரன் எங்களுக்கும், எங்கள் பிரஜைகளுக்கும மகிழ்ந்து அருள்வாயாக. துன்புறுத்த வேண்டாம், புறக்கணிக்க வேண்டாம்.

எவர்கள் எங்கள் சத்ருக்களோ அவர்கள் கீழ் நிலை அடையட்டும். இந்த்ராக்னிகளுடைய உதவியினால் அவர்களை கீழ் நிலைக்குத் தள்ளுகிறோம். வசு, ருத்ர, ஆதித்யர்கள், (யக்ஞத்தினால்) உயரிய நிலையை அடைய முயலும் என்னை வலிந்து முயல்பவனாகவும், ஞானம் உடையவனாகவும், சக்ரவர்த்தியாகவும் செய்தனர்.

அவ்வுலகிலிருந்து இங்கடைந்த இந்திரனைத் துதிக்கிறோம். எந்த இந்த்ரன் ஞானத்தை அடைந்தவர், செல்வத்தை அடைந்தவர், சக்தியை அடைந்தவரோ (அவரை துதிக்கிறோம்) இந்த யஜமானனுக்கு செய்யப் பட்ட பல்வேறு தேவர்களைக் குறித்தும், குதிரையுடன் (சக்தி) கூடிய உன்னை (இந்த்ரனை)க் குறித்தும் செய்யப்பட்ட துதிகள் யக்ஞத்தில் மகிழ்வாயாக.

"அக்னேர் மன்வே ... பிராதார்யக்னே பிரதரான்ன ஆயு:"

அறிவுடைய, முதன்மையான, ஞானியான அக்னியுடைய (சக்திகளால் அவன்) பல ஜீவராசிகளின் ஐந்து அறிவுகளை உயிரூட்டுகிறார். அனைத்து சிருஷ்டியின் வாசஸ்தலங்கள் ஒவ்வொன்றிலும் மங்களத்தை வேண்டு கிறோம். எங்களை அவன் பாபத்திலிருந்து விடுவிக்கட்டும். எவனுடைய (சக்தி) இந்த பிராணனை உறங்கச் செய்கிறது. எது செயல்புரியச் செய்கிறது. சிருஷ்டிக்கப்பட்டதும் சிருஷ்டிக்கப்படுவதுமானதும் எவருடைய தனிப்பட்ட அதிகாரமோ அந்த அக்னி தேவனை உதவியை வேண்டி கூப்பிடுகிறேன். அவர் எங்களைப் பாபத்திலிருந்து விடுவிப்பாராக.

அறிவாளியும், முதன்மையானவனும், ஞானியும் விருத்ரனை வதம் செய்தவனும் ஆன இந்திரனுடைய ஒப்பற்ற புகழ் வாய்ந்த துதிகள் வந்தடைந்தன.

எவர் யக்ஞம் செய்பவரின் நன்கு இயற்றப்பட்ட யக்ஞத்திற்கு வருகிறவர் அவர் எங்களைப் பாபத்திலிருந்து விடுவிக்கட்டும். எவர் யுத்தத்தை முன்னின்று நடத்துகிறார், எவர் யுத்தத்தில் அனைவரையும் தன் வசம் அடக்குபவர், எவர் மூன்று வித நலங்களை சிருஷ்டிப்பவர் (பூமி, அன்னம், பசு) அந்த இந்திரனை உதவி வேண்டி கூப்பிடுகிறேன். அவர் என்னைப் பாபத்திலிருந்து விடுவிக்கட்டும்.

அறிவாளிகளான மித்ராவருணர்களே, அறிவின் செல்வமாகிய சத்யம், சக்தி இவற்றால் திடமாக நின்ற நீங்கள் எந்த (பாபத்தை) அழிக்கிறீர்கள், யார் ராஜாக்களும், ரதத்துடன் கூடியவர்களும் மேலும் யார் உக்ரமானவர் களும் அவர்கள் எங்களை உண்மை வழியைப் பின்பற்றாக் குற்றங்களிலிருந்து விடுவிக்கட்டும் உங்களுடைய நேர்வழி, ஒளி, சத்யம், தர்மம், ஆகிய சரீரம் (ரதம்) பொய்வழியைப் பின்பற்றுபவனை இகழ்ந்து அகன்று செல்கிறது. மித்ராவருணர்கள் உதவி வேண்டி கூப்பிடுகிறேன். அவர்கள் இருவரும் எங்களுடைய குற்றங்களிலிருந்து விடுவிக்கட்டும்.

வாயுவினுடைய, சவிதாவினுடைய ஞானத்தை தியானம் செய்கிறோம். எவர்கள் ஆத்மா போன்று எங்கும்

உள்ளனர். எவர்கள் மேலும் எங்களைப் பாதுகாக்கின்றனர். எங்களுடையவர்கள். அவர்களைப் பிரார்த்தித்து அடையும் சிரேஷ்டர்கள் தேவர்களிருவரின் தர்மத்தில் ஸ்திரமாக நிலைத்தனர். வாயுவையும் சவிதாவையும் உதவி வேண்டி கூப்பிடுகிறேன். துதிக்கிறேன். அவர்கள் இருவரும் எங்களை குற்றங்களிலிருந்து விடுவிக்கட்டும்.

சிறந்த ரதம் உள்ளவர்கள், ஜீவர்கள் பிரார்த்திக்கும் பொழுது காப்பதற்காக நன்கு கட்டுப்படுத்தப்பட்ட சக்திகளோடு (குதிரை) மங்களமாகச் செல்பவர்கள். தேவர்களில் எப்பொழுதும் உள்ள சக்தியானது எந்த தேவர்களுடையதோ உங்களை (துதிக்கிறேன்) அவர்கள் இருவரும் எங்களைக் குற்றங்களிலிருந்து விடுவிக்கட்டும்.

ஞானத்தை அடையாதவர்களைச் சுமந்து போய் சூரியனின் மூன்று சக்ரங்களாகிய, சரீரம், வாக், மனது மூன்றுகளால் நல்வீட்டை அருள விருப்பம் உடையவர்கள் அஸ்வினீ தேவர்களை துதிக்கிறேன். உதவி வேண்டி கூப்பிடுகிறேன். அவர்கள் இருவரும் எங்களைக் குற்றங்களிலிருந்து விடுவிக்கட்டும்.

மருத்கணங்களாகிய ஞானிகளின் (துதி) எங்களுக்கு பரிந்து பேசட்டும், பிரியமான வார்த்தைகளால். எங்கும் எல்லாவற்றையும் காக்கட்டும். விரைவாகச் செல்பவர் களும், பண்பட்டவர்களுமான (அவர்களை) பாதுகாத்தலுக் காகக் கூப்பிடுகிறேன். அவர்கள் எங்களைப் பாபங்களி லிருந்து விடுவிக்கட்டும். திடமான கூர்மையான ஆயுதங்கள் கொண்டவர்கள், வெற்றியுள்ளவர்கள், விடாமுயற்சியுள்ள தேவர்கள், போர்களில் வெற்றி கொள்பவர்கள். மருத் கண தேவர்களை துதிக்கிறேன். உதவி வேண்டி கூப்பிடுகிறேன். அவர்கள் எங்களைப் பாபத்திலிருந்து விடுவிக்கட்டும்.

விஸ்வே தேவர்களாகிய ஞானிகளின் (துதி) எங்களுக்கு அவர்கள் பரிந்து பேசட்டும். ப்ரியமான வார்த்தைகளால். விரைவாகச் செல்பவர்களும் பண்பட்டவர்களுமான (அவர்களை) பாதுகாத்தலுக்காகக் கூப்பிடுகிறேன். அவர்கள் எங்களைப் பாபங்களிலிருந்து விடுவிக்கட்டும். புருஷத்வம் மிகுந்த தெய்வ செயலால் எது இங்கு என்னை வாட்டுகிறதோ விஸ்வே தேவர்களை

துதிக்கிறேன், உதவிக்காக வேண்டி கூப்பிடுகிறேன். அவர்கள் எங்களைப் பாபங்களிலிருந்து விடுவிக்கட்டும்.

இச்சாசக்தியாகிய அனுமதி தேவி இன்று எங்களுக்கு தேவர்களைக் குறித்த யக்ஞம் இயற்ற இச்சையை அருளுவாயாக. ஹவ்ய வாஹனனாகிய அக்னியும் யக்ஞம் செய்பவர்களாகவே ஆகட்டும். அனுமதி தேவியே எங்களுடன், யக்ஞங்களை திறமையுடன் மன உத்வேகத் துடனும் செய்ய எங்களுக்கு மங்களம் அருள்வாயாக. எங்களுடைய ஆயுளையும் முழுவதாக அருள்வாயாக.

பரத்திலிருந்து வைஸ்வானரன் (பரமாத்மா) எங்களுடைய பாதுகாப்புக்காக வேத மந்த்ரமாகிய (ஆஹவனீய) அக்னியால் சுமந்து வரப்படுவாராக. வானத்தில் விரும்பி அழைக்கப்பட்டவர். அக்னி, பூமியில் விரும்பி அழைக்கப்பட்டவர், எங்கும் விரும்பி அழைக்கப் பட்டவர் ஓஷதிகளில் புகுந்தார். வைஸ் வானரரை தன் சக்தியால் அழைக்கும் அக்னி அவர் எங்களை பகலிலும் இரவிலும் துன்பத்திலிருந்து காப்பாராக.

எவர் விஸ்தரிக்க முடியாத, எல்லை இல்லாத சக்திகளால், நித்யமான செல்வங்களால் பிரதிஷ்டையாக உள்ளார்களோ அந்த த்யாவாபிருதிவியை துதிக்கிறேன் உதவி வேண்டி கூப்பிடுகிறேன். அவர்கள் எங்களை பாபத்திலிருந்து விடுவிப்பார்களாக. பரந்து உள்ளவர்கள் ஆகிய வானம் - பூமி எங்களுக்கு இடத்தை அருளட்டும். உலகைக் காப்பவர்கள் எங்களுக்கு பரிந்து பேசட்டும். த்யாவா - பிருதிவிக்களை துதிக்கிறேன். உதவி வேண்டி கூப்பிடுகிறேன். அவர்கள் எங்களைப் பாபத்திலிருந்து விடுவிப்பார்களாக.

புருஷத்வமும், இளமையும். வாய்ந்த உனக்கு, அறியாமல் எந்த எவ்விதமாகவும் பாபம் இழைத்தோமோ, அந்த பாபங்களை எல்லாவிதமாகவும் கருணையுடன் அகற்றி, கட்டுப்படாதவனும், பாபத்தால் தீண்ட முடியாதவனும் ஆகிய அக்னியே, என்னை உன்னுடைய வனாகச் செய்வாயாக. யக்ஞத்தில் வல்லவர்களான ரிஷிகள் சித்பதத்தில் வெளிப்பட்டதும், சொல்லத்தகாத ரகசியமானதுமான ஞானம்மிக்க அந்த வேத மந்த்ர செல்வங்களை எவ்வாறு (கருணையினால்) வெளி உலகுக்கு

அறிவித்தார்களோ, அதே மாதிரி கருணையுடன் நீ எங்களைப் பாபங்களிலிருந்து விடுவிப்பாயாக. அக்னியே, எங்களை வழிநடத்தி செல். எங்கள் ஆயுளை முழுமையாக கடக்கச் செய்வாயாக.

**சர்பாஹுதி:**

**"சமீசீ ... வசினீ .. ஜம்பேததாமி'**

1) கிழக்கு திசை சமீசி என்ற பெயருள்ளவள். உனக்கு அக்னி நாயகனாகவும் அஸிதன் என்ற பாம்பு காப்போனாகவும் உள்ளனர்.

❖ நாயகனையும், காப்போனையும் சரண் அடைகிறோம். நாங்கள் எவனை வெறுக்கிறோமோ, எவன் எங்களை வெறுக்கிறானோ, அவனை உங்கள் திறந்த வாயில் போடுகிறேன்.

2) தெற்கு திசை ஓஜஸ்வினி என்ற பெயருள்ளவள். உனக்கு இந்த்ரன் நாயகனாகவும் பிருதாகூ என்ற பாம்பு காப்போனாகவும் உள்ளனர்.

❖ "நாயகனையும் ... போடுகிறேன்."

3) மேற்கு திசை பிராசீ என்ற பெயருள்ளவள். உனக்கு சோமன் நாயகனாகவும், ஸ்வஜன் என்ற பாம்பு காப்பவனாகவும் உள்ளனர்.

❖ "நாயகனையும் ... போடுகிறேன்."

4) வடக்கு திசை அவஸ்தாவா என்ற பெயருள்ளவள். உனக்கு வருணன் நாயகனாகவும் திரஸ்சராஜீ என்ற பாம்பு காப்பவனாகவும் உள்ளனர்.

❖ "நாயகனையும் ... போடுகிறேன்."

5) மேல்நோக்கிய திசை அதிபத்னீ என்ற பெயருள்ளவள். உனக்கு பிருஹஸ்பதி நாயகனாகவும் ஸ்வித்ரன் என்ற பாம்பு காப்பவனாகவும் உள்ளனர்.

❖ "நாயகனையும் ... போடுகிறேன்."

6) கீழ்நோக்கிய திசை வசினீ என்ற பெயருள்ளவள். உனக்கு யமன் நாயகனாகவும் கல்மாஷக்ரீவன் என்ற பாம்பு காப்பவனாகவும் உள்ளனர்.

❖ "நாயகனையும் ... போடுகிறேன்."

**கந்தர்வாஹுதீ:**

**"ஹேதயோ நாமஸ்த ... க்ரவ்யா**
**நாமஸ்த ... ஜம்பே ததாமி"**

*1) ஹேதி என்ற பெயருள்ளவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு கிழக்கு திசையில் வாசஸ்தானம். அக்னி உங்களுடைய அம்புகள் சலில: என்பது நீங்கள் விரும்பும் நாமம்*

❖ *அவர்களுக்கும் உங்களுக்கும் நமஸ்காரம். அவர்கள் எங்களை மகிழ்விக்கட்டும். எவனை வெறுக்கிறோமோ எவன் எங்களை வெறுக்கிறானோ அவனை உங்கள் திறந்தவாயில் போடுகிறேன்.*

*2) நிலிம்பா: என்ற பெயருள்ளவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு தெற்கு திசையில் வாசஸ்தானம். பித்ருக்கள் உங்களுடைய அம்புகள். சகர: என்பது நீங்கள் விரும்பும் நாமம்.*

❖ *"அவர்களுக்கும் ... வாயில் போடுகிறேன்."*

*3) வஜ்ரின: என்ற பெயருள்ளவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு மேற்கு திசையில் வாசஸ்தானம். ஸ்வப்னம் உங்களுடைய அம்புகள் கஹ்வர: என்பது நீங்கள் விரும்பும் நாமம்.*

❖ *"அவர்களுக்கும் ... வாயில் போடுகிறேன்."*

*4) அவஸ்தாவான: என்ற பெயருள்ளவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு வடக்கு திசையில் வாசஸ் தானம். ஆப: உங்களுடைய அம்புகள் சமுத்ரம் என்பது நீங்கள் விரும்பும் நாமம்.*

❖ *"அவர்களுக்கும் ... வாயில் போடுகிறேன்."*

*5) அதிபதிகள் என்ற பெயருள்ளவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு மேல்நோக்கிய திசையில் வாசஸ்தானம். மழை உங்களுடைய அம்புகள் அவஸ்வான் நீங்கள் விரும்பும் நாமம்.*

❖ *"அவர்களுக்கும் ... வாயில் போடுகிறேன்."*

*6) கிரவ்யா என்ற பெயருள்ளவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு கீழ்நோக்கிய திசையில் வாசஸ்தானம். உணவு உங்களுடைய அம்புகள். நிமிஷ: நீங்கள் விரும்பும் நாமம்.*

❖ *"அவர்களுக்கும் ... வாயில் போடுகிறேன்."*

**அஜ்யானி**

ஊறு ஏற்படாத நிலை.

**“சதாயுதாய ... ஸ்யோன:”**

நூறு வித ஆயுதங்கள், நூறுவித பலங்கள், நூறுவித பாதுகாப்புகள், சத்ருக்களை வென்று வாகை சூடியவன் ஆகிய இந்த்ரனுக்கு (நமஸ்காரம்) மிகக் கொடிய எல்லா இன்னல்களை ஜயித்த இந்த்ரன் நமக்கு நூறு சரத் ருதுகளை வழங்குகிறார்.

எந்த நான்கு தேவயான வழிகளின் உள் த்யாவா பிருதிவி இயங்குகிறதோ, அவைகளுடைய ஊறு ஏற்படாத நிலையையும், தோல்வி அடையாத நிலையையும் உள் நின்று தாங்குவது எவரோ அவருக்கு (இந்த்ரனுக்கு) அனைத்து தேவர்களும் எங்களை முழுவதுமாக அர்ப்பித்துள்ளனர்.

(4 வழிகள் – பிரஹ்மசர்யம், கிருஹஸ்தம், வான பிரஸ்தம், சன்யாசம்–)

கிரீஷ்மம், ஹேமந்த, மேலும் வசந்தம், சரத், வர்ஷ ருதுக்கள் எங்களுக்கு மங்களமாக இருக்கட்டும். அந்த ருதுக்களுடைய நூறு சரத்களில் நாங்கள் பாதுகாப்புடனும், பயமின்றியும் இருப்போமாக.

இதுவத்சரத்துக்கு, பரிவத்சரத்துக்கு, சம்வத்சரத்துக்கு, பெரிய நமஸ்காரங்கள் செய்கிறோம். வணங்கப்பட வேண்டிய அவர்களுடைய நல் எண்ணத்தில் நாங்கள் நெடுநாட்கள் வெல்லப்படாதவர்களும், அழிக்கப் படாதவர்களுமாக இருப்போமாக.

மங்களங்களையும் நலத்துக்கு உகந்தவற்றையும் சபையில் கூடிய தேவர்கள், உன்னையும் உன்னுடைய அருளால் அடைகிறோம். பிதாவே, அந்த நீர் எனக்கு மகிழ்ச்சி அளிப்பவராக இருப்பீராக. என்னுடைய பிரஜைகள், பிரியமானவர்கள் (மனைவி) எல்லோருடைய நலத்துக்காகவும் இன்முகத்துடன் என்னுள் புகுவீராக.

**“பூதம் பவ்யம் பவிஷ்யத் ... ஸ்வாஹா நம:”**

1) உண்டானது, உண்டாகியிருப்பது, உண்டாகப் போவது வஷட் (மாறுக – லயம்) ஸ்வாஹா (அர்ப்பணம் – ஸ்திதி), நம: (சரணம் – சிருஷ்டி)

*2) ருக், சாமம், யஜுர் வேதங்கள் வஷட் ஸ்வாஹா, நம:*

*3) காயத்ரீ, த்ருஷ்டுப், ஜகதீ வஷட் ஸ்வாஹா, நம:*

*4) பிருதிவீ, அந்தரிக்ஷம், சுவர்க்கம் வஷட், ஸ்வாஹா, நம:*

*5) அக்னி, வாயு, சூர்யன் வஷட், ஸ்வாஹா, நம:*

*6) பிராணன், வ்யானன், அபானன் வஷட், ஸ்வாஹா, நம:*

*7) அன்னம், கிருஷி (விவசாயம்), மழை வஷட், ஸ்வாஹா, நம:*

*8) பிதா, புத்ரன், பௌத்ரன் வஷட், ஸ்வாஹா நம:*

*9) பூ: (ஸ்தூல அறிவு) புவ: (செயல் அறிவு) சுவ: (எண்ண அறிவு) வஷட் ஸ்வாஹா, நம:*

*இந்த அற்புதமான மந்த்ரம் காலரூபியான ஈஸ்வரனில் லயம், ஸ்திதி, ஸ்ருஷ்டி கார்யமானது ஆரம்பத்திலிருந்து முடிவுவரை கிரமமாக ஒவ்வொரு நிலையிலும் எவ்வாறு காணப்படுகிறது என்று தெரிவித்து அந்த மூன்று தோற்றங்களில் வஷட், ஸ்வாஹா, நம: என்று யக்ஞத்தில் வணங்கப்படுகிறது.*

**அதர்வ சிரஸம்**

**"இந்த்ரோத தீசோ ... வவக்ஷுருக்ரோ அஸ்திருத:"**

*ததீசியின் எலும்புகளால் 810 விருத்ர குல அசுரர்களை தோல்வி காணாத இந்த்ரன் அழித்தார். தன் சக்தியின் மூலகாரணத்தை அறிய விரும்பி (சோமரசம் பிழியும்) கற்களை அடைந்தார். அங்கு சோமரச பாத்ரத்தையும் அறிந்தார். அங்கு அறிவிக்கப்பட்டது (போல்) அறிவுகள் தியானம் செய்தன. பரமாத்மாவாகிய அந்தர் ஹித ஜ்யோதி என்று சொல்வதை, இவ்வாறு (இந்த்ரன்) சந்த்ரமாவின் வீடாகிய மனதில் (ஞானம் பெற்றான்)*

*பிருஹத் சாமகானம் செய்பவர்களே, துதிகளால் துதிப்பவர்கள், இந்த்ரனைக் குறித்து குரல்களை சப்தித்தனர். இந்த்ரன் தன்னிடம் பக்தி பூண்பவன் முன் உள்ளான். நன்கு செய்யப்பட்ட துதிகளால் சேர்ந்து உள்ளான். வஜ்ராயுதமும், ஹிரண்யமும் உள்ளவன்*

இந்த்ரன். நீண்ட பார்வை(ஞானத்திற்கு)க்கு இந்த்ரன் சூரியனை வானத்தில் ஏற்றுவித்தான்.

பல்வித ஞானங்களால் அஞ்ஞானத்தை கடக்க அருளுகிறார். இந்த்ரனே, யக்ஞங்களில் எங்களைத் தூண்டுவாயாக. ஆயிரக்கணக்கான (வாழ்க்கை) போர்களில் காப்பாயாக. அந்த இந்த்ரனைக் குறித்து யக்ஞம் செய்கிறோம், மஹத்தான அஞ்ஞானமாகிய விருத்ரனை அழிப்பதற்காக. அந்த விருஷபமாகிய இந்த்ரன் சக்திமானாக ஆனார். இந்த்ரன் போர்புரியும் இனத்தை சேர்ந்தவர். சக்திமான், பலத்தில் நிலைபெற்றவர், கம்பீர மானவன், கீர்த்தி வாய்ந்தவன், அவன் இனிய நண்பன். நம் துதிகளால் வஜ்ராயுதம் உள்ள இந்த்ரனை அடையப் பெற்றோம். பலத்துடன் கூடியவன், கீழ்நிலை எப்போதும் அடையாதவன், மீண்டும், மீண்டும் துதிக்கப்பட்டவன், தோல்வி காணாதவன்.

### பிரத்யங்கிரஸம்

**சக்ஷுஷோ ஹேதே ... சுவர்ஜ்யோதிருதாமிருதம்**

கண்களாகிய ஆயுதமே, மனதாகிய ஆயுதமே, வாக்காகிய ஆயுதமே, வேத மந்த்ரங்களாகிய ஆயுதமே. எவன் என்னைத் துன்புறுத்துவதற்காக எதிரியாகக் கருதுகிறானோ, அக்னியே, அவனை உன் ஆயுதத்தால் ஆயுதம் இல்லாதவனாகச் செய். எவன் என்னை கண்ணால், எவன் மனதால், எவன் வாக்கினால், எவன் வேத மந்த்ரங்களால் என்னை எதிரியாகக் கருதி துன்புறுத்துகிறானோ, அக்னியே, அதே ஆயுதத்தால் நீ அவனை ஆயுதமில்லாதவனாகச் செய்.

எந்த ஒன்றை இவன் மனதினால் எதை வாக்கினால், யக்ஞத்தில் யஜுஸ் மந்த்ரங்களால் ஆஹுதியால் (செய்கிறானோ) அதை மிருத்யு, நிருருதி, ஒரே குறியாக, சரீர, மனஸ்களிலிருந்து, ஆஹுதியிலிருந்து செய்த வினையை (தங்கள் அஞ்ஞான மாயையால்) அழிக்கட்டும். யாது தானர்கள், நிருருதி, துக்கம் விளைவிக்கும் சக்திகள், ராக்ஷசர்கள், பொய்யான மாயையால் இவனுடைய செய்வினையை அழிக்கட்டும். இந்திரனால் ஏவப்பட்ட சக்தி இவன் ஹவிஸைக் குலைக்கட்டும். எதை இவன்

செய்கிறானோ அது முழுமை அடையாது போகட்டும். நான் உன்னுடைய செய்யப்பட்ட யக்ஞத்தை அழிக்கிறேன். எனக்கு செய்யப்பட்ட கஷ்டத்தைக் கொடுக்கும் கெட்ட வினையை அழிக்கிறேன்.

இவன் இரு கைகளால் வினை இயற்றா வண்ணம் கீழே இருக்கச் செய்கிறேன். இவன் வாயை (மந்த்ரங்கள் சொல்ல முடியாதபடி) தளரச் செய்கிறேன். இவன் கைகளைத் தளரச் செய்கிறேன். இவன் வாயைத் தளரச் செய்கிறேன். இவை அனைத்தையும் அக்னி தேவனுடைய வேத மந்த்ரங்களால் (செய்கிறேன்). உன்னுடைய அனைத்து செயலையும் அழித்து விட்டேன். முன்காலத்தில் சொல்லப்பட்ட வஷட்கார மந்த்ரங்களால் தேவர்களுக்கு எங்களைக் குறித்து செய்யப்படுவதாக. எங்களுக்கு நன்மையாக ஆகட்டும். எங்கள் எதிரிகள் எங்களை அடைய வேண்டாம். ஹே அக்னியே, தூரத்திலும், கிட்டத்திலும் எங்களை கீழ்மைப்படுத்தும் சத்ருக்களுடைய செயல்களையும், செய்தவற்றையும் வஷட்கார மந்த்ரம் என்ற ஆயுதத்தால் அழிக்கிறேன். எவன் என்னை இரவிலும், பகலிலும், சாயங்காலத்திலும், காலையிலும், பகல் நேரத்திலும் தூற்றுகிறானோ, இந்திரனே, இப்பொழுதே வஜ்ர ஆயுதத்தால் அந்த சத்ருவை கீழ்ப்படுத்துகிறோம்.

அனைத்து வாழும் உயிர்களை பிராணன் ரக்ஷிக்கிறது. பலவிதமாக பல உயிர்களை காப்பவனாய் அவர் இந்த அனைத்து சிருஷ்டிக்கும் ஸ்வாசமாக உள்ளார்.

எந்த தேவர் தேவர்களுள் பலவிதமான விபூதிகள் உள்ளே இருக்கிறார் அனைத்தையும் சூழ்ந்து ஸ்வாசத்தால் உள் செல்லும் காளை. இந்த ஸ்வாச செயலே மனதிலிருந்து பிராணனை செயல்புரியச் செய்கிறது- தேவர்களுடைய ஹவிஸை இவரே முதன்மையான அனுபவிக்கிறார். மனதுடைய எண்ணம் இவர். கடந்த காலங்களையும் எதிர்காலத்தையும் மறைக்கிறார். தேவர்களில் இவரே முதன்மையானவர். இந்த தேவர் எங்களுள் சஞ்சரிக்கும் பிராணனை கொண்டு வரட்டும்.

இந்த துதி தேவர்களுடன் கூட மனதையும் ஸ்ரேயஸ் மிகுந்த கர்மம் யக்ஞத்தைப் புரிவோனையும் தாங்கியது, என்னுடைய இந்த வாக் என்ற ஹவிஸ் மகிழச் செய்யட்டும்.

பரந்து ஆட்சிபுரியும் தேவி, முன்னே அழைத்துச் செல்பவள், ஹவ்யத்தை கொண்டு செல்பவள், இடையூறு இல்லாத செழிப்பை உடையவள். எவளால் ரூபங்களை பலவாறு கூறுகின்றனர். பரம்பொருளும், ரூபங்களை சிருஷ்டி செய்பவளும் ஆன இவளிடம் தேவர்கள் ரூபங்களை (காண்கின்றனர்) சரளமானவள், பரந்து ஆட்சி புரிபவள் ஆகிய அந்த வாக்தேவி இந்த துதியாகிய ஹவிஸால் மகிழட்டும்.

தேவர்களின் கண்ணும், ஜ்யோதியும் (சூர்யன்) அமிருதத்தில் அலங்கரிக்கப்பட்டவனும். இவருடைய விக்ஞானத்திற்காக பலவாறு முயற்சிக்கப்படுகிறது. அவருடைய அருளை அடைவோமாக. ஞானப்பார்வை குறைவு எங்களுக்கு வேண்டாம். ஆயுளை எங்களுக்கு நீட்டிக்கட்டும். குறையில்லாத பார்வையுடன் நாங்கள் (இருப்போமாக). ஜீவர்கள் ஞான ஒளியை அடைவோமாக. சுவர்க்கத்தின் ஞான ஒளியையும் மேலும் சாகாத தன்மையும் (அடைவோமாக).

**"ஸ்ரோத்ரேண ... சர்வம் பபூவ"**

செவியினால் மங்களமானதையும் மேலும் உண்மை யானதையும் கேட்கின்றனர். செவியினால் பலவிதமாக உயர்நிலையை அடைய உந்தும் வாக்கை (கேட்கின்றனர்). செவியினால் மகிழ்ச்சியும், மஹத்தானதும் கேட்கப் படுகிறது. செவியினால் எல்லா திசைகளிலிருந்தும் கேட்கிறேன். எதனால் கிழக்கில் மேலும் தெற்கில், மேற்கு திசையில் வடக்கில் இருந்து கேட்கப்படுவதாக, அந்த இந்த செவி பலவிதமாக உயர்நிலையை அடைய உந்துவது. வட்டமான பரிதியின் அனைத்தையும் தொடும் அரம் போன்று செவி அமைந்துள்ளது.

**"சிஹ்மே வ்யாக்ர ... ஆயுஷேதீர்கா யுத்வாய கிருண்ஹாமி"**

சிம்மத்தில், புலியின் மேலும் எவள் சர்ப்பத்தில், பிரகாசத்தில் அக்னியில் சூர்யனில், இந்த்ரிய சக்தியை மங்களங்கள் நிறைந்த எந்த தேவி சிருஷ்டித்தாளோ அவள்

ஒளியுடன் கூடியவளாய் எங்களிடம் வரட்டும். எவள் ஆளும் வல்லமை உடையவர்களில், துந்துபியை முழங்கு பவர்களிடம், குதிரையின் கனைப்பில், புருஷனுடைய சக்தியில், இந்த்ரிய சக்தியை மங்களங்கள் நிறைந்த எந்த தேவி சிருஷ்டித்தாளோ அவள் எங்களிடம் ஒளியுடன் கூடியவளாய் வரட்டும். எவள் யானையில், வேங்கைப் புலியில், எவள் விந்துவில், பிரகாசத்தில், குதிரைகளில், புருஷர்களில், பசுக்களில் இந்த்ரிய சக்தியை மங்களங்கள் நிறைந்த எந்த தேவி சிருஷ்டித்தாளோ, அவள் எங்களிடம் ஒளியுடன் கூடியவளாய் வரட்டும். ரதம் அல்லது சரீரத்தில், இந்திரியங்களில், காளையின் வலிமையில், காற்றில், மழையில், வருணனின் பொசுக்கும் வெயிலில், இந்திரிய சக்தியை மங்களங்கள் நிறைந்த எந்த தேவி சிருஷ்டித்தாளோ அவள் எங்களிடம் ஒளியுடன் கூடியவளாய் வரட்டும்.

அரசியாய் உள்ளாய். பல்வேறு அனைத்துக்கும் அரசியாய் உள்ளாய். சக்ரவர்த்தினியாய் உள்ளாய். தன்னையே ஆளும் அரசியாய் உள்ளாய்.

இந்த்ரனுக்காக உன்னை தேஜஸ்க்கு (ஒளி) ஆக தேஜஸ்வானைச் சேர்கிறேன். இந்த்ரனுக்காக உன்னை, ஓஜஸ்க்கு (பலம்) ஆக ஓஜஸ்வானைச் சேர்கிறேன். இந்த்ரனுக்காக உன்னை, பயஸ்க்கு (மனோவீர்யம், பிரஜை) ஆக பயஸ்வானைச் சேர்கிறேன். இந்த்ரனுக்காக உன்னை ஆயுஸ்(ஆயுள்)க்காக ஆயுஷ்மானைச் சேர்கிறேன்.

ஒளியாய் உள்ளாய். அதை உன்னிடம் வேண்டு கிறேன். என் முகம் ஒளி மிக்கதாய் இருக்கட்டும். ஒளிமிக்கது நீண்ட காலம் என்னிடம் இருக்கட்டும். எங்கும் உள்ள ஒளிமிக்கவனால் என்னை ஒளியினால் நிறைவு செய்.

ஓஜஸ் (பலம்) ஆக உள்ளாய். அதை உன்னிடம் வேண்டுகிறேன். என்னுடைய முகம் பலம் பொருந்தியாக இருக்கட்டும். பலம் என்னிடம் நீண்டகாலம் இருக்கட்டும். எங்கும் உள்ள பலமிக்கவனால் என்னை பலத்தால் நிறைவு செய்.

பயஸ் (வீர்யம்) ஆக உள்ளாய். அதை உன்னிடம் வேண்டுகிறேன். என்னுடைய முகம் வீர்யம்

பொருந்தியதாய் இருக்கட்டும். வீர்யம் என்னிடம் நீண்டகாலம் இருக்கட்டும். எங்கும் உள்ள வீர்யவானால் என்னை வீர்யத்தால் நிறைவு செய்.

ஆயுள் ஆக உள்ளாய். அதை உன்னிடம் வேண்டுகிறேன். என்னுடைய முகம் ஆயுள் பொருந்தியதாக இருக்கட்டும். ஆயுள் என்னிடம் நீண்ட காலம் இருக்கட்டும். எங்கும் உள்ள ஆயுள் மிக்கவனால் என்னை ஆயுளால் நிறைவு செய்.

அக்னியே, இவனை ஆயுளாலும், பிரஹ்ம வர்ச்சஸா (ஞான ஒளி)லும் நிறைவு செய். வருண சோமராஜர்களே பிரியமான ரேதஸ் (வீர்யசக்தி) (அருளுக). அதிதிதேவியே, தாய்போல் எங்களுக்கு அபயம் அளி. விஸ்வே தேவர்கள் மூப்பு உடைய முழு ஆயுள் வரை சௌக்யத்தை அருளுவார்களாக.

ஆயுளாய் உள்ளாய். எங்கும் ஆயுளாய் உள்ளாய். எல்லாருடைய ஆயுளாய் உள்ளாய். எல்லாம் ஆயுளாய் உள்ளாய். எங்கிருந்து எண்ணம் போல் வேகம் கொண்ட காற்றோ, எங்கிருந்து நதிகள் பாய்கின்றனவோ அவை எல்லாவற்றினுடைய ஒளியினால் உன்னை அபிஷேகம் செய்கிறேன்.

சமுத்ரம் போல் அறிவதற்கு அரிதானவள். (ஜ்யோதிஷ்டோம யக்ஞத்தில் ஹவிஸ்) சோமன் போன்று நீ ஹவிஸ். எல்லாவற்றினுள்ளும் இருக்கும் அக்னி போன்றவள். நீ சூரியன் போல ஜ்யோதியினால் எங்கும் சூழ்ந்தவள்.

ஆபஸ்களில் (புனித நீர்களில்) யார் ஓடுகின்றவற்றில் ரசமோ அவனை நான் எங்களுக்கும், எங்கள் சந்ததிகளுக்கும் தேஜஸ்க்கு (ஒளி), பிரஹ்மவர்ச்சஸ்க்கு (ஞான ஒளி), கைக் கொள்கிறேன்.

ஆபஸ்களில் யார் நுரைகளில் ரசமோ அவனை நான் எங்களுக்கும் எங்கள் சந்ததிகளுக்கும் ஓஜஸ்(உடல் வலிமை)க்கு, வீர்யத்திற்கு கைக் கொள்கிறேன்.

ஆபஸ்களில் யார் நடுவினுள் ரசமோ அவனை நான் எங்களுக்கும் எங்கள் சந்ததிகளுக்கும் செழிப்புக்கும், சந்ததிகள் அடையவும் கைக் கொள்கிறேன்.

ஆபஸ்களில் யார் வேள்விக்கு உகந்த நீர்களின் ரசமோ அவனை நான் எங்களுக்கு எங்கள் சந்ததிகளுக்கு நீண்ட ஆயுளுக்காக கைக் கொள்கிறேன்.

**"அஹமஸ்மி பிரதமஜா ... சர்வேதபந்தி"**

ருதத்தின் முதல் தோற்றமாக நான் உள்ளேன். தேவர்கள் வேண்டும் அமிருதத்தினுடைய முன்னே உள்ள மூலம். எவன் என்னைக் கொடுக்கிறானோ அவன் நிச்சயமாக என்னைப் போன்றவனே. நான் அன்னத்தையும் (அனுபவத்தையும்) அன்னத்தை உண்பவனையும், உண்கிறேன் (அனுபவிக்கிறேன்) (ருதம்) அக்னிக்கும் முன்பு அன்னத்தை எரிக்கிறது. எப்படி அவர்கள் இருவருமே அன்னத்தை முன்பு அடைகிறார்களோ அதே மாதிரி பின்னர் (உண்டான அன்னத்தையும், அன்னத்தை அனுபவிப்பவனையும்) அனுபவிப்பவளாக நான் (இருக்கிறேன்). ருதத்தினுடைய பசுக்களாகிய ஜீவர்கள் அன்னம் (அனுபவம்) குறித்து திறந்த வாயுடன் உள்ளனர். ஞானிகள் இதை அறிகின்றனர். அறிவிலிகள் அலை கின்றனர்.

ஒருவனை அடைகிறேன். இன்னொருவனிடம் செல்வதில்லை. நான் அன்னத்திலும், அதை ஆளும் சக்தியாகவும் நடமாடுகிறேன். உண்டு மகிழக் கொடுத்த அன்னத்தைப் போல் ஆறுமடங்காக திரும்பி செல்கிறேன். அன்னமாகிய என்னை எந்த மனிதன் கொடுக்கிறானோ, இந்த அன்னம் அவனுக்காக மேல் உலகில் வைக்கப் பட்டிருக்கிறது. விஸ்வே தேவர்கள் பிதுருக்களால் காக்கப்பட்ட (சிராத்த) அன்னம் எது அருந்தப்படுகிறதோ, (யக்ஞத்தில்) போடப்படுகிறதோ, எடுத்துச் செல்லப் படுகிறதோ (காகம், பசு?) நூறு மடங்காக என் உடலில் உண்டானது.

ஈஸ்வரனும் அன்னபூர்ணேஸ்வரியும் ஆன இருவரும் ஒருமுறை சங்கல்பத்தினால் சிருஷ்டிக்கப்பட்ட அமிருதத்தி னால் (ஞானத்தினால்) பல் விதமான வானுலங்களையும் கூட பூவுலகங்களையும் நிரப்பினர். அந்த ஞானத்தை அருந்துபவர்களை (அறிபவர்களை) தேவர்கள் துன்புறுத்துவதில்லை. அப்படி ஞானத்தை அடைந்தவன் பிறந்தால் கீழான பிறவியை அடைவதில்லை.

அன்னத்தை பிராணன், அபானன் என்று கூறுகின்றனர். அன்னத்தை மிருத்யு என்றும் அதையே வாழ்வு என்றும் கூறுகின்றனர். பிரம்ம ஞானம் உடையவர்கள் அன்னத்தையே மூப்படைவது என்று சொல்கின்றனர். பிரஜைகளின் சந்ததி உற்பத்தி செய்யும் சக்தியை அன்னம் என்று சொல்கின்றனர். அறிவிலிகள் பிறருக்கு வழங்காமல் அன்னத்தை அடைகின்றனர். உண்மையைச் சொல்கிறேன். அப்படிப்பட்ட அன்னம் அறிவிலிக்கு சாவேதான். நண்பனாக நமக்கு உதவும் அரியமன் என்ற சூரியனை அறிவிலி மகிழ்விப்பதில்லை. தான் மட்டும் உணவு அருந்துபவன் (அனுபவிப்பவன்), வெறும் பாவி ஆகிறான்.

நான் மேகம் இடி, பொழியும், மழையாக இருக்கிறேன். என்னை எல்லோரும் உண்கின்றனர். (அனுபவிக்கின்றனர்). எல்லோரையும் நான் உண்கிறேன் (அனுபவிக்கிறேன்). நான் உண்மைப் பொருளும், அமிருதமுமாக உள்ளேன். என்னிடமிருந்து எல்லா ஆதித்யர்களும் மேலிருந்து வெப்பம் பொழிகின்றனர்.

(பின்குறிப்பு: இந்த அன்ன சூக்தத்தில் குறிப்பிடப் படும் அன்னம் ஸ்தூலமாக நாம் உண்ணும் அன்னம் என்று மட்டும் பொருள் கொண்டால் சூக்தத்தின் பொருள் கோர்வை இருக்காது. ஆகவே அன்னம் என்பது அருந்தப்படுவது (அனுபவிக்கப்படுவது) ஸ்தூல தேஹத்தி னால் அன்னமாக, பிராணனால் ரசமாக, மனதால் எண்ணமாக, புத்தியால் விஞ்ஞானமாக என்று பொருள் கொண்டால் கோர்வையான பொருள் புலப்படும்.

சத்சித்ஆனந்தமாகிய ருதத்திலிருந்து சிருஷ்டி கார்யத்திற்காக முதலில் தோன்றியவள். இவள் பெயரை அன்னபூர்ணேஸ்வரி எனக் கொள்ளத்தகும். ருதம் ஈஸ்வர/ஈஸ்வரியின் ஒருமித்த மூலமாதலால் அன்ன பூர்ணேஸ்வரி தோன்றிய உடனே அவள் பாகமான ஈசுவரனும் தோன்றுகிறார். இதுவே "மஹாந்தெள" என்ற சொல்லுக்குப் பொருளாகக் கொள்ளப்பட்டிருக்கிறது).

**"தேவீம் வாசம ஜனயந்த ... மனுஷ்யா வதந்தி"**

தேவர்கள் வாக் தேவியை சிருஷ்டித்தனர். அண்டமெங்கிலும் உருவெடுத்த உயிர்க் கூட்டங்கள்

அவளை பேசுகின்றன.' அவள் எங்களிடம் இனிமையான ஓசையை செழுமையான பொருளுடன், வீர்யத்துடன் கறப்பவளாய் வாக் என்ற தேனு இங்கு வருவாளாக. புலனுக்கு எட்டாதவற்றை எந்த வாக் சொல்கின்றது. தேவர்களுடைய அரசி, இனிமையான ஓசையுடன் அமர்ந்தாள். நான்கு வீர்யம் வாய்ந்த வேதரசங்களைக் கறந்தாள். எங்கெல்லாம் புலனுக்கெட்டாத இடங்களில் இவளுடைய வேதரசங்கள் சென்றன.

எல்லை இல்லாததை, ஹ்ருதய ஆகாசத்திலிருந்து நிர்மாணம் செய்யப்பட்டதை வானுலகு, பூவுலகுகளை, போகங்களை எவளிடம் தேவர்கள் பெற்றனர். ஏகாக்ஷரமாகிய (ஓம் என்ற) பிரணவத்தையும், இரண்டு பதங்கள் ஆகியவளையும் (வேதத்தில் கர்மம், ஞானம்), ஆறுபதமும் (6 வேதாங்கங்கள்) ஆன வாக்தேவியை கூடி தேவர்கள் அனைவரும் வாழ்கிறார்கள். தேவர்கள், அனைவரும் வாக்தேவியை அண்டி வாழ்கின்றனர். வாக்தேவியை அண்டியே கந்தர்வர்கள், பசுக்கள், மனுஷ்யர்கள் (வாழ்கின்றனர்). வாக்கில் இந்த எல்லா புவனங்களும் நிலைபெற்றுள்ளன. அந்த ஈஸ்வரனின் பத்னி எங்களுடைய துதியைக் கேட்டு மகிழட்டும். அழிவு இல்லாத வாக் தேவி ருதத்தின் முதற்தோற்றம் வேதங்களின் தாய். அமிருதத்தின் மூலம். அவள் எங்களுடைய யக்ஞத்திற்கு மகிழ்ச்சியுடன் வருவாளாக. புத்தியை தூண்டும் தேவி என்னிடம் மங்களமான குரலாக இருக்கட்டும்.

ஞானிகளும், மந்த்ர கர்த்தாக்களுமான ரிஷிகள், தேவர்கள் தபஸினால் எவளைத் தேடி அறிந்தனர். அந்த வாக்தேவியைக் குறித்து ஹவிஸினால் யக்ஞம் செய்கிறோம். மங்களமான காரியங்களுடைய லோகத்தில் அவள் எங்களைத் தாங்கி நிற்கட்டும்.

நான்கு நிலைகளில் வாக் ஒழுங்கு செய்யப்பட்டது (பரா, பஸ்யந்தீ, மத்யமா, வைகரீ), ஞானிகளான வேத விற்பன்னர்கள் அவற்றை அறிந்தனர். மூன்று நிலைகளில் உள்ள வாக் மறைத்து வைக்கப்பட்டுள்ளன. அவை (இங்கு) அசைவதில்லை. நான்காவது நிலையில் உள்ள வாக்கை மனுஷ்யர்கள் கூறுகின்றனர்.

**"ஸ்ரத்தயாக்னி: ... வர்த்தயாமசி"**

உறுதியான நம்பிக்கையினால் அக்னியில் சமித் ஹோமம் செய்யப்படுகிறது. நம்பிக்கையினால் ஹவிஸ்ஸை அடைகிறான். நம்பிக்கை மங்களங்களுக்கு அதிபதியான பகனின் சிரஸில் (பிரதானமாக) வைக்கப்பட்டுள்ளது என்று வாக்கினால் அறிந்து கொள்கிறோம். கொடுப்பவ னுடைய பிரியம் நம்பிக்கையே. கொடுக்க விரும்புவ னுடைய பிரியம் நம்பிக்கையே. கொடுப்பவற்றிலும், யக்ஞங்களிலும் நம்பிக்கையில் பிரியத்தை அருளுவாயாக. எவ்வாறு தேவர்களிலும் அசுரர்களிலும் உக்ரமான தபஸ்களில் நம்பிக்கையும் வைக்கப்பட்டதோ அவ்வாறு கொடுப்பதிலும் யக்ஞங்களிலும் எங்களுக்கு நம்பிக்கை உண்டாகச் செய்.

பிராணன் அறிவுகளைக் காப்பவர்கள் யக்ஞம் செய்யும் தேவர்கள் நம்பிக்கையை உபாசிக்கின்றனர். ஹ்ருதய பூர்வமாக எண்ணத்தின் மூலமாக நம்பிக்கையை (உபாசிக்கின்றனர்). நம்பிக்கையினால் ஹவிஸ் ஹோமம் செய்யப்படுகிறது. நம்பிக்கையை காலையில் யக்ஞத்தில் ஆராதிக்கிறோம். நம்பிக்கையை மத்யம், பகல் முற்றும், நம்பிக்கையை சூர்யனுடைய அஸ்தமனத்தில் நம்பிக்கையே.

நம்பிக்கை இங்கு என்னை ஊக்குவிக்கட்டும். நம்பிக்கையே தேவர்களை சூழ்ந்துள்ளது. நம்பிக்கையே இந்த அனைத்து ஜகத்தையும் (நடத்துவிக்கிறது). விருப்பங் களின் தாயான நம்பிக்கையை ஹவிஸால் வளரச் செய்கிறோம்.

**"பிரஹ்மஜக்ஜானம் ... ஆஹுதீனாம்"**

பிரஹ்மத்தினின்று உதித்த முதன்மையான ஞானம். முன்பு சத்யம்தான் மூலம் உண்மைப் பொருள் அல்லாத சிருஷ்டியும் அதன் பின் விரிந்தது. நல்ல ஒளிபொருந்திய சூரியன் மூலமாகவும் எல்லையில்லாத அவன் கிரணங்கள் வியாபிக்கும் இடங்கள் லோகங்களாகவும் ஆயின என்பது இதற்கு ஒரு ஆழ்ந்த உபமானம்.

விராட் சிருஷ்டியின் தந்தையும், செல்வங்களின் அதிபதியான காளையும், அனைத்து ரூபங்களானவன் அந்தரிக்ஷத்தினுள் புகுந்தார்.

குழந்தை ரூபம் கொண்ட பிரஹ்மம் ஆக இருக்கும் அவரை, வேதமந்த்ரங்களால் வளர்பவனை, ரிக் மந்த்ரங்களால் துதிக்கின்றனர்.

பிரம்மம் தேவர்களை சிருஷ்டித்தது. பிரம்மம் இந்த எல்லா ஜகத்தையும் (சிருஷ்டித்தது) பிரம்மத்திலிருந்து க்ஷத்ரிய சக்தி நிர்மாணிக்கப்பட்டது. பிரம்ம ஞானியை பிரம்மம் தன் ஆத்மாவிலிருந்து (சிருஷ்டித்தது) இவருள் இந்த லோகங்கள். இவருள் இந்த அனைத்து ஜகத்தும். பிரஹ்மமே சிருஷ்டியின் முதல்வர். அதனால் அவருடன் சமமாக இருக்க எவரும் அருகதையுள்ளவர் அல்ல.

பிரம்மனே 33 தேவர்கள். பிரம்மனே இந்த்ரன், பிரஜாபதி. பிரம்மன்தான் எல்லா சிருஷ்டிகளும். அனைத்தும் படகில் போல உள்ளே நன்கு வைக்கப் பட்டுள்ளன. நான்கு திசைகளிலும் பிரசித்தமாய் உள்ள அக்னிகள் இந்த எங்களுடைய யக்ஞத்தை (யாக குண்டத்தில்) உதித்து முன்னிருந்து நடத்தட்டும். நெய்யை (வேத மந்த்ரங்களை) அருந்திக் கொண்டு மூப்பு அடையாததும், வீர்யமுடையதும் (ஆகிய அக்னி முன்னிருந்து நடத்தட்டும்). ஆஹுதிகளுக்கு பிரம்மமே சமித்தாக ஆகிறது.

(குறிப்பு: இந்த கடைசி நான்கு வரிகள் மறைமுகமாக வேறுபொருளை பின்வருமாறு குறிப்பதாகக் கொண்டால் இந்த வரிகளும் சர்வம் பிரம்மம் மயம் என்பதை குறிப்பதைக் காணலாம்.

நான்கு விருப்பங்கள் (அ-து) தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் எங்கள் (வாழ்க்கை) யக்ஞத்தை முன்னின்று நடத்தட்டும். வேத மந்த்ரங்களால் உந்தப்பட்ட சீரிய எண்ணங்கள் இந்த ஆசைகளை முறைப்படி விருத்தி அடைவித்து அழியாது நல்ல வீர்யத்துடன் அனைத்தும் ஆகிய பிரம்மமே இந்த நான்கு அக்னிகள் வளர சமித் (அல்லது) விஷயமாக ஆகிறது.

**"ஆகாவோ அக்மன் ... உபேந்த்ர தவவீர்யே"**

ஞான ஒளிக்கதிர்கள் வந்தன. மேலும் மங்களத்தை செய்தன. எங்கள் மனக் கொட்டிலில் இருந்து மகிழட்டும். பல விஷயங்களைக் கொண்டவை, பல ரூபங்களையும்

பதார்த்தங்களையும் படைப்பன எங்களில் இங்கு இருக்கட்டும். பரமேஸ்வரனின் அனுக்ரஹத்திற்காக ஞான சூரியன் உதய காலத்தில் முதலாக ஞான அமிருதத்தை கறப்பவை. ஈஸ்வரன் துதிப்பவனுக்கு முயற்சி உள்ளவனுக்கு உதவுகிறான். தன்னை மறைத்துக் கொள்வதில்லை. மீண்டும் மீண்டும் ஞானச் செல்வத்தைக் கொடுக்கிறான். பக்தனுடைய ஞானத்தை விருத்தி செய்து கொண்டு மாயையால் வெல்லப்படாத இடைவிடாத ஞானத்தில் நிலை பெறச் செய்கிறான். ஞானச் செல்வங்கள் அழிவதில்லை. கள்ளர்கள் ஏமாற்றுவதில்லை. நீண்டகாலம் அந்த செல்வங்களால் தேவர்களை குறித்து யக்ஞம் செய்தும், பிறருக்கு கொடுத்தும் வாழ்கிறவன் உண்மை யாகவே அவற்றால் பரமேஸ்வரனுடன் இணைந்திருக் கிறான்.

அவற்றைப் பேணுவதால் கீழானதும், குழம்பிய மனதும் அடைவதில்லை. மிக்கத் துதிக்கப்பட்டவனை, பயமில்லாதவனை (பரமேஸ்வரனை) பின்பற்றி மனிதனை ஐயம் இல்லா நிலைக்கு அழைத்துச் செல்கின்றன.

பகனுடைய ஞானஒளி இந்த்ரனுடைய ஞானஒளி, முதன்மையான சோமனுடைய ஆஹாரம் எனக்கு இருக்கட்டும். தேவசமூஹத்துடன் கூடிய இந்த்ரன், ஞான ஒளி இவற்றை விரும்புகிறேன். ஹ்ருதயத்தாலும் மனதாலும் இந்த்ரனை (துதிக்கிறேன்)

கொழுப்பு சக்தி இளைத்த சரீரத்தை புஷ்டி யாக்குவது போல், கீழ்த்தரமான பேச்சை நல்ல ரூபமுடையதாய் மங்கள வாக்காக, மங்களமுடைய வீடாகச் செய்கிறீர்கள். உங்களுடைய சக்தி மிகுந்த சொல் சபைகளில் சொல்லப்படுகிறது.

பல விஷயங்களைக் கொண்டவை, நல்ல ஞான பூமியில் மேய்பவை, தூயதான நீர் (புனிதமான காரியங்கள்) அருந்துபவை ஆகிய உங்களை தீயதை விரும்புபவன் தன் அதிகாரத்தின் கீழ் கொண்டு வர வேண்டாம். ருத்ரனுடைய ஆயுதங்கள் உங்களைச் சுற்றிலும் (தீய சக்திகளை) அகற்றுவதாக.

எங்கள் முகங்கள் எப்பொழுதும் ஞானக் கதிர் களோடு உறவாடட்டும். ஈஸ்வரனுடைய ஞானவீர்யத்தை

அடையட்டும். ஈஸ்வரனே உன்னுடைய ஞானவீர்யத்தில் கலப்பேனாக.

(பி.கு. இந்த மந்த்ரங்களை இந்த்ரன், பசுக்கள் என்றும் பொருள்படுத்தி கூறலாம்.)

**"தாசூர்யா ... ஜாயதேபுன:"**

ஒளியால் பார்வை அருளும் சூர்யனும், மனதால் சந்திரனும் ஆகிய ஜகத்தை தாங்குபவர்கள் இருளை அழித்தனர், வானத்தில் (ஸ்தூல, மன) ஒளிச் செல்வம் நிறைந்தவையாக பிரகாசிப்பவை. வேதத்தை ஆத்மாவாகக் கொண்டு வேதத்தை பின்பற்றுவர்களால் கூட இந்த தேவர்களின் விரதங்கள் முழுதுமாக எப்பொழுதுமே அறியப்படவில்லை. (ஸ்தூல உலகம், மன உலகம் என்ற) இரு உலகங்களில் பரவிய இருவர். இரண்டு எல்லைகளை சுற்றிவரும், சமுத்ரத்தின் மேல் தூசியோடுள்ள வானத்தில் போல் ஒளிக்கதிர்களை பரப்பிக் கொண்டு சூர்யன், சந்த்ரன், உலக உணர்வின்மையை அழித்துக் கொண்டு சஞ்சரிக்கிறார்கள்.

தலைவிகளான இருவரும் (பார்வை, மனது) ஒளிமிக்க, எல்லாம் அறிந்த இருவர், சூர்யா, சந்த்ரமஸ் காணப்படும் எல்லாச் செல்வங்களையும் அளிக்கும் பரந்து நிற்கும் ஒளி. சிறந்த அறிவு படைத்தவர், சக்தி படைத்தவர்கள் அவர்கள் எங்களை நடத்திச் செல்லட்டும்.

புவனங்கள் அனைத்தும் வியாபிக்கும் விரிவடையும் ஒளிப்பெருக்கு, விரைவில் செல்லும், காணும் சக்தியில் அளவில்லாத கிரணங்கள் கொண்ட சூர்யனும் சந்திரனும் விரும்பும் செல்வத்தைக் காண்பிப்பவர், அறிவாளிகள், ஒளி மிகுந்த நல்ல வானத்தில் கூடி சஞ்சரிப்பவர்கள்.

இவருடைய (ஈஸ்வரனுடைய) ஞானம் ஏழு (நதி) உலகங்களைத் தாங்கிச் செல்கிறது. வானம், பொறுமை வாய்ந்த பூமி, உடல் காணப்படுகின்றன. எங்களுள் சூர்யா சந்திரமஸினால், உறுதியான நம்பிக்கையில், எந்த, எல்லாவற்றையும் அறியும் ஈஸ்வரனைக் குறித்து முயல் கிறார்களோ (அவர்கள்) நன்கு அறிவதில் (வல்லவரா கின்றனர்). ஸ்தூல, மனோ ஆகாசங்களில் முன்னும், பின்னுமாக தங்கள் சக்திகளால் சுற்றிவரும் இந்த இரண்டு

குழந்தைகள் விளையாடுகின்றன. வேறு உலகங்களை பார்க்கிறேன். வேறு விதமான ருதுக்களைத் தாங்கிக் கொண்டு மறுபடி (பிறவி) உண்டாகிறது.

**"ஹிரண்யவர்ணா: ... அதிருபம்யதாவ:"**

பொன் வண்ணத்தினர், தூயவர்கள், தூய்மைப் படுத்துபவர்கள், எவர்களிடம் பிறந்தவர் கஸ்யபர். எவர்களிடம் இந்திரன் (பிறந்தவர்). அக்னியை எவர்கள் கர்ப்பத்தில் தாங்கினர். பல ரூபம் உடையவர்கள். அவர்கள் ஆபஸ்தேவதைகள் எங்களுக்கு பிரியமுள்ளவர்களாக ஆகட்டும். எவருடைய ராஜா வருணன் உண்மை, ருதத்துக்கு விரோதமானவற்றைப் பார்த்துக் கொண்டு மத்தியில் செல்கிறார் ஜனங்களுடைய இனிமையைப் பொழிபவர்கள், தூய்மையானவர்கள், எவர்கள் தூய்மைப் படுத்துபவர்கள் அவர்கள் ஆபஸ்தேவதைகள் எங்களுக்கு சுபமான நன்மை செய்பவர்களாக ஆகட்டும்.

எவர்களுடைய தேவர்கள் வானத்தில் சோமபானம் செய்கின்றனர். எவர்கள் அந்தரிக்ஷத்தில் பலவாறு உண்டா கின்றனர். எவர்கள் பூமியில் அமிருதமயமான அன்னங் களைப் பிணைத்து வைத்துள்ளனர். ஒளிபொருந்திய அவர்கள் ஆபஸ்தேவதைகள் எங்களுக்கு பிரியமாக ஆக கடவார்களாக.

மங்களமான பார்வையினால் என்னைப் பாருங்கள். ஆபஸ்தேவதைகளே மங்களமான உடல்களால் என்னுடைய சருமத்தையும், எல்லா அக்னிகளையும் ஸ்பரிசியுங்கள். நலங்கள் அனைத்தும் செறிந்தவர்கள் உங்களை வேண்டுகிறேன். என்னிடம் ஞான ஒளி, வலிமை, வீர்யம் இருக்க அருள்வீர்களாக.

மங்களமான ஆபஸ்தேவதைகள் முகத்திலிருந்து வரும் (நெய் போன்ற) ஒளி மிகுந்த வேதத்துதிகளை, அக்னீஷோம யக்ஞத்தில் தாங்குகின்றனர். ஆபஸ் தேவதைகள் தான் வீர்யம் மிக்க அமிருத ரசத்தை அருகில் கொணர்ந்து என்னை பிராணனுடனும், பிரஹ்மவர்ச்ச ஸுடனும் கூட்ட வருகை புரிகின்றனர்.

அப்பொழுது பார்க்கிறேன். மேலும் கேட்கிறேன். எங்களுடைய முகத்திலிருந்து வேதவாக் கோஷம்

செல்லுகிறது. எப்பொழுது உங்களை நினைக்கிறேனோ அப்பொழுது அமிருதத்தைப் பருகுபவனாக (ஆகிறேன்).

**"நாசதாசீத் ... புவனானி தாரயன்"**

சூன்யமும் இல்லை, வஸ்துவும் இல்லை, அப்பொழுது அந்தரிக்ஷம் இல்லை, சுவர்க்கம் இல்லை. பரத்தில் எது என்ன உள்ளே மறைந்திருந்தது. எங்கே யாருடைய பாதுகாப்பில்? நீர்கள் இருந்ததா, உள்ளே செல்ல முடியாததும், ரகசியமானதும் (அறியப்படவில்லை) மிருத்யுவும், அமிருதமும் அப்பொழுது இல்லை. ராத்ரியுடன் பகலும் இல்லை. சித் என்ற உணர்வு காற்றில்லாமல் தன் சக்தியினாலேயே தான் ஒன்று மட்டும் இருந்தது. அதைவிட வேறு ஒன்று மேல் எங்கும் இல்லை. அறியாமை இருள் இருந்தது. (இரண்டாவது இல்லாமை யால்) உணர்வு என்ற சிதாகாசம் முழுதும் அறியாமையால் மறைக்கப்பட்டிருந்தது. இந்த பிறவாதது (உணர்வு) வெறுமையால் மூடப்பட்டு எது இருந்தது. அந்த உணர்வினால் அதனுடைய சக்தியின் மஹிமையால் அறியாமை என்ற இருளிலிருந்து ஒன்று தோன்றியது. முதலாக அந்த ஒன்றிலிருந்து காமம் (அ) சங்கல்பம் உண்டானது மனதிலிருந்து தோன்றிய ரேதஸ்(விதை)ஸாக எது இருந்தது. ஹ்ருதயத்தில் முயன்று தேடி ஞானிகள், அறிவாளிகள், இருப்பதினுடைய (நான் என்ற அறிவு) இல்லாததில் (ஒன்றேயான உணர்வு) அறிந்து கொண்டனர்.

குறுக்கும் நெடுக்கும் பரந்த கிரணங்கள் கீழும் இருந்தன, மேலும் இருந்தன. ரேதஸை தாங்கியவர்கள் இருந்தனர். மஹிமை பொருந்தியவர்கள் இருந்தனர். தங்கள் சக்தியால் செய்யப்படுவதும் பரத்தின் கிரியாசக்தியால் செய்யப்படுவதும் (தோன்றின).

இப்படி யார் அறிந்தனர்? யார் இங்கு சொன் னார்கள்? எங்கிருந்து வந்து உண்டானது? எங்கிருந்து இந்த தேவர்களால் செய்யப்பட்ட சிருஷ்டி இந்தப் பக்கம் (வந்தது)? இதை உண்டாக்கிய பின் எவ்வாறு அளவோடு ஆனது என்று யார் அறிவார்? இந்த சிருஷ்டி அளவோடு ஆனது. இது பரிபாலிக்கப்படுகிறதா? இல்லையா? இந்த சிருஷ்டியின் ஈஸ்வரன் யார்? எல்லையில்லாத

பரவெளியில் அவர் தன் சிருஷ்டியை அறிந்துள்ளாரா இல்லை அறியவில்லையா?

எது தான் சிருஷ்டியாகிற காடு யார் அதில் விருக்ஷமாக இருந்தார் (ஜீவராசி). எங்கிருந்து வானம் பூமியை செய்த திறமைமிக்க தச்சன்? எது மேல் இருந்து கொண்டு புவனங்களை தாங்கி நின்றது என்று ரிஷிகள் (அறிஞர்கள்) மனதினால் தவம் புரிந்து கொண்டு கேட்கின்றனர். பிரம்மமே காடு, அவரே விருக்ஷம் ஆகவும் இருந்தார். எங்கிருந்து வானம் பூமியை செய்த திறமையுள்ள தச்சன் என்பதை ஞானிகளின் மனதில் தோன்றியதை உங்களுக்கு சொல்கிறேன். பிரம்மம் அனைத்துக்கும் மேல் புவனங்களைத் தாங்கிக் கொண்டு நின்றது.

**"பிராதரக்னிம் ... ஸ்வஸ்திபி: சதா ந:"**

காலையில் அக்னியை, இந்திரனை துதிக்கிறோம். காலையில் அஸ்வினீ தேவர்களை, பகனை, பூஷணை, பிருஹஸ்பதியை சோமனை மேலும் ருத்ரனை துதிப்போமாக.

அதிதியின் புத்ரனை, வெற்றி உள்ளவனை, வீர்யமுள்ளவனை பகனை நாம் காலையில் துதிப்போமாக. எவன் பகனை நினைப்பவனாக, அவனுக்கு அருந்துவாயாக என்று ஹவிசை அளிக்கிறானோ ஏழையாயினும், ராஜாவாயினும், துன்புறுவன் ஆயினும் பகன் அவனுடைய முதன்மையான பாதுகாவலன்.

பகனே, வழிகாட்டுபவனே, சத்யமான மங்களங்களை அளிப்பவனே, இந்த புத்தியை மேலான வழியில் செலுத்துவாயாக என்று பிரார்த்திக்கப்பட்டது. பகனே அன்னத்தை எங்களுக்கு உண்டாக்குவாயாக. பசுக்களால் (ஞானத்தால்), குதிரைகளால் (சக்திகளால்), சிறந்த மனிதர்களால் (சத் சங்கம்) ஜனங்களோடு இருப்போமாக. மேலும் இப்பொழுது எல்லா நலன்களையும் உடையவர்களாக இருப்போமாக. மேலும் சாயங்காலத்தில் மேலும் மத்தியில், பகல் வேளையில், மேலும் உதிக்கின்றதால் சீர்களை வழங்கும் சூர்யனுடைய, தேவர்களுடைய நல் எண்ணத்தில் இருப்போமாக.

தேவர்களே, பகனே பகவத் குணங்கள் உள்ளவனாக இருக்கட்டும். அவனால் நாங்கள் பகவத் குணங்களை உடையவர்களாக இருப்போமாக. அந்த பகனாகிய உன்னை எல்லாமாக யாகத்தில் தொழுகிறேன். அந்த பகனாகிய ஸ்ரீ எங்களுடைய முன்னால் வந்து இங்கே இருப்பாயாக. விடியற்காலையில் வானத்தில் செல்பவனாகிய ததிக்ராவா என்னும் சூர்யனை புனிதமான பதத்தை அடைய தொழுபவர்கள் போல நம்மை நோக்கியிருக்கும் சீமான் ஆகிய பகனை எங்களை நோக்கி ரதத்தை போல (எங்கள்) துதிகள் சுமந்து வரட்டும். அஸ்வம் போன்ற சக்திகளால், ஞானத்தால், வீர்யத்தால் எங்களுக்கு ஞானசூரியன் உதயமாகி எங்கள் சரீரங்களை பிரகாசிக்கட்டும். மங்களமானவை, வேத ஞானமாகிய நெய்யைக் கறப்பவர்கள், எங்கும் நிறைந்தவை பாக்யமுள்ளவற்றால் நீங்கள் எப்பொழுதும் எங்களைக் காப்பீர்களாக.



# நக்ஷத்ர ஸூக்தம்

நக்ஷத்ரங்கள் பரமாத்மாவின் ஸ்தூல ரூபம். (நக்ஷத்ராணி ரூபம் - புருஷ ஸூக்தம்) அவையே அதிதி தேவியுமாகும். அனேக கோடி பிரம்மாண்டங்களை நக்ஷத்ரங்களே சிருஷ்டித்து, பரிபாலித்து அழிக்கின்றன. வெவ்வேறு நக்ஷத்ரக் கூட்டங்களின் ஆதிக்கத்தில் ஒவ்வொரு பிரம்மாண்டமும் இயங்குகிறது. தேவர்கள் இந்த நக்ஷத்ரக் கூட்டத்திலிருந்து தங்கள் சக்திகளைப் பெறுகின்றனர். தேவர்கள் பிரம்மாண்டத்தில் பல ஸ்தூல லோகங்களை ருதத்துக்குக் கட்டுப்பட்டு சிருஷ்டிக் கின்றனர். ஒவ்வொரு ஸ்தூல லோகத்திற்கும் தங்கள் சக்திகளை உள்ளடக்கிய ஒரு சூர்யனை ஸ்தாபிக்கின்றனர்.

நாம் வாழும் சூர்யமண்டலம், பல சூர்யமண்டலங் களில் ஒன்றாகும். நக்ஷத்ரதேவதைகளைக் குறித்த வேத மந்த்ரங்கள் நமக்கு அனைத்து நல்ல பயன்களையும் அருளுகின்றன.

**"அக்னிர்ன: .. கவிதேததாது"**

அக்னியும் கிருத்திகைகளும் எங்களைக் காக்கட்டும். இந்த நக்ஷத்ரங்கள் இங்கு பிரகாசமாகக் காணப்படுகின்றன. எங்கள் ஹவிஸ் யக்ஞத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. எவருடைய கிரணங்கள் ஒளிர்கின்றன, ரூபங்கள் பிரகாசிக்கின்றன. இந்த உலகங்கள் அனைத்தும் எவருடையவோ அவர் கிருத்திகைகள் கூட வசிக்கின்றவர். அக்னி எங்களை நல்வழியில் தாங்கட்டும்.

**"பிரஜாபதே ... உபயாது யக்ஞம்"**

பிரஜாபதியே, உங்களுடைய பத்னீ ரோஹிணீ வரட்டும். அனைத்து ரூபங்களுமானவள், பெரியவள், பலவித ஒளிபடைத்தவள். அவள் எங்களை யக்ஞத்தி னுடைய நல்வழியில் நிலைநிறுத்தட்டும். எவ்வாறு பிரஜைகளுடன் (நூறு) சரத்ருதுக்கள் வாழ்வோமோ (அவ்வாறு செய்யட்டும்) ரோஹிணீ தேவி வடக்கிலிருந்தும் கிழக்கிலிருந்தும் அனைத்து ரூபங்களை மகிழ்வுடன்

*(தரிப்பவள்). தேவர்களுக்கு பிரியமானவள், பிரஜாபதியை ஹவிஸ்ஸினால் வளரச் செய்பவள், யக்ஞத்தை வந்து அடையட்டும்.*

**"சோமோ ராஜா ... சதுஷ்பதே"**

*சோமராஜன் மிருகசீர்ஷ நக்ஷத்ரத்துடன் வருபவன். மங்களமான நக்ஷத்திரம் இவனுடைய பிரியமான வாசஸ்தலம். ஜனங்களில் பலவிதமாக விருத்தி அடைபவன். வீர்யம், பிரஜைகளை யஜமானனிடத்தில் தரிக்கட்டும். எந்த உன்னுடைய மிருகசீர்ஷ நக்ஷத்திரம் பிரியங்களில் சிறந்த பிரியம் உள்ளதாக இருக்கிறது. அதற்கும், உனக்கும் சோமனே ஹவிஸால் ஆராதிப்போமாக. மங்களம் எங்களுக்கு, இரண்டு கால், நான்கு கால் ஜீவராசிகளுக்கு அருளுவாயாக.*

**"ஆர்த்ரயா ... நுததாம் அராதிம்"**

*ஆர்த்ராவுடன் ருத்ரன் உத்தம ஸ்திரீபுருஷராக எங்களை (வந்து) அடையட்டும். சிறந்தவர், அழிவில்லாத தேவர்களின் தலைவர். இவருடைய நக்ஷத்ரத்தை ஹவிஸால் ஆராதிக்கிறோம். எங்களுடைய பிரஜைகளையும் மேலும் எங்கள் வீரர்களையும் துன்புறுத்த வேண்டாம். ருத்ரனுடைய ஆயுதம் எங்களைச் சுற்றிலும் (தீயவற்றை) விலக்கட்டும். ஆர்த்ரா நக்ஷத்ரம் எங்களுடைய ஹவிஸால் மகிழட்டும். எல்லா துன்பங்களிலிருந்தும் விடுவிப்பவர்களான இருவரும் தீயதை எண்ணும் சத்ருவை விரட்டி அடிக்கட்டும்.*

**"புனர்னோ ... அப்யேது பாத:"**

*அதிதி தேவி மறுமுறை எங்களை அடையட்டும். மீண்டும் இரண்டு வசுக்கள் (வைஸ்வானர அக்னி, ஆஹவனீய அக்னி) எங்களை வந்து அடையட்டும். எங்களுடைய இந்த யக்ஞத்திற்கு தேவர்கள் அனைவரும் மீண்டும் வரட்டும். மீண்டும் மீண்டும் யக்ஞத்தை இயற்றுவோமாக. உண்மையாகவே தேவி அதிதி, கட்டுப்படாதவள், சிருஷ்டி அனைத்தின் ரக்ஷகி; ஜகத்தினுடைய பிரதிஷ்டையாயுள்ளவள், மீண்டும் இரு வசுக்களை ஹவிஸால் வளர்ப்பவள் தேவர்களுக்கும் இருப்பிடமானவள். பிரியத்தோடு இங்கு அடைவாளாக.*

*(பி.கு: இந்த மந்த்ரம் புனராதேய தத்துவத்தை ஒட்டி அமைந்துள்ளது. ஜீவராசிகள் சிருஷ்டியிலேயே அதிதி, தேவர்கள், அக்னிகளால் ஆளப்படுகிறார்கள். இங்கு அவர்களை வழிகாட்டும் கடவுள்களாக ரிஷி மீண்டும் பிரதிஷ்டை செய்கிறார்).*

**"பிருஹஸ்பதி: ... ஸ்யாம"**

பிருஹஸ்பதி முதலில் தோன்றியவர். திஷ்யம் நக்ஷத்ரம் உடன் உண்டானது. சிறந்தவர் தேவர்களின் போர்களில் வெல்பவர். இப்பொழுது எல்லா திசைகளிலும் (இவர்) அபயம் இருக்கட்டும். திஷ்யம் முன்புறம் மேலும் மத்தியிலும் பிருஹஸ்பதி எங்களைச் சுற்றிலும் ரக்ஷிக்கட்டும். அபயம் (எங்களுக்கு) செய்யட்டும். சிறந்த வீரத்தின் பதிகளாக இருப்போமாக.

**"இதகும்ஸர்பேப்யோ ... மதுமத் ஜுஹோமி"**

ஆஸ்ரேஷா எவற்றுடைய எண்ணங்களை பின்பற்றுகிறதோ, அந்த சர்ப்பங்களுக்கு இந்த ஹவிஸ் இருக்கட்டும். எவை அந்தரிக்ஷத்தை, எவை பூமியை தன் வசப் படுத்துகின்றன, அந்த சர்ப்பங்கள் எங்கள் யாகத்துக்கு வருகை புரிபவர்கள். எவை சூர்யனுடைய பிரகாசத்திலும் உள்ள சர்ப்பங்கள், எவை வானத்தில் தேவியுடன் ஸஞ்சரிக்கின்றன. எவர்களுடைய விருப்பத்தை ஆஸ்ரேஷா (நிறைவேற்ற) உடன் செல்கிறதோ அந்த சர்ப்பங்களுக்கு இனிமை மிகுந்த (ஹவிஸ்ஸை) ஆஹுதி செய்கிறேன்.

**"உபஹூதா: ... உசன பிரவித்ம"**

மகத்தில் ஆராதிக்கப்பட்டவர்கள், எண்ணம் போல் வேகம் உடையவர்கள், நல்ல செயல் உடையவர்கள், நல்ல செயல்புரிந்தவர்கள், எவரோ அந்த பித்ருக்கள் எங்களுடைய (மக) நக்ஷத்ரத்தை குறித்து செய்யும் யக்ஞத்தை அடைந்தவர்கள். தங்கள் சக்திகளால் யக்ஞத்தில் கொடுக்கப்பட்ட (ஹவிஸினால்) மகிழட்டும். எவர்கள் தீயினால் எரிக்கப்பட்டவர்கள், எவர்கள் தீயினால் எரிக்கப்படாதவர்கள், எவர் இந்த லோகத்தை (மகம்) அடைந்திருக்கின்றனரோ, அவர்களில் எவர்களை நாங்கள் அறிவோமா எவர்களை அறியவில்லையோ,

மகங்களில் நன்கு செய்யப்பட்ட யக்ஞத்தினால் மகிழட்டும்.

**"கவாம் பதி: ... ரிஷபோ ரோரவீதி"**

அர்யமனே, ஞானப்பசுக்களாகிய பல்குனிகளுடைய நாயகனாய் உள்ளாய். நீ வருணனுடைய நண்பன், இனிய மனமுடையவன், செல்வங்களை அளிப்பவனை, வாழ்பவனை வாழ்விப்பவனை தொடர்ந்து செல்கிறோம். எவனால் இந்த புவனங்கள் அனைத்தும் வெல்லப்பட்டன. எவனுடைய அறிவை தேவர்கள் பின்பற்றுகின்றனர் அந்த ராஜா அர்யமான் மூப்பில்லாதவன். சக்தி மிகுந்தவன், பல்குனிகளுடைய காளை உறுமுகிறது.

**"ஸ்ரேஷ்டோ ... சதமாதம் மதேம"**

தேவர்களில் ஸ்ரேஷ்டனாக பகவானே பகனே நீ உள்ளாய். அந்த உன்னை பல்குனீக்கள் அறிந்துள்ளனர். அந்த பகனுடைய செல்வங்களால் க்ஷத்ரிய வீரம், மூப்பில்லாமை, வீர்யம், ஞானம் மிகுந்தவை, சக்தி மிகுந்தவை அடைவோமாக. பகன்தான் கொடுப்பவன். பகனேதான் சிறந்த கொடையாளி. பகன் பல்குனீ தேவிகளை அடைந்தார். பகனுடைய சிருஷ்டிகளை அடைவோமாக, எங்கு தேவர்களுடன் விருந்துண்டு களிப்போமோ. (அங்கு)

**"ஆயாதுதேவ: ... பிரகுவாதியக்ஞம்"**

சவித்ரு தேவன் வருவாராக. தங்கமயமான, நன்கு செல்லும் ரதத்தில் நல்ல நலங்கள் உடைய, செய்திறன் உடைய, அளவில்லாத கொடையாளியான, புண்யஸ்வரூபனை, ஹஸ்த (தேவனை) கூட்டிக் கொண்டு எங்களிடம் வருவாராக. ஹஸ்த நக்ஷத்ர தேவன் சிறந்த அமிருதத்தை அருளுவாராக. இதைக் கொடுப்பவரை வலது கையினால் பிடித்துக் கொள்வோமாக. எவன் ஹஸ்த நக்ஷத்ரம் குறித்து யக்ஞம் செய்கிறானோ, அவனுக்கு இப்பொழுது சவிதா அருளுவாராக.

**"த்வஷ்டா ... சமனக்துயக்ஞம்"**

அழகான நிதம்பம் உடைய, குமரியான, பிரகாசிக்கும் சித்ரா நக்ஷத்ரத்தை த்வஷ்டா அடைகிறார். அவளிடம் வசித்துக் கொண்டு அனைத்து புவனங்களிலும் தேவர்கள்,

மனிதர்கள் முதலிய ரூபங்களை சிருஷ்டித்து கொண்டு (உள்ளார்) எங்களுக்கு அந்த த்வஷ்டாவும், பிரகாசமாய்த் தெரியும் சித்ரா நக்ஷத்ரமும், அளவில்லாத நலங்களைத் தருவார்களாக. எங்கள் பிரஜைகளை வீரம் மிக்கவர்களாக அடைவிப்பாளாக. யக்ஞத்தை ஞானத்தாலும் சக்தி களாலும் கூடி இருக்கச் செய்யட்டும்.

"வாயுர் நக்ஷத்ரம் ... விஸ்வா"

நிஷ்ட்யா (ஸ்வாதீ) நக்ஷத்ரத்தை வாயு அடைகிறார். கூரிய கொம்புகளை உடையவர், கர்ஜிப்பவர், மாதரிஸ்வா (எ) வாயு புவனங்களை செலுத்திக் கொண்டு தீய எண்ணம் கொண்ட எதிரிகளை அழிப்பாராக. அந்த எங்கள் துதிகளை வாயுவும், நிஷ்ட்யாவும் கேட்பார்களாக. எவ்வாறு அனைத்து இன்னல்களையும் கடந்து செல்வோமோ அவ்வாறு அந்த நக்ஷத்ரம் எங்களுக்கு நலங்களை அருளுவதாக.

"தூரமஸ்மத் ... நுததாம் அராதிம்"

எங்கள் எதிரிகள் பயமடைந்தவர்களாகத் தொலை வாகச் செல்லட்டும். இந்த்ராக்னி தேவர்களே, அப்படிச் செய்யுங்கள். விசாக நக்ஷத்ர தேவியே, அதைக் குறித்த யக்ஞத்தை எங்களுக்கு தேவர்கள் மகிழ்ந்து அருளட்டும். முன்னும் பின்னும் எங்களுக்கு பயமின்மை இருக்கட்டும். நக்ஷத்ரங்களின் அதிபத்னியாகிய விசாகாவே, ஸ்ரேஷ்ட மானவர்களும், உலகினுடைய ரக்ஷகர்களும் ஆகிய இந்த்ராக்னி தேவர்கள் சுற்றிலும் உள்ள சத்ருக்களை அழிப்பவர்களாக, தீய எண்ணம் கொண்ட அழிக்கும் எதிரியை அழிப்பார்களாக.

"பூர்ணாபஸ்சாத் ... யஜமானாய யக்ஞம்"

(சிருஷ்டிக்கு) பின்னே முழுமையானவள், முன்னே முழுமையானவள், மத்தியிலும், வெல்வதற்காக பூரணத்வம் உடையவள். அவளிடம் தேவர்கள் வசிப்பவர்களாக உத்தமமான சுவர்க்கத்தில் இங்கு மகிழ்விக்கப்படட்டும். பூமிதேவி, நல்ல ஞானத்தால் ஒளி வீசுபவள், யுவதி, மகிழ்ச்சியுடன், பூரணத்வம் உடையவள், பிரகாசிப்பவள், தீயவை அனைத்தையும் (ஒழித்து) யஜமானனுக்கு பரந்த நலங்களை அளிப்பவளாக, அனைத்தையும் வளர்

விப்பவள் உதயமானாள். (நக்ஷத்ரங்கள் பிரம்மத்தின் ரூபம் இது (லக்ஷ்மீ) கிரியாசக்தியை குறித்து சொல்லப்படுகிறது (ஹ்ரீஸ்சலக்ஷ்மீஸ்சதே பத்ன்யௌ)

**"ருத்யாஸ்ம ... ஹிரண்யயைர் விததைரந்தரிக்ஷே"**

மித்ரதேவனே, ஹவிஸ்களால், நமஸ்காரத்தால் (சரணாகதி) அடைந்து செழித்து வாழ்வோமாக. (அவருடன்) நட்பு என்பது எங்களுக்கு இருக்கட்டும். அனுராதா நக்ஷத்ரக்கூட்டங்களை ஹவிஸால் வளரச் செய்பவர்களாக நூறு சரத்ருதுக்கள், வீரமுள்ள பிரஜைகளுடன் வாழ்வோமாக. முன்னே பல ஒளி வீசும் (அனுராதா) நக்ஷத்ரம் உதயமானது. அனுராதாவை அடையச் செய்வது என்று எதைச் சொல்கிறார்களோ, அந்தரிக்ஷத்தில் பரந்து உள்ளவையான பொன்மயமான, தேவமார்க்கங்களால் மித்ரன் அனுராதா நக்ஷத்திரத்தை அடைகிறார்.

**"இந்த்ரோ ஜ்யேஷ்டாம் ... யஜமானாய லோகம்"**

இந்த்ரன் ஜ்யேஷ்டா நக்ஷத்ரத்தை அடைந்தார். எதில் விருத்ரனை யுத்தத்தில் வெற்றி கொண்டாரோ அதில் நாம் அமிருதத்தை அடைபவர்களாக தீமைகளையும், யக்ஞத்தில் தடைகளையும் கடப்போமாக. பலத்த கோட்டைகளை தகர்ப்பவனுக்கு, காளைக்கு, தைர்ய சாலிக்கு, வெற்றி கொள்பவனுக்கு, தாராள மனமுடைய வனுக்கு இந்த்ரனுக்கு ஜ்யேஷ்டாவிடமிருந்து தேன் போன்ற இனிமையான பயன்களை அடைவிப்பவர்கள் யஜமானனுக்கு உலக அனுபவத்தை பரந்ததாகச் செய்யட்டும்.

**"மூலம்பிரஜாம் ... சிவம் அஸ்து"**

மூலம் வீர்யமுள்ள பிரஜைகளை அருள்வாயாக. நிருருதி என்ற பறைச்சி வெளியே தள்ளப்பட்டதாகச் செல்லட்டும். ஞானத்தாலும், செல்வத்தாலும் நிறைந்த நக்ஷத்ரம் ஒவ்வொரு நாளும் யஜமானனாகிய எனக்கு அளிக்கட்டும். நாளும் எங்களை நல்வழியில் தாங்கட்டும். மூலம் நக்ஷத்ரம் என்று எது சொல்லப்படுகிறதோ அந்த வாக்கினால் பறைச்சியான நிருருதியை அழிக்கிறேன். மங்களம் பிரஜைகளுக்கு, மங்களம் எனக்கு.

**"யாதிவ்யா ஆப: ... ஸ்யோனா பவந்து"**

எந்த தேவ லோகத்தில் ஆபஸ்கள் ஆத்ம சக்தியால் உண்டாயின. எவை அந்தரிக்ஷத்தில் மேலும் எவை பூமியில் எவைகளில் அஷாடா நக்ஷத்ரங்கள் விருப்பத்தை நோக்கி உடன் செல்கின்றன. அந்த ஆபஸ்கள் எங்களிடம் பிரியமுள்ளவைகளாக ஆகட்டும். எவை கிணறுகளிலோ, எவை நதிகளிலோ, சமுத்ரங்களிலோ, எவை தடாகங் களிலோ மேலும் எவை நனைந்த வஸ்திரங்களிலிருந்து புரோக்ஷணம் செய்யப்பட்டவையோ, எவற்றில் அஷாடா நக்ஷத்ரங்கள் அமிருதத்தை அருந்துகின்றன. அந்த ஆபஸ்தேவதைகள் எங்களிடம் பிரியமுள்ளவையாக ஆகட்டும்.

**"தன்னோ ... காமம் உபயாதுயக்ஞம்"**

எங்களுடைய அந்த வேத கோஷத்தை விஸ்வே தேவர்கள் கேட்கட்டும். அந்த யக்ஞத்தை அஷாடாக்கள் வந்து அடையட்டும். அந்த நக்ஷத்ரம் பரந்து விரிந்து பசுக்களுக்கும் யஜமானனுக்கும் உழவு, மழை முதலியன வற்றை அளிக்கட்டும். பிரகாசிக்கும் கன்னிகைகள், யுவதிகள், நன்கு அலங்கரிக்கப்பட்டவர்கள், வினைகளை இயற்றியவர்கள், மங்களங்களைச் செய்தவர்கள், வீர்ய முடையவர்களைச் செய்தவர்கள், வீர்ய முடையவர்கள், விஸ்வே தேவர்களை ஹவிஸினால் வளரச் செய்பவர்கள், அஷாடா நக்ஷத்ரங்கள் விருப்பத்தை அடையச் செய்யும் யக்ஞத்தை உடன் அடையட்டும்.

**"யஸ்மின் ... அனுஜானன்து காமம்"**

எதனில் பிரஹ்மா இவை அனைத்தையும் மேலும் அந்த லோகத்தையும் மேலும் இந்த அனைத்தையும் அடைந்தார். அந்த அபிஜித் நக்ஷத்ரம் விரும்பப்படும் செல்வங்களை வென்று எங்களுக்கு அளிக்கட்டும். வானுலகும், பூவுலகும் பிரஹ்மாவினால் அடையப் பட்டன. அந்த ஒளிவீசும் அபிஜித் நக்ஷத்ரம். அதனில் நாம் எல்லா போர்களையும் (வாழ்க்கை) வெல்வோர்மாக. அந்த நக்ஷத்ரமும் தேவர்களும் எங்கள் விருப்பங்களை அறிவார்களாக (அபிஜித் நக்ஷத்ரம் உலக வழக்கில் இல்லாதபடியாலும், பிரம்மாவுடன் சம்பந்தப்பட்டிருப்ப

தாலும் இந்த நக்ஷத்ரம் மற்ற நக்ஷத்ரங்களையும், லோகங்களையும் சிருஷ்டிக்கும் மூலம் என தோன்றுகிறது).

"ஸ்ருண்வந்தி ... கிருண்வதீ"

அமிருதத்தை காப்பவளாகிய ஸ்ரோணா (சொல்வதை) கேட்கின்றனர். இவளுடைய புண்யம் மிக்க வாக்கை நானும் கேட்கிறேன். உலகங்களின் அரசியை, தேவியை, விஷ்ணு பத்தினியை இவளை மேற்கு திசையில் ஹவிஸ்ஸினால் ஆராதிக்கிறோம். மஹர் உலகத்தின் பிருதிவி, அந்தரிக்ஷம், வானுலகம் என்று மூன்று பரந்த அடிகளாக விஷ்ணு (எ) சூர்யன் சுற்றுகிறார். அந்த துதிகளை விரும்பும் ஸ்ரோணா யஜமானனுக்கு புண்யஸ்லோகங்களை அருளுபவள்.

"அஷ்டௌ தேவா ... ஆகன்"

எட்டு ராஜாக்கள் வசுக்கள் என்ற தேவர்கள், நான்கு தேவிகள், மூப்பில்லாதவர்கள் ஸ்ரவிஷ்டாக்கள். அவர்கள் யக்ஞத்தைக் காக்கட்டும். வருடந்தோறும் அமிருதம், மங்களம், யக்ஞம், எங்களை வசுக்கள் முன்னே காக்கட்டும். அவர்கள் வலப்பக்கமாக ஸ்ரவிஷ்டாக்கள் கூட வரட்டும். புண்யமுள்ள நக்ஷத்ரத்தை அடைவோமாக. எங்களுடைய கேடு எண்ணும் சத்ரு வரவேண்டாம்.

"க்ஷத்ரஸ்ய ராஜா ... பேஷஜானி:"

மஹாராஜனாகிய, வருணன் வலிமை அனைத்துக்கும் அரசன். நக்ஷத்ரங்களில் சிறந்தது சதபிஷக். அந்த இருவரும் தேவர்களுக்கு நீண்ட ஆயுள் அருளினர். நூறு, ஆயிரக் கணக்கான ஓஷதிகளை அருளினர். எங்களுடைய யக்ஞத்தை ராஜாவருணன் அடையட்டும். எல்லா தேவர் களும் (யக்ஞத்தை) அடையட்டும். அந்த மகிழ்ந்துள்ள சதபிஷக் நக்ஷத்திரம் எங்களுக்கு நீண்ட ஆயுளையும் ஓஷதிகளையும் அருளியது.

"அஜ ஏகபாத் ... அனுயன்திசர்வே"

அஜன் ஏகபாத் என்ற சூர்யன் கிழக்கில் உதித்தான், அனைத்து ஜீவராசிகளை மகிழ்வித்துக் கொண்டு. அவனுடைய சிருஷ்டியை அனைத்து தேவர்களும் அடைகின்றனர். ப்ரோஷ்டபதா நக்ஷத்ரத்தில் இருந்து கொண்டு அமிருதத்தை காப்பவர்கள் (தேவர்கள்)

எங்களுடைய சமித்தினால் ஜ்வலித்துக் கொண்டிருப்பவர்; உக்ரமானவர். அந்தரிக்ஷத்தில் வளர்ந்து செல்கிறார். அந்த சூர்யன் தேவன் அஜன் ஏகபாதனை ப்ரோஷ்டபதாவில் உள்ள அனைவரும் (தேவர்கள்) பின்பற்றுகின்றனர்.

**"அஹிர்புத்னியம் ... நமஸா உபசத்ய"**

பிரகிருதியிலிருந்து அக்னி முதன்மையாக வருகிறான். தேவர்களுடைய மேலும் மனிதர்களுடைய சிறந்த தேவன் சோமனைத் தொழும், சோமனை அருந்துபவர்களான பிரம்ம ஞானிகள், புரோஷ்டபதா நக்ஷத்ரங்களில் வசிப்பவர்கள் அனைவரும் அவனை ரக்ஷிக்கின்றனர். நால்வகையான கர்மதேவர்கள் புரோஷ்டபதாவினர் என்று யாரைச் சொல்கின்றனரோ அவர்கள் வணங்க வேண்டிய முதன்மையான பிரகிருதியிலிருந்து தோன்றிய அக்னியை நமஸ்காரங்களால் நெருங்கி, காக்கின்றனர்.

**"பூஷா ... யஜமானாய யக்ஞம்"**

பூஷணும் ரேவதியுடன் வழி நடக்கிறார். நலன்களை அருளுபவர்கள், ரக்ஷிப்பவர்கள், செல்வம் கொழிக்கும் வாசஸ்தலங்களை அளிப்பவர்கள், இந்த அளிக்கப்பட்ட ஹவ்யங்களால் மகிழ்பவர்கள், எங்களை மங்களமான நல்வழியில் நடத்திச் செல்லட்டும். யக்ஞத்தையும் சிறிய கன்றுகளையும் காக்கட்டும். ரேவதி எங்களுடைய பசுக்களையும் (ஞானம்) அஸ்வங்களையும் (சக்தி) (காக்கட்டும்) கூட பூஷண் வரட்டும். பலவாறு ரூபமுடைய அன்னத்தை ரக்ஷிப்பவர்கள் யஜமானனுக்கு சக்தியையும் யக்ஞத்தையும் அளிக்கட்டும்."

**"தத் அஸ்வினௌ ... அஸ்வயுக்ப்யாம்"**

அந்த அஸ்வினிகள் சக்தியாகிய குதிரையை சேணம் கட்டியவர்கள் உடன் செல்லட்டும். கட்டுப்பாடுடைய குதிரைகளால் மங்களமாகச் செல்பவர்கள். தங்கள் நக்ஷத்ரத்தை ஹவிஸ்ஸினால் ஆராதிப்பவர்கள். அமிருதத் தால் தீண்டப்பட்டவர்கள், யஜுஸ் ஸ்துதிகளால் தூண்டப்பட்டவர்கள். தேவர்களின் மருத்துவர்கள், ஹவ்யத்தை தாங்கிச் செல்பவர்கள். அனைவருக்கும் தூதர்கள். அமிருதத்தைக் காப்பவர்கள், அவர்கள் நக்ஷத்ரத்தை மகிழ்வித்துக் கொண்டு செல்லட்டும்.

குதிரைகளை சேணம் கட்டிய அஸ்விநிகளுக்கு நமஸ்காரம் செய்கிறோம்.

**"அபபாப்மானம் ... பரந்து"**

பாப புருஷனை பரணீ தூரே கொண்டு செல்லட்டும். ஒளிவிடும் மங்களமான வழியில் மஹத்தின் மஹான் ஆகிய பகவான் ராஜா யமன் எங்களுக்கு அபயம் அளிக்கட்டும். எந்த நக்ஷத்ரத்தில் ராஜா யமன் செல்கிறாரோ, எதில் இவரை தேவர்கள் ராஜாவாக அபிஷேகம் செய்தார்களோ இவருடைய அந்த ஒளிவிடும் (நக்ஷத்ரத்தை) ஹவிஸால் ஆராதிக்கிறோம். பாப புருஷனை பரணீ தூரக் கொண்டு செல்லட்டும்.

**"நிவேசனீ ... சுவீரம்"**

வசுக்களின் செல்வங்களாகிய எல்லா ரூபங்களிலும் (ஸ்தாவர, ஜங்கம) உள் புகுந்து நன்கு செல்பவள். எல்லாவற்றையும் உள்ளிருந்து ஆட்டி வைப்பவள். ஆயிரம் வகையில் புஷ்டி அளிக்கும் நலங்களை அருளும் மங்களமான பாக்யங்கள் பொருந்தியவள் (இச்சாசக்தி). அவள் எங்களிடம் ஒளியுடன் சூழப்பட்டவளாய் அடைந்தவள். அமாவாஸ்யையில் வசிக்கும் உனக்கு தேவர்கள் எந்த பாகதேயத்தை கௌரவித்து அளித் தார்கள். அந்த நீ, எல்லா நலங்களையும் கொடுப்பவளே, எங்களுடைய யக்ஞத்தைப் பூர்த்தி செய். பாக்யமுள்ளவளே எங்களுக்கு செல்வத்தையும், நல்ல பிரஜையையும் அருள்வாயாக.

(பி.கு.: நக்ஷத்ர சூக்தத்தில் வரும் பௌர்மாஸீ தேவதா, அமாவாஸ்யா தேவதா, பூமியைச் சுற்றி வரும் சந்திரனைக் குறிப்பதல்ல. ஹ்ரீஸ்ச தே லக்ஷ்மீஸ்ச பத்ன்யௌ அஹோ ராத்ரே பார்ஸ்வே, நக்ஷத்ராணிரூபம் என்று உத்தர நாராயணத்தில் கூறியபடி பிரம்மனின் ரூபம் நக்ஷத்ரங்கள். அவன் சக்தியாக கிரியாசக்தி (லக்ஷ்மீ) பிரம்மாண்டத்தை ரூபங்களால் நிறைக்கிறது. இச்சாசக்தி (ஹ்ரீ) அந்த ரூபங்கள் தாங்கள் தனி வியக்தி என்ற அஞ்ஞான இருளால் சூழ்ந்து உலகை இயக்குகிறது).

"நவோ நவோ ... புவனஸ்ய கோபா:"

விடியற்காலையில் ஒளிவிடும் தோற்றத்துடன் புதிது புதிதாக நாள் தோன்றுகிறது. தேவர்களுக்கு அவர்களுக்கு உரிய பாகத்தை சந்திரன் வரும் வரை அளிக்கிறான் (யஜமானன்) இவ்வாறு நீண்ட ஆயுளைக் கடக்கிறான். எந்த சந்திரனை (மனதை) ஆதித்யர்கள் (அமிருதத்தால்) நிறைக்கின்றனர், அழியாத எதை அழியாத தேவர்கள் அருந்துகின்றனர். அதனால் எங்களை ராஜா வருணன் பிருஹஸ்பதி ஆகிய புவனத்தைக் காப்பவர்கள். செழிப் புடன் வாழச் செய்வார்களாக.

"யே விரூபே ... ஆகம ஏதம்"

எவர்கள் (நக்ஷத்ரங்கள்) ஒருமித்த மனத்துடன் பல விதமான ரூபங்களில் மாறி (சிருஷ்டியில்) தோன்றுபவர்கள், ஒரே மாதிரியாக சிருஷ்டியை அகண்டு நூற்பவர்கள், பலவிதமாய் உண்டாக்குபவர்கள், சிறந்தவற்றை உண்டாக்குபவர்கள், உண்டானவற்றில் உணர்வு ரூபமாக இருப்பவர்கள், சுற்றிலும் உள்ள அவர்களை அழைக்கிறேன். எங்களுடைய இந்த நக்ஷத்திரத்தில் செய்யும் இந்த யக்ஞத்திற்கு வருவார்களாக.

"வயம் தேவீ ... முக்த்யாகமேம"

நாங்கள், தேவீ பிரம்மனால் உணர்வு பெற்றவர்களாக, செல்வங்களை அருளும் தேவயக்ஞங்களை இயற்றுபவர் களாக, இரவும் பகலும் ஹவிஸால் யக்ஞத்தை வளர்த்துக் கொண்டு பாப புருஷனைக் கடந்து, முக்தியை அடைவோ மாக.

"பிரத்யுவத்ருஸ்யாயதீ ... பக்தேன கமேமஹி"

என்றும் இளமையாய் காணப்படுபவள். (பிருதிவி) வானத்திலிருந்து (தந்தையிடமிருந்து) சீரை எதிர்பார்க்கும் மகள் போல், பூமித் தாய் தன் கண்ணால் மழையை நோக்கி நிற்கிறாள். (மழையினால்) மகிழ்ந்துள்ள பூமித் தாய் இருளை ஒழித்து ஒளியை அளிக்கிறாள். காளை போல் சூர்யன் சஞ்சரிக்கிறான். அவன் ஒளிபொருந்திய நக்ஷத்ரம் போல் உதயமாயுள்ளான். பூமித் தாயே உன்னுடைய ஒளி சூர்யனுடைய ஒளியும் ஆகும். பக்தியுடன் உங்களை அடைவோமாக.

**"தன்னோ ... வீரவத்தமம்"**

அந்த (சூர்யன்) ஒளிவிடும் நக்ஷத்ரம், பிரகாசமும், (எரிக்கும்) தேஜஸும் கொண்டு மேலே செல்கிறது. இந்த யக்ஞத்திற்கும் உடன் வந்துள்ளது. சிறந்த நக்ஷத்ரமாகிய (சூர்ய) தேவனுக்கு, இந்திரனுக்கு சோமரசத்தை யக்ஞத்தில் அளிக்கிறோம். வீர்யம் மிகுந்தவர்களும், புஷ்டி உடையவர் களும் ஆகிய நல்ல பிரஜைகளை எங்களுக்கு அந்த சவிதா அருளட்டும்.

**"உதுத்யம் ... ஜகதஸ்தஸ்துஷஸ்ச"**

எல்லாவற்றையும் அறிந்தவனாகிய தேவனை கிரணங்கள் மேலே தாங்குகின்றன. அனைவரும் பார்க்கும் படியாக சூர்யனை (தாங்குகின்றன). தேவர்களுடைய முதல்வனாக ஒளிவிடும் சூர்யன் உதித்தான். மித்ரன், வருணன், அக்னி இவர்களுடைய கண், அசையும், அசையாப் பொருள்களின் ஆத்மாவாகிய சூர்யன், வானுலகம், அந்தரிக்ஷம், பூமி அனைத்தையும் காக்கிறார்.

**"அதிதிர்ந ... அதிதிம் சுப்ரணீதிம்"**

அதிதி எங்களைப் பாதுகாக்கட்டும். அதிதி அபயம் அளிக்கட்டும். அதிதி எங்களைப் பாபங்களிலிருந்து காக்கட்டும். எல்லா உலகங்களிலும் விரதங்களை அனுசரிப்பவர்களின் தாய், ருதத்தின் (பிரம்மத்தின்) பத்னி, வலிமையுடன் ஆள்பவள், மூப்பு இல்லாதவள், பரந்து உள்ளவள், நல்ல சரணாலயம், நன்கு வழிநடத்துபவளாகிய அதிதியை நாங்கள் சிறந்த ஹவிஸ்களால் ஆராதிக்கிறோம்.

**"இதம் விஷ்ணுர் ... புவனானிவிஸ்வா"**

எங்கும் வியாபிப்பவரான (விஷ்ணு) ஆதித்யன் இந்த சிதாகாசத்தை (தனது கிரணங்களால்) பரந்து சூழ்ந்தார். அவருடைய கிரணதுகள்கள் ஒன்றுசேர்ந்தவற்றை மூன்று பகுதிகளாகத் தாங்குகிறார். மலையில் சஞ்சரிக்கும் பயங்கரமான மிருகம் போன்ற வலிமை மிக்க விஷ்ணு அவருடைய பரந்த மூன்று வியாபகங்களில் சிருஷ்டிக்கப் பட்டிருக்கும் அனைத்து உலகங்களையும் வீர்யமாக செயல்பட ஸ்தூல ரூபங்களாக திரட்டினார்.

"அக்னிர் மூர்த்தா ... ஹவ்யவாஹம்"

மேலுள்ள தேவலோகத்திற்கு காளையின் திமில் போன்று சிறப்பளிப்பவர். இந்த பூமிக்கு பாதுகாவலன். ஆபஸ்களில் சிருஷ்டிக்கப்படும் ரேதஸ்களை (ஜீவர்கள்) உயிர்ப்பிப்பவர். யக்ஞங்களையும் செயல்களையும் எங்கே மங்களமான சக்திகளால் நடத்தும் தலைவன் அந்த வானத்தின் உச்சியில் தாங்குகிறாய். அக்னியே ஹவ்யத்தைத் தாங்கும் மங்களமான மழையை நாக்கினால் சிருஷ்டிக்கிறாய்.

"அனுனோ ... சிவாபி:"

இச்சாசக்தியாகிய அனுமதிதேவி இன்று எங்களுக்கு தேவர்களைக் குறித்த யக்ஞம் இயற்ற இச்சையை அருளுவாயாக. ஹவ்யவாஹனான அக்னியும் யக்ஞம் செய்பவர்களாகவே ஆகட்டும். அனுமதிதேவியே எங்களுடன் யக்ஞங்களை திறமையுடன், மன உத்வேகத்துடனும் செய்ய எங்களுக்கு மங்களம் அருள்வாயாக. எங்களுடைய ஆயுளையும் முழுவதாக அருள்வாயாக.

"ஹவ்யவாஹம் .. ஆயு:"

ஹவ்யத்தை தாங்கி செல்பவர், சத்ருக்களை வெல்பவர், ராக்ஷசர்களை அழிப்பவர், போர்களில் வெற்றி அடைபவர், ஒளியுடன் கூடியவர், பிரகாசிப்பவர், கொடையாளி, செய்யும் யக்ஞங்களைப் பூரணமாக்குபவராகிய அக்னியைத் துதிப்போமாக. அக்னியே, எது யக்ஞத்தில் அர்ப்பணிக்கப்படுகிறது, அதை முழுமையாகும்படி செய்வாயாக. தேவனே, எல்லா வாழ்க்கைப் போர்களையும் அழித்து, பரந்த நல்வழியை எங்களுக்குக் காட்டிக் கொண்டு பிரகாசிப்பாயாக. ஒளிமயமானவனே எங்களுக்கு நீண்ட ஆயுளை அருளுவாயாக.



## உபஹோமம்

"அக்னயே ஸ்வாஹா ... பிரதிஷ்டாயை ஸ்வாஹா"

1) அக்னிக்கு, கிருத்திகைகளுக்கு அன்னைக்கு, ஆட்டுவிப்பவளுக்கு, வியாபிப்பவளுக்கு, தாங்குபவளுக்கு, மேகமாய் இருப்பவளுக்கு, நீர் பொழிபவளுக்கு, வாயுவாய் இருப்பவளுக்கு ஸ்வாஹா.

2) பிரஜாபதிக்கு, ரோஹிணிக்கு, ஒளி வீசுபவளுக்கு, பிரஜைகளுக்கு ஸ்வாஹா.

3) சோமனுக்கு, மிருகசீர்ஷத்திற்கு, சாமன்களுக்கு, ஓஷதிகளுக்கு, ராஜ்யத்திற்கு; வெற்றி உடையவளுக்கு ஸ்வாஹா.

4) ருத்ரனுக்கு, ஆர்த்ராவுக்கு, பல்கிப் பெருகியுள்ளவளுக்கு, பசுக்களுக்கு ஸ்வாஹா.

5) அதிதிக்கு, புனர்வசுக்களுக்கு, செழிப்பானவர்களுக்கு, பிரஜைகளை உற்பத்தி செய்யும் சக்தியுள்ளவளுக்கு ஸ்வாஹா.

6) பிருஹஸ்பதிக்கு, திஷ்ய நக்ஷத்ரத்துக்கு, பிரஹ்மவர்ச்சஸுக்கு ஸ்வாஹா.

7) சர்ப்பங்களுக்கு, ஆச்ரேஷாக்களுக்கு, குரூரமானவற்றுக்கு ஸ்வாஹா.

8) பித்ருக்களுக்கு, மகாக்களுக்கு, ஓஷதிகளுக்கு, வாக்யங்களுக்கு ஸ்வாஹா.

9) அருந்ததிகளுக்கு, அர்யமணனுக்கு, பல்குனிகளுக்கு ஸ்வாஹா.

10) பசுக்களுக்கு, பகனுக்கு, பல்குனிகளுக்கு ஸ்வாஹா.

11) சிரேஷ்டமானவற்றை உடையவனுக்கு, சவிதாவுக்கு, ஹஸ்த நக்ஷத்ரத்துக்கு, கொடுப்பவனுக்கு, காப்பவனுக்கு, சிறந்த அருள்புரிவனுக்கு, கை கொடுப்பவனுக்கு ஸ்வாஹா.

12) த்வஷ்டாவுக்கு, சித்ரா நக்ஷத்ரத்திற்கு, சித்ரையின் புத்ரனுக்கு, பிரஜைகளுக்கு ஸ்வாஹா.

13) வாயுவுக்கு, நிஷ்ட்யா(ஸ்வாதீ)வுக்கு, விரும்பியபடி செல்பவனுக்கு, வெற்றி உடையவனுக்கு ஸ்வாஹா.

14) இந்த்ராக்னிகளுக்கு, விசாகாக்களுக்கு, சிரேஷ்டமானவற்றை உடையவனுக்கு, வெற்றி உடையவனுக்கு ஸ்வாஹா.

15) பௌர்ணமாசிக்கு, விருப்பத்திற்கு, ஸ்திரமாய் உள்ளவளுக்கு ஸ்வாஹா.

16) மித்ரனுக்கு, அனுராதா நக்ஷத்ரங்களுக்கு, நட்பின் இலக்கணத்துக்கு, வெற்றி உடையவனுக்கு ஸ்வாஹா.

17) இந்த்ரனுக்கு, ஜ்யேஷ்டாவுக்கு, ஜ்யேஷ்டாவின் புத்ரனுக்கு, வெற்றிஉடையவனுக்கு ஸ்வாஹா.

18) பிரஜாபதிக்கு, மூலத்துக்கு, பிரஜைகளுக்கு ஸ்வாஹா.

19) ஆபஸ்களுக்கு, அஷாடாக்களுக்கு சமுத்ரத்துக்கு, காமத்துக்கு வெற்றி உடையவனுக்கு ஸ்வாஹா.

20) விஸ்வே தேவர்களுக்கு, அஷாடாக்களுக்கு, தோல்வி இல்லாதவளுக்கு, வெல்லப்படாதவளுக்கு ஸ்வாஹா.

21) பிரம்மாவுக்கு, அபிஜித்துக்கு, பிரஹ்ம லோகத்திற்கு. வெற்றி உள்ளவனுக்கு ஸ்வாஹா.

22) விஷ்ணுவிற்கு, ஸ்ரோணாவுக்கு, ஸ்லோகத்திற்கு, ஸ்ருதிக்கு ஸ்வாஹா.

23) வசுக்களுக்கு, ஸ்ரவிஷ்டாவுக்கு, முதன்மையானவனுக்கு, வட்டமாக சுற்றிவருபவனுக்கு ஸ்வாஹா.

24) வருணனுக்கு, சதபிஷக்குக்கு, மருந்துகளுக்கு ஸ்வாஹா.

25) அஜ ஏகபாதனுக்கு, புரோஷ்டபதாக்களுக்கு தீக்ஷ்ணமானவனுக்கு, பிரஹ்மவர்ச்சஸுக்கு ஸ்வாஹா.

26) அஹிர்புத்னியனுக்கு, புரோஷ்டபதாக்களுக்கு, பிரதிஷ்டை செய்யப்பட்டவனுக்கு ஸ்வாஹா.

27) பூஷ்ணனுக்கு, ரேவதிக்கு, பசுக்களுக்கு, ஸ்வாஹா.

28) அஸ்வினிக்கு, சேணம் கட்டிய குதிரையுடையவர்களுக்கு, செவிக்கு ஸ்ருதிக்கு ஸ்வாஹா.

29) யமனுக்கு, அபபரணீக்களுக்கு, ராஜ்யத்துக்கு, வெற்றி உடையவனுக்கு ஸ்வாஹா.

*30) அமாவாஸ்யைக்கு, காமத்துக்கு, பிரதிஷ்டை செய்யப்பட்டவளுக்கு ஸ்வாஹா.*

*31) சந்திரனுக்கு, நன்கு தெரிபவனுக்கு ஸ்வாஹா.*

*32) பகல் இரவு, அரை மாதம் (திதி மாதம்), ருதுக்களுக்கு சம்வத்சரத்துக்கு, பகலுக்கு, இரவுக்கு, முடிவான முக்திக்கு ஸ்வாஹா.*

*33) விடிவெள்ளிக்கு, எரிபவள், உஷ்ணமாயிருப்பவள், மேலே எழுபவள், எரிக்கப்பட்டவள் ஆகியவளுக்கு ஸ்வாஹா.*

*34) நக்ஷத்ரத்திற்கு, உதிக்கப்போவதற்கு, உதிப்பதற்கு உதித்ததற்கு, கொண்டு செல்வதற்கு தாங்கி செல்பவதற்கு பிரகாசத்திற்கு, தீஷ்ணத்திற்கு, தபஸுக்கு, பிரஹ்ம வர்ச்சஸுக்கு, சூர்யனுக்கு நக்ஷத்ரங்களுக்கு, பிரதிஷ்டையாயிருப்பவனுக்கு, அதிதிக்கு, பிரதிஷ்டையாயிருப்பவனுக்கு விஷ்ணுவிற்கு, யக்ஞத்திற்கு, பிரதிஷ்டையாயிருப்பவனுக்கு ஸ்வாஹா.*

**"ததிக்ராவ்ணோ ... ஆபோஹிஷ்டா .. சந:"**

*வெற்றி உடையவருடைய, அஸ்வம் போன்ற சக்தி உடையவருடைய, ததிக்ராவன் என்ற காலை சூர்யனின் துதியைச் செய்கிறேன். எங்களுக்கு நன்னெறி கொண்ட வழியை அருள்வாராக, எங்களுக்கு நீண்ட ஆயுளில் கடந்து செல்ல உதவுவாராக.*

*ஆபோ தேவதைகளே, இன்பத்தைக் கொடுப்பவர்களாக இருக்கிறீர்கள். அந்த நீங்கள் எங்களுக்கு பலத்தையும் வீர்யத்தையும் கொடுத்துப் போஷிப்பீர்களாக. எது சிறந்த மங்களமான ரசமோ அதை எங்களுக்கு தாய், குழந்தைகளுக்கு கொடுப்பது போல் அருளுங்கள்.*

*உங்களுடைய எந்த ரசத்திற்காக எங்களைத் தூண்டுகிறீர்களோ அதை நாங்கள் அடைவோமாக. ஆபோதேவிகளே எங்களை அவ்வாறு பிறப்பியுங்கள்.*

**"ஹிரண்ய வர்ணா ... நிதத்த"**

*பக்கம் "185" பார்க்க*

**"பவமான: சுவர்ஜன: ... மோர்ஜயன்த்யா புனாது"**

*சுவர்க்கத்தின் ஜனங்களாகிய தேவர்கள் புனிதமானவர்கள். புனிதத்தால் செயல்படுபவர்கள். எவர்*

புனிதப்படுத்துபவரோ அவர் என்னைப் புனிதப் படுத்தட்டும். தேவ ஜனங்கள் என்னை புனிதமாக்கட்டும் மனதும், புத்தியும் புனிதமாக்கட்டும். எல்லா உயிர்களும் என்னை புனிதமாக்கட்டும். ஜாத வேதஸ் புனிதமே உருவானவன். புனிதத்தால் என்னைப் புனிதமாக்கட்டும். வெண்மையான தேவ ஒளி எது. அக்னியே யக்ஞங் களையும், நல்ல எண்ணங்களையும் கொடுப்பவன். எது உன்னுடைய புனிதமான கிரணங்களோ அவற்றை அக்னியே, எங்களுள் பரப்புவாயாக. அந்த வேத மந்த்ரத்தால் நாங்கள் புனிதமடைவோமாக. சவித்ரு தேவனுடைய புனிதம், யக்ஞம் இரண்டினாலும் இந்த வேத மந்த்ரத்தால் புனிதமாகிறோம். வைஸ்வதேவி, புனிதப் படுத்துபவள் இங்கு வரட்டும். எவளுடைய மிகுந்த நேர் முதுகுள்ள மனித சரீரங்கள். அவளால் பலவிதமாக மகிழ்வோமாக. மங்களமான செல்வங்கள் அடையும் வழியில் நாம் இருப்போமாக. வைஸ்வானரன் தனது கதிர்களால் என்னைப் புனிதமாக்கட்டும். காற்று இதம் தரும், இன்பம் பயக்கும் பிராணனால் வானம், பூமியை மழையினால், ரசங்களால் ருதத்தின் வழியில் யக்ஞங் களால் என்னைப் புனிதப்படுத்தட்டும். அக்னியே, நல்லவற்றால் என்னைப் புனிதப்படுத்தட்டும். எதனால் தேவர் புனிதப்படுத்தினர். வானத்தில் செல்லும் எந்த நீரோ, அந்த தெய்வீகமான பிரம்மத்தால் இந்த பிரம்மத்தைப் புனிதப்படுத்துகிறேன். யார் பாவமான சூக்தத்தை ரிஷி களால் சேகரிக்கப்பட்ட ரசத்தை அத்யயனம் செய் கிறானோ, ரிஷிகளால் சேகரிக்கப்பட்ட எல்லாவற்றிலும் அவன் புனிதத்தை அடைகிறான். நன்கு அறிந்து மாதரிஸ்வா(வாயு)வால் இயற்றப்பட்ட ரிஷிகளால் சேகரிக்கப்பட்ட ரசமாகிய பாவமானீ சூக்தத்தை எவன் அத்யயனம் செய்கிறானோ, அவனுக்கு சரஸ்வதி க்ஷீரம், கரும்பு ரசம், மது, உதகம் முதலியவற்றை அருளுகிறாள், பாவமாணீ மங்கள வழியில் அழைத்துச் செல்பவள். இனிமை மிகுந்து நன்கு அருளப்பட்டவள். ரிஷிகளால் சேகரிக்கப்பட்ட ரசம். பிராம்மணங்களில் அமிருதம் போன்றது, இதம் தரக்கூடியது. பாவமானீ சூக்தம் எங்களுக்கு வழிகாட்டி அருளட்டும். இந்த லோகத்தையும்

அந்த லோகத்தையும், எங்களுடைய காமங்களை பூர்த்தி செய்யட்டும்.

தேவீகள், தேவர்கள் உறைந்துள்ளது, பாவமானீ சூக்தம் மங்கள வழியில் அழைத்துச் செல்வது, ஞானத்தால் நிறைக்கப்பட்டு நன்கு அருளப்பட்டது. ரிஷிகளால் சேகரிக்கப்பட்ட ரசம், பிராம்மணங்களில் அமிருதம் போன்றது. இதம் நல்குவது. எதனால் தேவர்கள் பவித்ரமான சூக்தத்தால் ஆத்மாவை எப்பொழுதும் புனிதப்படுத்திக் கொள்கிறார்களோ அந்த சஹஸ்ர தாரையால் பாவமான்ய: என்னைப் புனிதப்படுத்தட்டும். பிரஜாபதியினுடையதும், புனிதமானதும், நூற்றுக் கணக்கான பிணைக்கப்பட்ட சரடுகள் போன்றதும், ஹிரண்மயமானதும் ஆன அதனால் நாம் பிரம்மனை அறிந்தவர்களாகிறோம். புனிதமான பிரம்மத்தால் புனிதமடைகிறோம். இந்த்ரன் சுநீதியுடன்கூட என்னை புனிதமாக்கட்டும். சோமன் ஸ்வஸ்தியுடன், வருணன் சமீசியுடன், ராஜாயமன் அழிக்கும் சக்திகளுடன் என்னை புனிதப்படுத்தட்டும். ஜாதவேதஸ் ஊர்ஜயந்தியுடன் என்னைப் புனிதப்படுத்தட்டும்.

**"பூர்பூவஸ்ஸுவ: தச்சம்யோ ... சாந்தி:"**

சரீரம், செயல் மனம், அந்த பிரம்மனை இவ்வுலக, பரஉலக நன்மைகளை யக்ஞத்தை அடையவும், யக்ஞபதியாகிய அக்னியை அடையவும், வேண்டுகிறோம். தெய்வ சக்திகள் எங்களுக்கு மங்களத்தை அருளட்டும். மனிதர்களுக்கு மங்களம். மேல் நோக்கி ஒஷதிகள் வளரட்டும். இரு கால்களுடைய எங்களுக்கு நன்மை உண்டாகட்டும். நாற்கால் பிராணிகளுக்கு நன்மை (உண்டாகட்டும்)

ஓம் சாந்தி: (சரீரம்); ஓம் சாந்தி: (செயல்); ஓம் சாந்தி: (மனம்).

**"நமோ ப்ரஹ்மணே ... சாந்தி:"**

வேதத்திற்கு நமஸ்காரம். அக்னிக்கு நமஸ்காரம் இருக்கட்டும். பூமிக்கு நமஸ்காரம். ஒஷதிகளுக்கு நமஸ்காரம், வாக்கிற்கு நமஸ்காரம், வாசஸ்பதிக்கு நமஸ்காரம், விஷ்ணுவிற்கு நமஸ்காரம், பெருகச்

செய்கிறேன் (வேதத்தை அத்யயனம் செய்வதன் மூலம்). ஓம் சாந்தி: (அதிபூதம்) ஓம் சாந்தி: (அதிதைவம்) ஓம் சாந்தி: (அத்யாத்மம்)

**(உதகசாந்தி முற்றியது)**



# ஆயுஷ்ய ஸூக்தம்

**"யோப்ரஹ்மா ... மஹயா ஸஸ்வத்"**

பினாகவில்லை தரித்தவரும், தோலை ஆடையாக உடுத்தியவரும் ஆகிய எந்த பிரம்மா பிரம்மனுக்கு சிரசில் பிராணனை அளித்தாரோ, அந்த ஈசான தேவர் எங்களுக்கு ஆயுளைத் தரட்டும். அவருக்கு நெய்யினாலாகிய (வேத மந்த்ரங்களால்) ஹவிஸ்ஸினால் ஹோமம் செய்கிறேன்.

பிரகாசிப்பவனும், சரீரத்தின் மத்தியில் ஒளிர் விடுபவனும், வெப்பத்தில் விருப்பம் உடையவனும். ஆன எவர் (அக்னி) வரட்டும். அவர் கோரமான மிருத்யு பாசத்தை அழித்து இங்கு ஆயுஸ்ஸுடன் கிருதத்தை தேவன் அருந்துவாராக.

பிரஹ்மஜ்யோதி, பிரம்மபத்னிகளில் கர்ப்பம், பல ரூபங்கள் கொண்ட ஜயந்தனாகிய குமாரனை எவர் அளித்தாரோ, அந்த சுவர்ண நிற கிரஹங்களின் அர்ச்சிக்கத்தகுந்த சூர்யன் போன்ற குமாரனை, அவரை ஆயுளுடன் கூடியவர்களாக, கிருதத்தினால் வளரச் செய்கிறோம்.

முதலில் ஒன்றாகவும், எது இந்த சிருஷ்டியாக ஆனதோ, எங்கிருந்து புவனத்தின் பாதுகாவலர்கள் உண்டாயினரோ, எவரிடம் பெரிய துன்பம் நேரிடும்போது போய் சரணாகதி அடைகிறார்களோ, அந்த தேவன் எங்கள் ஆயுஷ்யக்ஞத்தில் கிருதத்தால் ஆகிய ஹவிஸ்களை அருந்தட்டும். வசுக்களையும் ருத்ரர்களையும், மருத்களை யும், பின் சாத்யர்களையும், ரிஷிக்களை, யக்ஷர்களை, கந்தர்வர்களையும் பித்ருக்களையும் எல்லோரையும், பிருகுக்களை, சர்ப்பங்களையும் அங்கிரஸ்கள் பின்னர்

எல்லோரையும் கிருதத்தை ஹோமம் செய்து எங்களுடைய ஆயுளால் சந்ததமும் பெருமைப்படுத்துவோமாக.

**"விஷ்ணோ ... துஹ்ரதே அக்ஷிதம்"**

விஷ்ணுவே, வெற்றிகொள்பவரே, நீ எங்களுக்கு அனைத்துக்கும் மேலான சுகத்தை அருள்வாயாக. உரத்த குரலில் உன்னுடைய தாரைகளாகப் பெருகும் உன் வேதத்துதிகளைப் பாடி அழியாப்பதத்தை (ஜனங்கள்) அடைகின்றனர்.

**"ஆபிர்கீர்பி ... மாஹாசீத்"**

அருள் நல்கும் குறையில்லாத வேதத்தை அடைந்து யார் அதை (அத்யயனத்தால்) மிகவும் வளர்ப்பவராக (இருக்கும்) எவர்களுக்கு பூமியில் பிறவியை அழிப்பவராக இருக்கிறாய், அதனால் உன்னிடமிருந்து அருளைப் பெறுபவர்களாக இருப்போமாக. வேதத்தை ஓதுகிறோம். அது எங்களுக்கு சிறந்ததாகவும் பெருமை சேர்ப்பதாகவும் உள்ளது.

**ஓம் தத்சத் பிரஹ்மார்ப்பணமஸ்து.**

தைத்ரீய சம்ஹிதையின்
முதல் நான்கு பிரஸ்னங்கள்,
ருத்ரம், புருஷ சூக்தம்,
உதக சாந்தி மந்த்ரங்களின்
தமிழ் பொழிப்புரை
ஆராய்ச்சிக் கருத்துகளுடன்
வழங்கப்பட்டுள்ளது.

இந்த நூலின் ஆசிரியர் பாலசுப்பிரமணியன் மின்பொறி இயலில் பி.ஈ. பட்டமும், எம்.எஸ்சி. பட்டமும் பெற்று மின்வாரியம், நெய்வேலி லிக்னைட், கிண்டி பொறியியல் கல்லூரி இவற்றில் சிலகாலம் பணிபுரிந்தபின் இங்கிலீஷ் எலக்ட்ரிக் கம்பனியில் என்ஜினியராகவும், 37 ஆண்டு பணியில் கடைசி 8 ஆண்டுகள் இங்கிலீஷ் எலக்ட்ரிக் கம்பனி, ஜி.ஈ.சி., ஜி.ஈ.சி. ஆல்ஸ்தாம் கம்பனிகளில் மானேஜிங் டைரக்டராகவும் பணி புரிந்து 1996−ல் 60ஆவது வயதில் ஓய்வு பெற்றார். ஓய்வு பெற்ற பின் தமிழ், சம்ஸ்கிருத நூல்களைப் படிப்பதிலும், ஆராய்வதிலும் ஈடுபட்டுள்ளார்.

தற்பொழுது பெங்களூரில் மனைவி, இரண்டாவது மகன் சுப்ரமணியன் உடன் வசித்து வருகிறார்.

